


# பக்கீர்மோகன் சேனுபதி

மாயாதர் மான்சின்ஹா



இந்திய இலக்கியச் சிற்பிகள்

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பக்கீர்மோகன் சேனபதி

ஆங்கில மூலம்:

மாயாதர் மான்சின்ஹா

தமிழாக்கம்:

க. சி. கமலையா



சாகித்திய அக்காதெமி

*Fakirmohan Senapati*—Tamil translation by K. C. Kamaliah of Mayadhar Mansinha's English monograph, Sahitya Akademi, New Delhi (1985) Rs. 4.

© Mayadhar Mansinha
© Tamil translation: Sahitya Akademi
First Published: 1985

சாகித்திய அக்காதெமி

*தலைமை அலுவலகம்:*

*ரவீந்திரபவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001*

*கிளை அலுவலகங்கள்:*

*29, எல்டாம்ஸ் சாலை, தேனும்பேட்டை, சென்னை 600 018*

*பிளாக் V–B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029*

*172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,*
*தாதர், பம்பாய் 400 014*

ரூ. 4.

*அச்சிட்டோர்: டயோசிசன் அச்சகம், சென்னை 600 007*

## உள்ளுறை

# முன்னுரை

பக்கீர்மோகன் சேனுபதியின் வாழ்க்கை வரலாறு பற்றிச் சிறந்த நூல் இல்லாவிடினும் ஒரு பயனுள்ள நூல் ஒரிய மொழியில் கூட இதுவரை வரவில்லை. அத்தகைய முயற்சியில் எவரும் ஈடு படாதிருக்க அம்மொழியில் அவர் திறமையுடன் எழுதிய சுய சரிதம் ஓரளவு காரணமாயிருக்கலாம். ஆனுல் ஐயப்பாடு ஏது மில்லா அம் மேதையின் சுயசரிதம் தெரிவிப்பதைக் கொண்டு அவரைப் ' பற்றியோ அன்றி அவர் குறிப்பிடும் மனிதர்கள்—செய்திகள் பற்றியோ அச்சரிதம் முழுத் தகவலேயும் அளிக்கிறது என்று கொள்ளமுடியாது. அனேத்துக்கும் மேலாகப் படிப் போர்க்கு என்று செம்மையாக எழுதப்படும் வாழ்க்கை வரலாற்று நூல் வழங்கும் முழுமை உணர்ச்சியையோ முழு உருவப் படைப் பையோ சுயசரிதத்தில் ஒரு பொழுதும் எதிர்பார்க்க முடியாது. எனவே, சாகித்திய அக்காதெமியின் ஆதரவில் வெளிவரும் இச் சிறிய ஆங்கில நூலேப் பணிவுடன் வரைந்த முன்னேடி எனக் கொள்ளலாம். பக்கீர்மோகனுடைய இலக்கிய—மனிதப் பண்பு விளங்கும் கருத்தோவியம் பற்றி அவரும் பிறரும் அளிக்கும் தகவல் களேக்கொண்டு கூடுமானவரை விருப்பு வெறுப்பின்றிக் கையாண்ட முயற்சியாகும், இந்நூல்.

1956-ஆம் ஆண்டில் பாலேசுவர் பக்கீர்மோகன் சாகித்திய பரிஷத் (இலக்கியக் கழகம்) கொணர்ந்த நினேவு மலரில் பக்கீர் மோகன் பற்றிய அரிய தகவல் கிடைக்கிறது. அச் சிறந்த நாவலா சிரியரை நேரில் அறிந்தோரின் பழைய நினேவுகள் அதில் அடங்கி யுள்ளன. என்ருலும் ஒரிய மொழியில் சேனுபதி பற்றிய ஆய்வு களில் புகழஞ்சலிக்குத் தகுதியானவர் ஒருவர் உளரென்ருல் நான் சிறிதும் தயக்கமின்றி டாக்டர் சாமந்தராயைத்தான் குறிப்பிடு வேன். தொடரும் பக்கங்கள் சாமந்தராயின் ஆய்வுகளுக்கும் முன்னர் குறிப்பிட்ட மலருக்கும் குறிப்பிடத்தக்க அளவில் கடப் பாடுடையன.

ஒரிசா வெளியீட்டு நிறுவனமான கட்டாக் மாணவ ஸ்டோரின் உரிமையாளர் திரு. அனந்த மிஸ்ரா, பக்கீர்மோகனுடைய நூல்களனேத்தையும் திரட்டிச் சீரிய பதிப்பொன்றை வெளி யிட்டார். பக்கீர்மோகனுடைய மகன் மோகினி மோகன் நேர்மையின்றிக் களேந்துவிட்ட வேண்டப்படாத பகுதிகளேயும் உள் ளடக்கிய பதிப்பாகும் அச் சுயசரிதம். எனவே திரு. மிஸ்ரா உளங் கனிந்த பாராட்டுக்குரியவர். மெய்ம்மைப் பேரறிவாளர்பற்றிய இச் சிற்றுரையை நான் எழுதத் தொடங்கியபோது கட்டாக்கின் மற்ருெரு வெளியீட்டு நிறுவனமான கிரந்த மந்திரத்தின் உரிமை யாளர் திரு. ஸ்ரீதர் மகாபத்ரா பக்கீர்மோகன் பற்றிய வெளியீடு களனேத்தையும் கொடுத்துதவினுர். அவருக்கு என்னுடைய நன்றி உரியது. திரு. அனந்த மிஸ்ராவும் என்னுடைய தனிப்பட்ட நன்றிக்கு உரியவர்.

—மாயாதர் மான்சின்ஹா

# 1. மல்லிகாசப்பூர் மல்லர்கள்

பக்கீர்மோகன் புகழ் மணம் பரப்பும் பழமையான போர்த் தொழிலை மேற்கொண்ட ஒரிசாவின் பாயிக் கண்டாயத்து வகுப்புகளைச் சேர்ந்தவர். அவ்வகுப்பினர் சுதந்திர ஹிந்து மன்னரின் கீழ்ப் பணிபுரிந்தனர். இன்றும் அவர்கள், மல்லர், சிம்மர், புஜபலர், பலியசிம்மர், சத்துருசலர், தளபேகரர் (குழுத் தலைவர்) என்ற காலங் கடந்துவிட்ட பெருமைக்குரிய பெயர்களைக் கொண்டுள்ளார்கள்.

## சேனுபதிகள்

பக்கீர்மோகன் சேனுபதியின் மூதாதையர் தொடக்கத்தில் மல்லர்களே. கட்டாக் மாவட்டத்துக் கேந்திரப்பராம் பகுதியிலிருந்து பாலேசுவர் புறநகர் வட்டாரத்தில் மல்லிகாசப்பூர் என்ற சிற்றூருக்குக் குடியேறிச் சேனுபதிகளானூர்கள் என்ற செய்தி சுவை பயப்பதாகும். பக்கீர்மோகனின் ஐந்தாவது மூதாதையரான ஹனுமல்லர் கேந்திரப்பராவில் கணிசமான நில மானியத்தை வழி வழியாக ஆண்டனுபவித்தார். ஏதோ கேட்டின் விளைவால் தன் சொத்துக்களை இழந்து இறுதியில் பிழைப்புக்குப் போர்த்தொழிலை நாடத் துணிந்தார். சிவாஜியின் பாட்டனும் தந்தையும் அகமத்நகர்—பீஜப்பூர் முஸ்லிம் அரசர்களின்கீழ்ப் பணிபுரியச் சென்றது போன்று தன்னுடைய குடும்ப கௌரவத்தையும் அந்தஸ்தையும் மீட்பதற்கு நாட்டைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் மராட்டியரின்கீழ் வேலை தேடுவதென்ற ஒரே வழிதான் அவருக்குத் தோன்றியது. தன்னுடைய நல்லொழுக்கத்தினுல் படிப்படியாக அவர் உச்சியைச் சென்றடைந்தார். வங்காள—ஒரிசா எல்லையிலுள்ள இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த கோட்டையின் முழுப் பொறுப்பையும் ஹனுமல்லரிடம் ஒப்படைக்கப்படும் அளவுக்கு ஒரிசாவின் மராட்டிய கவர்னரின் நம்பிக்கைக்கு அவர் பாத்திரரானுர். சேனுபதி என்ற கவர்ச்சிமிக்க பட்டத்தையும் அவர் பெற்ருர். எனவே ஹனுமல்லர் காலத்திலிருந்து மக்கள் மல்லிகாசப்பூர் மல்லர்களைச் சேனுபதிகள் என்றே அறிந்தனர். எனினும் சமயச் சடங்குகளில் அவர்கள் குடும்பம் இன்னும் மல்லர் என்ற பழைய வகுப்புப் பெயரையே பயன்படுத்துகிறது.

பக்கீர்மோகனுடைய பாட்டி

ஹனுமல்லரின் மூன்ருவது தலைமுறை வழித் தோன்றல், குசமல்லன் 1803-ஆம் ஆண்டில் பிரிட்டிஷார் மராட்டியரிட மிருந்து ஒரிசாவைக் கைப்பற்றுவதற்கு முன்னரே இளமையில் இள மனைவியையும் இரு சிறுவர்களையும் விட்டு இறந்துபோனுன்.

இளம் விதவை குசிலா தேய்யின் கோட்பாடுகள் பக்கீர்மோகன் நெஞ்சில் ஆழமாகப் பதிந்தன. தன்னலமற்ற இத்தெய்வ மாதின் சாயல் பக்கீர்மோகன் எழுத்துப் படைப்புகள் அனைத்திலும் வண்ணக் கோலமிடுவதைக் காணலாம். ஆனுல் அவர் தம் சுய சரிதத்தில், குசிலா தேய்யின் பரிவுக்குரிய வெள்ளை உள்ளம் இரண்டாம் தடவையாகப் பாலேசுவர் மாவட்டத்தில் வழிவழி வந்த நிலங்களை இழந்த கதையை விண்டுரைக்கிருர்.

குசிலா தேய்யின் குழந்தைகளான புருஷோத்தம், இலட்சுமண் சரண் என்ற இருவரும் தந்தையை இழந்தனர். அவர்களுள் 1843-ஆம் ஆண்டு ஜனவரியில் பிறந்த பக்கீர்மோகன் என்ற மேதை யின் தந்தை என்ற பெருமை, இளையவனுன இலட்சுமண் சரணைச் சாரும். ஆனுல் பூரிக்குத் திருத்தலப் பயணம் மேற்கொண்டு திரும்பும் வழியில் அதிர்ஷ்டம் கெட்ட இலட்சுமண் சரண் புவனேசு வரத்தில் கொள்ளை நோய்க்கு இரையாகி மிகவும் இள வயதிலேயே இறந்துபோனுன். அந்த அவல வேளையில் பக்கீர்மோகனுடைய வயது ஓராண்டும் ஐந்து மாதங்களும்.

அதிர்ச்சிக்காளான பக்கீர்மோகனுடைய இளமைப் பருவ அன்னை துயரம் தாங்காமல் படுத்த படுக்கையாகிவிட்டாள். கைம்மை அவலம் நீடிக்காது ஓராண்டு கழிந்த சிறிது காலத்துக் குள்ளேயே சாவு அவளுக்கு விடுதலையளித்தது. அப்பொழுது அதிர்ஷ்டமில்லா அக்குழந்தையின் ஆதரவும் அடைக்கலமும் ஆனவள் பாட்டியான குசிலா தேய். அவளும் ஓர் உதவியில்லாக் கைம்பெண் தானே!

## 2. வறுமையில் வாடிய குழந்தை

வரி ஏதுமின்றி ஆண்டனுபவித்த பெரும்பரப்பு நிலங்களை இழந்ததுமே பணக்கார மேட்டுக்குடி மல்லிகாசப்பூர் மல்லர்கள் திடீ ரென்று ஏழைக் குடிமக்களாகி விட்டார்கள். இளங் கைம் பெண்ணுன குசிலா தேய் இரண்டு அனுதை மல்லர்ச் சிருர்களை வளர்த்துவிட்டதைப் பற்றி நாம் அறியோம். ஆனுல் வாழ்க்கை

யில் கடமைப் பொறுப்புக்களை உணர்ந்த அம் மாது அதை ஓர் அறை கூவலாக ஏற்றுக்கொண்டாள் என்றே நாம் கொள்ளலாம். இரண்டு பையன்களையும் வளர்த்துவிட்டதோடு மட்டுமன்றி இளமைப் பருவத்தில் அவர்களுக்கு மணமும் புரிவித்தாள். பெரிய வர்களான அவளுடைய இரண்டு வல்லாள மகன்களுக்குத் தொலை வில் நல்ல வருவாய். அருகே வீட்டில் இரண்டு மருமகள்கள் அவளுடைய ஏவலுக்குக் காத்திருந்தனர். நீண்டகாலத் துன்ப வாழ்க்கையில் இதைக் கண்ட அம் மூதாட்டி கொஞ்ச காலமாவது மகிழ்ந்திருந்தாள் எனலாம். கருணையுள்ளம் படைத்த அப் பெண்மணி தன்னுடைய நெடிய வாழ்க்கையில் இந்தச் சொற்ப இன்பத்தையும் நுகரக் கொடுத்து வைக்கவில்லை என்று தோன்று கிறது. கூற்றுவன் அவளுடைய இளைய மகனையும் அவர் மனைவியை யும் ஒருவர்பின்னொருவராகக் கொண்டு போய்விட்டான். துயரில் உழலும் ஒரு கைம்பெண்ணை அவளுடைய துயரம் மேலும் பெரு கிற்று. அவளுடைய இளைய மகன் விட்டுச் சென்ற பேரக் குழந்தை யிடம் வைத்திருந்த ஆழமான பற்று இக்கடுமையான அதிர்ச்சி யைத் தாங்கிக்கொள்ள உதவியதுபோலும். பிற்காலத்தில் பக்கீர் மோகன் சேனபதி என்று உலவிய இந்தத் துரதிர்ஷ்ட நோஞ்சான் குழந்தை ஒரு நாட்டின் இலக்கியம் துளிர்க்கக் கருவியாயிற்று.

பிணிவாய்ப்பட்டவர்களுக்குப் பணிபுரியும் தெய்வம்

சூதுவாதற்ற—எழுத்தறிவில்லாப் பாட்டியின் நினைவாஞ்சலி யாக நேர்முகமாய்த் தம்முடைய சுயசரிதத்திலும் மறைமுகமாய்த் தாம் எழுதிய கதைகளிலும் பக்கீர்மோகன் உணர்ச்சி வெள்ளமாய் வாரி வழங்கும் வரைவிலா நன்றிப்பெருக்கு அவற்றைப் படிப் போரின் நெஞ்சங்களை நெகிழச்செய்யும். பெண்மையின் உண்மை உயர்வு எங்குளது என்பதையும் அது அரண் செய்யும்.

அவர் சொல்வதாவது:

"என்னுடைய பெற்றோர் காலமான பிறகு ஏழெட் டாண்டுகள் சங்கிலித் தொடர்பாய் வயிற்றுப் போக்கு, வயிற்றுளைச் சல், மூலமுளை ஆகியவை போன்ற இன்னல் நோய்களுக்குள்ளாகித் துயருற்றேன்; நாளெல்லாம் படுத்த படுக்கையாகிவிட்டேன். ஆனால் இரவு பகலாய்ப் பாட்டி இடைவிடாது என்னருகிலிருந்தது நினைவிருக்கிறது. நாள்கள் கழிந்தன; வாரங்கள் ஓடின; மாதங்கள் சென்றன; ஏன், ஆண்டுகளும் தான். ஆனால் உறக்கத்தையும் பசியையும் முழுவதும் மறந்து ஒருநாள்கூடத் தவறாது முழு நேர மும் என்னருகில் விடாப்பிடியாய் அருமைப் பாட்டி விழித்திருந் தாள். என்னைக் கைப்பற்றக் கூற்றுவனொருபுறமும் பாட்டி மறு புறமும் கயிற்றிழுவைப் போட்டியில் ஈடுபட்டிருந்ததுபோல அது

தோன்றியது. ஒரு மட்டும் இறுதி வெற்றி என் பாட்டிக்கே. நானும் நோய் தீர்ந்து உடல் தேறலானேன்.''

**வி(பி) ரஜமோகன் பக்கீர்மோகன் ஆனது**

''என்னுடைய நீடித்த அவலங்களின்போது உலகில் உலவுவதாகக் கருதப்படும் எல்லா ஆண்—பெண் தெய்வங்களையும் என்னைக் காப்பாற்றுமாறு கெஞ்சுவது பாட்டிக்கு வழக்கமாகிவிட்டது. துன்பத்திலுழலும் மக்களின் வேண்டுகோள்களை நிறைவேற்றும் கண்காணு—வலிமை வாய்ந்தவர் என்று கருதப்பட்ட இரண்டு முஸ்லிம் பீர்கள் அக்காலத்தில் பாலேசுவரில் இருந்தனர். பாலேசுவரைச் சுற்றியுள்ள ஆண்—பெண் தெய்வங்களின் அருள் கிடைக்காமற்போகவே சலிப்புற்ற பாட்டி கடைசியாக ஆன்மாவின் முழு மூச்சுடன் மறைந்த அவ்விரண்டு முஸ்லிம் ஞானிகளிடம் உறைவதாகக் கருதப்படும் இரக்கம் நாடிச் சென்ருள். தன்னுடைய குழந்தை குணமடைந்தால் அவனை அவர்களுடைய முழு அடிமையாக்குவதாக—அதாவது பக்கீராக்குவதாகப்—பாட்டி சபதம் செய்தாள். எனக்கு முதன் முதலாக வைத்த பெயர் வி(பி) ரஜமோகன். ஆனுல் நான் குணமடைந்தவுடன் பாட்டியோ அம் முஸ்லிம் பீர்களுக்கு நன்றி செலுத்துவான் வேண்டி அரை முஸ்லிம் பாங்கில் பக்கீர்மோகன் என்ற மறு பெயரை எனக்குச் சூட்டிவிட்டாள்.

''நான் நலமுற்றேன். ஆனுல் பாட்டியின் தாயுள்ளம் அம் முஸ்லிம் பீர்களுக்கு என்னை அளித்துவிடப் போதுமான நெஞ்சுரத்தைக் கொடுக்கவில்லை. பரிகாரமாக, முஸ்லிம்களின் மொகரப் பெருவிழாவின்போது ஒவ்வோர் ஆண்டும் எட்டு நாள்களுக்குக் குறையாமல் பாட்டி என்னைப் பக்கீர் ஆக்கினுள். அந்த எட்டு நாளும், தொங்கி வழியும் பல வண்ண உடை, இஸ்லாமியத் துறவியின் குல்லாய், சாயம் பூசிய கழி, ஒரு பக்கத்தில் தொங்கவிடப்பட்ட பல நிறப் பை ஆகியவற்றுடன் ஓர் உண்மையான முஸ்லிம் பக்கீரைப்போலப் பாட்டி என்னை உருமாற்றினுள். வெள்ளை வண்ணத்தை முகத்தில் பூசிக்கொண்டு, அதிகாலையிலேயே வீட்டைவிட்டுப் புறப்பட்டுத் தெரியாத பேட்டைகளில் பாலேசுவர்த் தெருக்களிலும் சந்துகளிலும் இரந்து திரிந்தேன். மாலையில் வீடு திரும்பினேன். நான் பிச்சை எடுத்துச் சேகரித்த அரிசியைப் பாட்டி விற்று அந்தப் பணத்தைக்கொண்டு பீர்களுக்குக் காணிக்கையாக உணவு வழங்கினுள்.''

**வேண்டாத சனியன்**

பக்கீர்மோகனுடைய தந்தை இலட்சுமண் சரண் சேனுபதி இறந்தபின் அவருடைய பெரிய தந்தை புருஷோத்தம் ஒருவர்தான் குடும்

பத்தைக் காப்பாற்ற வேண்டியவர்; அவரே மல்லர்கள் குடும்பத்தின் தலைவருமாவார். ஆனால் அவரும் அவருடைய மனைவியும் தங்களுடைய சம்பாத்தியத்தை அண்ணன் மகனும் பகிர்ந்து கொள்வதை விரும்பவில்லை. விரும்பாச் சுமையாக வந்தடைந்த அச் சிறுவனிடம் தங்களுடைய கசப்புணர்ச்சிகளை மறைக்கக்கூட அவர்கள் ஒருபொழுதும் முயன்றதில்லை.

இத்தகைய வறண்ட சூழலில் குழந்தை பக்கீர்மோகனுக்கு முறையாகக் கல்வி பயில வாய்ப்பில்லை. நோய் நீடிப்பின் காரணமாய் ஒன்பது வயதுக்கு முன்னால் நெடுங்கணக்கு எழுத்துக்களைக் கூட அவன் கற்றுக்கொள்ளத் தொடங்கவில்லை. அவற்றைக்கூடப் பழங்காலத் தொடக்கப் பள்ளியில் ஆசிரியருக்குக் கொடுக்கவேண்டிய சம்பளத்தின் ஒரு பகுதிக்காக உடலுழைப்பை நல்கித்தான் அவன் கற்றுக்கொள்ள முடிந்தது. மற்ற மாணாக்கர்கள் மகிழ்ச்சியுடன் வீட்டுக்குத் திரும்பிவிட்டபொழுது பக்கீர்மோகன் ஆசிரியர் வீட்டில் தங்கி, அவருக்குச் சமையலிலும் பாத்திரங்களைக் கழுவுவதிலும் மற்றும் சில்லறை வேலைகளிலும் உதவவேண்டியிருந்தது. எனினும் தன்னுடைய பிள்ளைகளையும் மற்றக் குழந்தைகளையும் போலப் பக்கீர்மோகன் ஒரு தடவைகூடப் பிரம்படி படவில்லை என்பது அவருடைய கல்நெஞ்சினரான பெரிய தந்தைக்கு மகிழ்ச்சியூட்டவில்லை. ஆகவே, பக்கீர்மோகனுக்காக ஆசிரியருக்குக் கொடுக்கவேண்டிய சிறிய தொகையைக்கூடக் கொடுக்க அவர் மறுத்துவிட்டார். முதுகில் பிரம்படிகள் படாதபடி ஒரு மாணாக்கன் உண்மையான கல்வி பெறமுடியாதென்பது அவருடைய வாதம்.

தனக்குச் சேரவேண்டிய பணத்தைப் பெறுவதற்காக ஆசிரியர் ஒரு மட்டும் பொறுமை பிடித்த பெரியப்பனின் தருக்கத்துக்கு இணங்கவேண்டியதாயிற்று. ஒரு தடவை பெரிய தந்தை பள்ளிக் கூடத்திற்கு வரநேர்ந்தபோது எந்தவிதத் தெளிவான காரணமுமின்றி ஆசிரியர் பக்கீர்மோகன் முதுகில் பிரம்பால் சுமார் பன்னிரண்டு அடிகளை இரக்கமின்றி அடித்தார். பாவம், வலி தாங்காமல் சிறுவன் ஊளையிட்டுக்கொண்டு வாழ்க்கையில் தன்னுடைய ஒரே புகலிடமான பாட்டியிடம் ஓடினான். அதிர்ச்சியுற்ற அம் முதியவள் வீட்டின் உள் கட்டிலிருந்து நேராக ஆசிரியரிடம் ஓடி, ''நன்றாயிருக்கிறது வாத்தியாரே! உங்களுக்குக் குழந்தை குட்டி இல்லையா? ஒன்றுமில்லாததற்குக் குழந்தையை இப்படி ஏன் அடித்து நொறுக்கவேண்டும்?'' என்று பரிதாபத்தோடு ஆசிரியரைச் சாடினாள். ஆனால் பாட்டியின் எதிர்ப்புகள் ஒருபுறமிருக்க இரக்கமில்லாப் பெரியப்பனிடமிருந்து தனக்கு வேண்டிய சம்பளத்தைப் பெறுவதற்காக, பாவம், அந்த ஆசிரியர் ஒழுங்கு நடவடிக்கைகளைப் பக்கீர்மோகனிடம் கையாளவேண்டியதாயிற்று.

இருப்பினும் இத்தகைய அவல அனுபவங்களுக்கிடையில், குழந்தை பக்கீர்மோகனுடைய அறிவுப் பசி அடங்கவில்லை. சில நாள்கள் மாலை வேளையில் நகரிலுள்ள மற்ருேர் ஆசிரியரை அணுகி அவர் பாரசீக மொழியில் சிறிது பயிற்சி பெற்ருர். பிற்காலத்தில் ஓரளவு அம்மொழியில் தம் தேர்ச்சியைக் காட்ட அப்பயிற்சி உதவியது.

பள்ளியில் பெற்ற இந்த அரைகுறைப் பயனைக்கூட பொருமை பிடித்த பெரிய தந்தையாலும் அவருடைய மனைவியாலும் மேலும் தாங்க முடியவில்லை; எனவே கிறிஸ்தவப் பாதிரியார் நடத்திய மதிப்பு வாய்ந்த தற்காலப் புது முறைத் தொடக்கப்பள்ளிகளில் தங்களுடைய குழந்தைகளைச் சேர்த்தார்கள். சுமார் பத்து வயதுச் சிறுவனுன பக்கீர்மோகனுடைய துவக்கநிலைக் கல்விக்கு முற்றுப் புள்ளி வைத்து, அவனைத் துறைமுகப் பக்கம் கூலி வேலையில் அவர்கள் அமர்த்திஞர்கள்.

# 3. படிப்பார்வம் மிகுந்த பாட்டாளிச் சிறுவன்

ஜாப் சார்ணுக் (Job Charnock) ஹூக்ளியின் இடது கரையில் மண்குடில்களை எழுப்பினுன். அங்குதான் பின்னர் முளைத்தது சாம்ராஜ்ய நகரமான கல்கத்தா. அதற்கு முந்தின காலத்திலேயே பாலேசுவரில் பிரிட்டிஷார் வளமான பண்டகசாலை வைத்திருந்தனர்.

சிறு பையனுயிருக்கும்போது தொழிலாளியாகத் துறைமுகப் பகுதிகளைப்பற்றிப் பக்கீர்மோகன் நன்கு அறிந்தவர். எனவே, அவருடைய சுயசரிதத்தில் காணப்படும் பாலேசுவர்த் துறைமுகப் பட்டினத்தில் நிலவிய வளங்களைப்பற்றிய சுவையான கதைப் பாங்கு வர்ணனைகள் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும். ஒரிய மக்கள் கடந்த காலத்தில் தங்களுடைய கடற்கரைப் பகுதியின் சீர்மை குறித்துப் பெருமைகொள்ளும்படி கடற்பயணம்—வாணிபம் பற்றியும் உண்மையான கதைகளையும் காற்றில் கடலலைகளின் சீற்றம் பற்றியும் அவற்றின் நாசுஞைவி பற்றியும் எழுதிய ஒரே ஒரிய மொழி எழுத்தாளர் அவர். இத்தகைய கதைகளுக்குப் பின்னணியாகப் பாலேசுவரில் குழந்தைத் தொழிலாளியாகக் கழித்த நாள்களே உதவின என்று சொல்லவேண்டியதில்லை. துறைமுகத்தில் தாம் கண்டதைச் சுயசரிதத்தில் உரைக்கிருர்.

''என்னுடைய குழந்தைப் பருவத்தில் பாலேசுவர் செழிப்பான கடற்கரைப் பண்டகசாலையாக விளங்கியது. ஐந்நூறு—அறுநூறு கப்பல்கள் வருவதும் போவதுமாயிருந்தன. அவற்றில் பெரும் பான்மைக் கப்பல்கள் ஒரிசாவின் உப்பை ஏற்றிச் சென்றன. மற்றவை இந்துமாக்கடலில் தொலைவிலுள்ள இரங்கூன், சென்னை, கொழும்பு, பல தீவுகள் ஆகியவற்றின் துறைமுகங்களுக்கு அன்றாடத் தேவைப்பொருள்களைக் கொண்டுபோயின. அவை யெல்லாம் பாய்மரக் கப்பல்களே. நீராவிக் கப்பல்களைப்பற்றிக் கேள்விப்படாத காலம் அது ... பல்வேறு அளவுகளிலும் தோற்றங் களிலும் ஆறு முதல் பன்னிரண்டு பாய்மரங்கள் காலத்தின் வகைக் கேற்றபடி தேவைப்பட்டன. சில முக்கோண வடிவத்திலும், இன்னும் சில நீண்ட சதுர வடிவத்திலும் மேலும் சில ஒழுங்கில்லா வகையிலும் அமைந்தன. குறிப்பிட்ட அளவுகளுக்குக் கூடுதலாகப் பாய்மரங்கள் இருந்தால் கலங்கள் புயலில் கவிழ்ந்துவிடும் அபாயம் இருந்தது. குறைவாயிருந்தாலோ அவை இருந்த இடத்திலேயே இருக்கும். பயிற்சியில்லாதவர் இந்த அளவு முறைகளைக் கையாள் வதில் தவறிழைப்பர்.

''என்னுடைய தந்தை, பெரிய தந்தை இருவரும் கப்பல் குத்தகைக்காரர்களாகத் தங்கள் பிழைப்பை நடத்தினர்கள். பெரும்பாலும் கடற்கரை வாணிபர்கள் தங்களுக்குத் தேவையான பாய்மரச் சீலைகளை குத்தகைதாரர்களிடமிருந்து வாங்கினர்கள். பின் சொல்லப்பட்டவர்களோ தையற்காரர்களையும் பாய்மரச் சீலைகளை அளவுசெய்து கத்தரித்துக் கொடுப்பவர்களையும் வேலைக் கமர்த்தினர். இத்தகைய நூற்றுக்கணக்கானவர் பாய்மரங்களைத் தயாரிப்பதில் எங்கள் வீட்டில் நான் சிறுவனயிருக்கும்போது வேலை செய்துகொண்டிருந்தார்கள். இது மிக்க இலாபகரமான தொழிலாயிருந்தது.''

### கடல்நீர் மணிகள்

ஆனல் பாலேசுவர்த் துறைமுகத்தில் பக்கீர்மோகன் கூலி வேலை செய்யும் பையனகச் சேர்வதற்கு முன்பே அத்துறைமுகம் மேலை வானத்தில் மறையும் கதிரவன் ஒளியாகிவிட்டது. துறைமுகத் தின் செல்வ வளம் இறங்குமுகமாயிருப்பதைத் தெளிவாகக் கண்டு கொண்ட அவருடைய உலகானுபவமுள்ள பெரிய தந்தை அவரை உப்புப் பிரிவில் வேலைக்கமர்த்திவிட்டார்.

ஒரு காலத்தில் செல்வம் கொழித்த—தாம் பிறந்த ஊர்த் துறைமுகம் மூடப்பட்டுவிடவே அது சீர்குலைந்துபோனதை நினைந்து பக்கீர்மோகன் மனம் புழுங்கிப் பெருமூச்செறிந்தார். அவர் தம் சுயசரிதத்தில் சொல்வதாவது:

''இந்தியாவில் மட்டுமன்றி ஐரோப்பா முழுவதிலும் பாலேசுவர்த் துறைமுகம்பற்றியும் அங்காடிகள்பற்றியும் பலரும் நன்கறிவர். வங்காளத்தில் நிலைபெறுவதற்கு முன்னர் டச்சு, டேனிஷ், பிரஞ்சு, பிரிட்டிஷ் ஆகிய நாடுகளின் வர்த்தகர் பாலேசுவரில் தங்களுடைய வாணிப நிலையங்களை நிறுவினர். ஆனுல் வாழ்க்கையின் நியதி, வாழ்வும் தாழ்வும். எனவே செல்வ வளங்கள் இடம்விட்டு இடம் பெயர்கின்றன. பாலேசுவர் இதை அரண் செய்யும் ஓர் எடுத்துக்காட்டு. தொன்றுதொட்டு ஆயிரக்கணக்கில் மக்கள் வெள்ளத்தின் இரைச்சலில் மிதந்துகொண்டிருந்த பாலேசுவரில், அந்தோ, மயான அமைதி நிலவுகிறது! புதர் மண்டி மனித நடமாட்டமில்லாமல் போய்விட்டது. ஆற்றின் படுகை சேறும் மணலும் விரவி மேடாகியது. வளமார்ந்த வணிகர்—கப்பல் உடைமையார் என்ற வகுப்பே மறைந்துவிட்டது. அதன் விளைவாகப் பாலேசுவரின் உள்ளூர்—வெளியூர் வாணிபம் முற்றிலும் வெளியார் கைக்கு மாறிவிட்டது.''

அரிசி, துணி என்பவற்றைக் காட்டிலும் பாலேசுவர்த் துறைமுகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட மதிப்புமிக்க பொருள் உப்பாகும். பக்கீர்மோகன் சொல்வதாவது: ''பாலேசுவர் பெற்ற செல்வச் செழிப்புக்கு உப்பே முதற்காரணம். பாலேசுவரின் வடக்கேயுள்ள சுவர்ணரேகையின் முகத்துவாரத்திலிருந்து தெற்கேயுள்ள தம்ராவில் மகாநதிவரை கடற்கரையையொட்டி முழுவதும் பெரும் பரப்பில் உப்பு விளைவிக்கப்பட்டது. அந்நாளில் வங்காளத்தின் கிராமப் பகுதியினர் பாலேசுவர் உப்பைத்தான் அறிவர். பாலேசுவர் மக்களின் பிழைப்புக்கு உதவிய ஒரே நிறுவனம் அரசின் உப்புவரிப் பிரிவேயாம்.''

**உப்பின் முழு உரிமையும் அரசுக்கே**

உப்பு ஏற்றுமதி என்ற ஆறுதல் பரிசைக்கூடப் பாலேசுவர்த் துறைமுகம் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. இயல்பான துயரத்துடன் பக்கீர்மோகன் கூறுவதாவது: ''உப்பு விளைவிப்பதைத் தடை செய்தும் அப்பிரிவு முழுவதையுமே அகற்றியும் விரைவில் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. அச்செயல் பாலேசுவருக்கு மட்டுமன்றி ஒரிசா முழுவதுக்குமே நேர்ந்த துர்ப்பாக்கியமாகும். ஒரிசாவின் வளமென்னும் பெண்ணணங்கு தன்னிடம்பெயர்ந்து தொலைவிலுள்ள லிவர்ப்பூலிலும் மற்ற இடங்களிலும் இங்கிலாந்து சென்று குடியேறிவிட்டாள்.''

தம்முடைய நகருக்கும் மாவட்டத்துக்கும், ஏன், ஒரிசா முழுவதுக்குங்கூட நேர்ந்த இந்த இடரை நாட்டுப்பற்றுமிக்க பக்கீர்

மோகன் ஒருபொழுதும் மறக்கவில்லை. பின்னர் 1907-ஆம் ஆண்டில் அவருடைய அறுபத்தேழாவது வயதில் பாலேசுவரில் மக்கள் மறந்து போன கைத்தொழிலாயமைந்த உற்பத்தியைப்பற்றி உள்ளம் உருக்கும் விவரத்தை அவர் வெளியிட்டார். உப்புவிளைச்சல் ஒழிப்பு எத்தகைய பொருளாதாரச் சீரழிவை மக்களுக்கு விளை வித்தது என்றும் அதன் தொடர்ச்சி எத்தகைய செழிப்பையளித் திருக்கும் என்றும் அந்த அறிக்கை கோடிட்டுக் காட்டுகிறது. மகாத்மா காந்தியின் தலைமையில் இந்திய விடுதலைப் போராட்டத் தில் மனித உரிமைகளில் உப்பு ஒரு குறியீடாக இடம்பெறுவதற்கு ஐம்பது ஆண்டுகட்கு முன்னரே இந்தியாவில் உள்நாட்டு உற்பத்தி தழைக்க ஒரு தனிக்குரலை எழுப்பியவர் பக்கிர்மோகன் ஆவார்.

அவர் சொல்வதாவது:

''முன்னுளில் என்னுடைய நாட்டு மக்கள் உவர் மண்ணுக்குப் பண்டமாற்ருகப் பொன்னைப் பெற்றனர். ஆனால் இப்பொழுதோ மேலை நாடுகளின் கூளத்துக்கு ஈடாகப் பொன்னை விரயம் செய் கின்றனர். நான் முன்னரே சொன்னதுபோன்று பாலேசுவர் மாவட்டம் மட்டும் ஒன்பது லட்சம் மணங்கு உப்பை உற்பத்தி செய்வது வழக்கம். தொடர்ந்து அந்நிலை நீடித்திருந்தால் மிதமாகக் கணக்குப்போட்டாலும் இதற்குள் குறைந்த அளவு உற்பத்தி இருபது லட்சம் மணங்குக்கு உயர்ந்திருக்கும். கூடுத லில்லாவிடினும் ஆண்டொன்றுக்குப் பத்து லட்சம் ரூபாய் வருமானம் மாவட்டத்துக்குக் கிடைத்திருக்கும். இன்றையக் கடல் போக்குவரத்து முறைகளில் பயிற்சி அளிக்கப்பட்டிருந்தால் கடற்பயணத்தில் திறன்வாய்ந்த ஒரிய கைபர்தாக்களுக்கு உப்பு வணிகத்தால் எத்தகைய பயன் கிட்டியிருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

''இந்நாளில் மேல்வாரியாக மட்டும் பாலேசுவர் செழிப்பாய்த் தோன்றுகிறது. இப் பணப் பகட்டுக்குப் பின்னல் முழுமையும் வெளியார்களால் கட்டுப்படுத்தப்படும் நம்முடைய பொருளாதார் வாழ்க்கைக்கு முட்டுக்கட்டைகளும் இடைஞ்சல்களும் உள்ளன. வியாபாரிகள் மட்டுமன்றி பல்வேறு அரசுப் பிரிவுகளின் எல்லாப் பெரிய உயர் அலுவலர்களும் வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள். தங்கள் நாட்டின் குறுக்கே செல்லும் ரயில்வேயில் ஒரு வேலைகூடப் பெற ஒரியர் கனவும் காணமுடியாது. ஒரியர் வாழ்வதற்கு வழி வகை வேளாண்மை மட்டுமே. ஆனால் எல்லார்க்கும் சாகுபடிக் கேற்ற போதுமான நிலம் எங்கிருக்கிறது? ஆ கடவுளே, கருணை அரசின் நெஞ்சில் புகுந்து முன்போலப் பாலேசுவரில் நாட்டு முறை உப்பு உற்பத்திக்குப் புத்துயிர் அளிக்கக்கூடாதா?''

### அயராது அறிவை நாடிச் செல்பவர்

இத்தகைய காலகட்ட மாறுதல்களுக்கிடையில் வெளித் தோற்றத்தில் குறிப்பிடத்தகாத—நல்ல உடையில்லா—நோயால் பீடிக்கப்பட்ட நம் குழந்தைத் தொழிலாளி மெதுவாக, ஆனல், அயராது அறிவுப் பெட்டகங்கள் உள்ள இடங்களிலெல்லாம் தம் நடுங்கும் கைகளால் அறிவைத் திரட்டலானர். உப்புப் பிரிவில் சான்று அலுவலரிடம் பயிற்சி பெறப் பெரிய தந்தையால் அமர்த் தப்பட்டபோது பல்வேறு ஆசிரியர்களிடம் வங்காளி, பாரசீகம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் அறிவு பெறுவதற்கு நேரத்தை ஒதுக்கிக்கொண்டார். வாழ்நாள் முழுவதும் அறிவை நாடும் ஆர்வம் அவருக்கிருந்தது. இன்றைய ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் உள்ள (Tekkali)யில் அவரிருக்க நேர்ந்தபோது ஐம்பது வயதுக்கு மேற்பட்டவராயிருந்துங்கூட தெலுங்கு கற்றுக்கொள்ள ஒரு பண்டிதரை அமர்த்திக்கொண்டார். அறிவைத் திரட்டும் ஆர்வமிகுந்த முயற்சிகளில் ஆங்கிலத்தைக் கசடறக் கற்றதை ஓர் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். 23 வயது வரைக்கும் ஆங்கிலச் சொல் ஒன்றுகூட அவருக்குத் தெரியாது. அதற்குள்ளாகப் பாலேசுவர்ப் பாதிரிப் பள்ளிக்கூடத் தில் தலைமைப் பண்டிதராகிவிட்டார். ஆங்கிலமறியா இந்தியப் பண்டிதராயிருந்தாலும் பாலேசுவர் நகரத்தில் அவர் ஒரு புறக் கணிக்க முடியாத மனிதராயிருந்தார். சுடர்விட்டெரியும் அறிவு படைத்த பக்கீர்மோகன் வெளிநாட்டவராலும் மதிக்கப்பட்டார். ஒரு சமயம் ஐரோப்பிய உயர் அலுவலரின் ஏவலாள் ஒருவனல் சினமூட்டப்பட்ட பக்கீர்மோகன் அரசு மொழியான ஆங்கிலத்தை உடனேயே கற்றுக்கொள்ளத் தொடங்கினர்.

எந்த அறிவுப் பாதையிலும் அடி சறுக்கும் இந்த மேதைக்கு அப்பாதையில் செல்லத் தொடக்கப் பயிற்சி கிடைத்தால் போது மானது. ஓர் அகராதியின் துணைகொண்டே அரேபிய இரவுகள், ராபின்சன் குருசோ, லால் பிகாரிடே, வங்காளக் குடியானவன் வாழ்க்கை, ஆங்கில விவிலியம் ஆகிய நூல்களைத் தன் முயற்சியால் மட்டுமே படித்ததாக அவருடைய சுய சரிதத்தில் சொல்கிருர். அவர் கற்றுக்கொண்ட ஆங்கிலம் அவ்வளவே. தானே பெற்ற அந்த அளவுப் படிப்பு அவருடைய அலுவலகப் பணியிலும் பொது வாழ்விலும் உதவுமாறு முழுமையாய் அமைந்தது.

### பள்ளிப் படிப்பில் இரண்டாம் கடும் முயற்சி

பாலேசுவர் உப்புப் பிரிவு அகற்றப்பட்ட பிறகு பதினைந்து வயதுப் பக்கீர்மோகனைப் பற்றிய கவலை எவருக்கும் இல்லை. மாற்று

அரசுப் பிரிவுகளில் சேரப் பெருவாரியான வங்காளி அலுவலர் வங்காளம் சென்றுவிட்டனர். உள் நாட்டவர் சிறிது காலம் வரை வாளா அலுவல் நிலையத்தைச் சுற்றித் திரிந்தனர். அந்த அதிர்ஷ்டக் கட்டைக் கூட்டத்தில் வேலையில்லாப் பக்கீர்மோகனும் ஒருவராவர். இந்த வீண் அலைச்சல் அவருக்கேயுரிய தனி ஆற்றல் செயற்பட உதவியது எனலாம். புறக்கணிக்கப்பட்ட அனுதைச் சிறுவன் தானே ஒரு முடிவுக்கு வந்தான். அவ்வப்பொழுது ஒழுங்கு வரையறையின்றித் தான் பெற்ற அடிப்படை அறிவை மேலும் பெருக்கிக்கொள்ள அவன் உறுதி பூண்டான்.

பாட்டியிடம்கூடச் சொல்லாமல் பாலேசுவர்ப் புறநகர்ப் பகுதியிலுள்ள பாரபாடீப் (Barabati) பாதிரிப் பள்ளிக்கூடத்தில் அவன் தன்னைப் பதிவு செய்துகொண்டான். அக்காலத்தில் சிறுவன் பாதி உடையுடன் நடமாடிக்கொண்டிருந்தான். அவனுடைய பெரிய தந்தை மகன் நித்தியானந்த் பளிச்சிடும் பட்டுத் துணியணிந்து வகுப்புகளுக்குச் சென்றுகொண்டிருந்த காலத்தில் பக்கீர்மோகனிடம் ஒரு மேல் துண்டுகூடக் கிடையாது. சீர்கேடான பொறாமையும் சின்னத்தனமும் குடும்பமனைத்திலும் ஊடுருவித் திளைத்தன. விளைவாக, மாலையில் படிக்கும்போது 'அரிக்கேன்' விளக்கருகில் பக்கீர்மோகன் சேர்ந்து படிக்க நித்தியானந்த் ஒப்புக்கொள்ளவில்லை.

இவ்வித எதிர்ப்புச் சூழ்நிலையிலும் வரலாறு, நிலநூல், கணக்கு போன்ற புதிய பொருள்கள் பற்றிய முதலறிவு நுகர்ச்சியில் பக்கீர்மோகன் பெருமகிழ்ச்சியடைந்தார். முதன் முதலாகச் சாப்மன் (Chapman) மொழிபெயர்த்த ஹோமரின் காப்பியத்தைக் கீட்ஸ் படித்ததையொத்திருந்தது. ஆனல் மாதம் ஒன்றுக்குப் பள்ளிக் கட்டணமாக நாலணுக் கொடுக்கமுடியாத மாணுக்கர் அவர். தலைமையாசிரியரும் பாட்டியும் வேண்டிக்கொண்டதற்காக வேண்டா வெறுப்பாகப் பெரிய தந்தை முதலாம் ஆண்டில் கட்டணம் கட்ட இசைந்தாரெனினும் இரண்டாம் ஆண்டு உதவி செய்ய உறுதியாக மறுத்துவிட்டார். அவர் ஆறு மாதங்கள் மிகு துன்பத்தில் உழன்று ஒய்ந்து—அலுத்துப் படிப்பைவிட்டார்.

## படிப்புக்கு முற்றுப்புள்ளி

ஒரிசாவை வரலாற்றுச் சிறப்புமிக்க புதுமை நாடாக மலர வைத்த மனிதர் பள்ளிக்கூட மாதச் சம்பளமாக நாலணுக்கூடக் கொடுக்க முடியாத நிலையிலிருந்தார் என்பது வியப்பூட்டும் வேதனையே. கல்வியில் ஆர்வம் மிகுந்த இளைஞனுடைய சலிப்பை

நினைத்து வருந்தும்—எளிய பாட்டி இதை அறியாதவளல்ல. ''படிக்கவேண்டுமென்று நீ இவ்வளவு கவலைப்படுவானேன், என் கண்ணே! என் அன்பே! நீ நீண்ட காலம் வாழ்வாயாக! வாழ்க்கையில் எவ்வளவு பணம் தேடிக்கொள்வாய் என்பதை நீயே உணர்வாய்'' என்று பாட்டி தன்னுடைய அருமைப் பேரனுக்கு ஆறுதலும் ஊக்கமும் அளித்தாள். தூய அன்பில் மலர்ந்த படிப்பில்லாப் பாட்டியின் சொற்கள் வெகு விரைவிலேயே வருங்காலத்தை விண்டுரைத்து மெய்ப்பித்தன.

# 4. ஆசிரியர், எழுத்தாளர், பத்திரிகையாளர்

மாதப் பள்ளிக்கூடச் சம்பளம் நான்கணுக்கூடக் கொடுக்க முடியாததால் பக்கீர்மோகன் பள்ளிக்கூடத்தை விடநேர்ந்தது. பாவம், வேறென்ன செய்வதென்று அவருக்குத் தோன்றவில்லை. பொறுமை பிடித்த பெரிய தந்தையுடனும் பெரிய தந்தையின் மனைவியுடனும் அவருடைய இல்லம் என்று சொல்லப்பட்ட இடம் நரகத்திற்குக் குறைந்ததில்லை.

ஆனுல் அவர் வெகுகாலம் அந்த இருண்ட துன்பக்கேணியில் தங்கியிருக்க வேண்டியதில்லாமல் போய்விட்டது. அவர் முன்பு படித்த பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் வேலையொன்று நிரப்பப்படாமலிருந்தது. உரிய சான்றுப் பத்திரங்களில்லாவிடினும் இயல்பாகவே திறமையுள்ள பக்கீர்மோகனைக் காட்டிலும் சிறந்தவரைத் தலைமையாசிரியர் நினைத்துப் பார்க்க முடியவில்லை. மாதம் ஒன்றுக்கு இரண்டரை ரூபாய்ச் சம்பளத்துடன் வேலை ஒப்புக்கொள்ளுமாறு அவர் அழைக்கப்பட்டார். விலைவாசி ஏறியுள்ள இக்காலத்தில் இது அசட்டுத்தனமாகத் தோன்றலாம், ஆனுல் இதைக்கண்ட அவருடைய பாட்டி தன்னுடைய அருமைப் பேரன் பெற்ற பேற்றைக் கண்டு ஓடியாடி மகிழ்ந்தார்.

### நாட்டுப்பற்று மிகுந்த ஊரறிந்தவர்

பக்கீர்மோகன் தம்முடைய மாணுக்கர்களைக் கையாளும் முறையைக் கண்டு உவந்த பள்ளிக்கூட மேலாளர் அவர் கேட்காமலேயே சம்பளத்தை இரண்டரை ரூபாயிலிருந்து நான்கு ரூபாய்க்கு உயர்த்தினுர். அந்தக் காலத்தில் அது குறிப்பிடத்தக்க தொகையாகும். அக்காலத்து நாணயப் பண்டமாற்றில் ஒரு பைசா இன்றைய ஒரு ரூபாய் மதிப்புக்கும் மேற்பட்டது.

தொடக்கத்திலிருந்தே பக்கீர்மோகன் வளமுள்ள ஆற்றல் மிகுந்த ஆசானாய் மலர்ந்தார். பூகோளம் கற்பிக்கத் தேசப் படங்கள் எளிதாகக் கிடைக்காததால் அவரே அவற்றைத் தயாரித்தார். ஆசிரியப் பொறுப்பில் மூன்றுமாண்டு கணக்குச் சொல்லிக் கொடுக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டார். கூட்டிக் கழித்துப் பெருக்கி வகுக்கும் கணக்கு, அல்ஜீப்ரா, திரிகோணமெட்ரி ஆகியவற்றை அவர் துறைபோகக் கற்றார். இவையெல்லாம் அவர் பள்ளியில் படித்த பாடங்களல்ல. பாலேசுவரில் திறம்பட அவருக்கு உதவிபுரிபவர் எவருமில்லை. இலக்கியம், வரலாறு ஆகியவற்றைச் செவ்வனே கற்பிக்கும் ஆசிரியர் என்பது பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. கணக்கு, இலக்கியம் போன்ற மாறுபட்ட பாடங்களைக் கற்பிக்கும்-சுடர்விட்டெரியும்-அசாதாரண ஆசிரியராய் முன்னாட் கூலியாள் ஏதோ மந்திரவித்தை போன்று மாற்றப்பட்டார்.

### ஐரோப்பிய நண்பர்கள்

பாலேசுவரில் மக்களின் மதிப்பைப்பெற்ற ஒரே கல்வி நிலையம் கிறிஸ்தவப் பாதிரிப் பள்ளிக்கூடமாகும். இங்குள்ள பொறுப்பான தலைமையாசிரியர் வேலை காலியானபொழுது பக்கீர்மோகன் ஆசிரியராகத் திறம்படச் செயற்பட்டுத் தம் புகழை நிலைநாட்டியிருந்தார். மாதம் பத்து ரூபாய்ச் சம்பளத்தில் அவரை ஐரோப்பிய மேலாளர் எவ்விதத் தயக்கமுமின்றி அமர்த்தினர்.

இளைஞர் பக்கீர்மோகன் நாடறிந்த புகழ்படைத்தவராக இந்த வேலை மாற்றம் உதவியது. இங்குதான் முதன் முதலாக ஐரோப்பிய அதிகாரிகளுடனும் பாதிரிமார்களுடனும் அவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அவரெல்லாருள்ளும் பள்ளிக்கூடச் செயலாளர் பாதிரியார் E.C.B. ஹல்லம் மாவட்டக் கலெக்டர் பீம்ஸ் ஆகியோர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். இந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம் (Comparative Grammar of the Indian Languages) என்று சான்று காட்டத் தகுந்த நூலை எழுதி மொழிநூல் துறையில் புகழை நிலைநாட்டியவர் பீம்ஸ் (Beames). அவர் துறைபோகக் கற்ற அறிஞர் மட்டுமன்றி திறமையாகச் செயற்பட்ட நிர்வாகியும் கூட. அண்மையில் வெளிவந்த 'வங்காள நிர்வாக அதிகாரி நினைவுகள்' (Memoirs of a Bengal Civilian) என்ற அவருடைய தன் வரலாறு இந்திய சமூகத்தினுடையவும் கடந்த நூற்றாண்டு நிர்வாகத்தினுடையவும் இருண்ட பகுதியை ஒளிபாய்ச்சுகிறது.

### பக்கீர்மோகனும் பீம்சும்

பாலேசுவருக்கு வந்ததுமே வங்காளம், அஸ்ஸாமியம், ஹிந்தி போன்ற ஒருதாய் வயிற்று மொழிகளுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்யப் பீம்ஸ் ஒரிய மொழியைக் கற்றுக்கொள்ள விரைந்தார். ஒரிய

மொழியில் மட்டுமன்றி வங்காளம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளையும் நன்கறிந்த ஆசிரியரை அவர் தேடிக் கொண்டிருந்தபோது ஹல்லம் தயக்கமின்றி எதிர்பாராத பொறுப்பை ஏற்கப் பக்கீர் மோகனைப் பரிந்துரைத்தார். ஆர்வமிக்க வாசகர் அவர்களுடைய முதலாவது சந்திப்புப் பற்றியும் பிந்திய வளர்ச்சி பற்றியும் பக்கீர்மோகனிடமிருந்து தெரிந்துகொள்வது பொருந்தும். அவர் சொல்வதாவது:

''பிரிட்டிஷ் நிர்வாக அலுவலர்களிடையும் இந்திய உயர் குழுவினரிடையும் பீம்ஸ் ஒளிகாணும் அறிவாளியாகப் புகழ் பெற்ருர். அவர் கற்றுத் தெளிந்த மொழிகள் பதினென்ருகும். பாலேசுவரில் இருந்தபோது இந்தியமொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூலை எழுதுவதில் முனைந்திருந்தார். எங்களுடைய செயலாளர் பாதிரியார் ஹல்லமும் இலக்கியத்தில் ஈடுபாடுள்ள மாணுக்கர். அதன் காரணமாக இருவரிடையும் ஆழ்ந்த நட்பு நிலவியது. அவருடைய ஐந்திலக்கணம் எழுத ஓரியா, வங்காளம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் சுமாரான நம்பக அறிவு படைத்த பண்டிதர் அவருக்குத் தேவைப்பட்டார். என்னுடைய நலன் கருதும் பாதிரியார் E.C.B. ஹல்லம் ஒருநாள் என்னை அழைத்துக்கொண்டு போய் பீம்சுக்கு அறிமுகப்படுத்திஞர். முதற் சந்திப்பிலேயே சமஸ்கிருதத்தில் சாரியைகள் முன்னிடைச் சொற்கள் ஆகியவற்றின் ஆட்சிபற்றிக் கேட்டார். என்னுடைய விடைகளை ஏற்று அவருடைய ஒப்பிலக்கணத்தில் சேர்த்துக்கொள்வதற்காக அவற்றை உடனடியாக அவர் எழுதிக் கொண்டார். இந்த ஒரு நிகழ்ச்சியே பாலேசுவரிலிருந்த ஐரோப்பியர்களிடையே நாஞேர் இந்திய மொழி அறிஞன் என்ற புகழைத் தேடித் தந்தது.

''குறைந்தது வாரத்துக்கொரு முறையாவது தம்மைச் சந்திக்குமாறு பீம்ஸ் வேண்டிஞர். இந்த வார இறுதிச் சந்திப்பை நாங்கள் ஆவலுடன் எதிர்பார்த்தோம். தாமதம் நேரிட்டால், ''பாபு ஏன் இத்தனை தாமதம்?'' என்ற கேள்வியுடன் பேசத் தொடங்குவார். மொழிகள் பற்றியே எங்கள் விவாதங்கள் நிகழ்ந்தன. சிக்கலான சமஸ்கிருத சுலோகங்களை ஆராய்வதிலிருந்து ஒரிய மக்களிடை உலவி வந்த பாம்புகளையும் சூனியக்காரர்களையும் விரட்டியடிக்கும் மந்திரச் சொற்கள் வரை விவாதமிருக்கும். ரசகல்லோல என்ற ஓரிய அணியிலக்கண நூல் பற்றியும் நாங்கள் பேசுவதுண்டு.

''பிரிட்டிஷாரிடம் எனக்கிருந்த தொடர்பும் என்பால் அவர்கள் வைத்திருந்த மதிப்பும் அலுவலர்களிடை எனக்குப் பெருமளவு சலுகையைப் பெற்றுத் தந்தன. கலெக்டர் அலுவலகத்தில் உயர் வங்காளி அலுவலர்கள் என்னுடன் பேசும்பொழுது மரியாதையுட

னும் சற்றுத் தள்ளி நின்றேயும் உரையாடினுர்களென்ருல் கீழ்ப் படியிலுள்ளவர்களைப் பற்றிக் கேட்பானேன்?

''பாலேசுவரில் பெண்கல்வியைப் பரப்புவதிலும் ஒரிய மொழியைச் சீர்திருத்துவதிலும் நான் மேற்கொண்ட பணிவான முயற்சிகளுக்கு பீம்சிடமிருந்து எனக்குப் பேராதரவும் உதவியும் கிடைத்தன. என்னுடைய சொந்த வாழ்க்கையில் பல நெருக்கடிகளின் போது அவர் எனக்கு உறுதுணையாயிருந்தார். மோசமான இன்னல்களினின்றும் விடுபட அவர் எனக்கு உதவினுர். சுருங்கச் சொல்லின், என்னுடைய வாழ்வு மலர்ச்சிக்கு அவர் தூண்டு கோலாக விளங்கினுர். பேராண்மா படைத்த பிரிட்டிஷாராகிய பீம்ஸ் என்னுடைய மண்ணுலகச் செழிப்புக்கெல்லாம் காரணமாயிருந்தார். என் வாழ்நாளில் கடைசி மூச்சு வரை நான் அவரை நன்றியுடன் நினைத்துக்கொண்டேயிருப்பேன். அவருடைய ஆன்மா அமைதிபெற ஒவ்வொரு நாள் காலையும் மாலையும் நான் கடவுளை வழிபடுகின்றேன். அந்தத் தொடக்ககால நாள்களில் அவருடைய எல்லா நண்பர்களிடமும் என்னைப்பற்றி 'நாட்டுப்பற்றுள்ள பண்டிதர்' என்று சொல்வதுண்டு என்பதைத் தயக்கத்துடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.''

### கூலி வேலை செய்யும் நூலாசிரியர்

விரல்விட்டு எண்ணக்கூடிய அயல் நாட்டினரிடம் மட்டுமன்றி ஒட்டியுள்ள நான்கு மாநிலப் பரப்புகளில் சிதறிக்கிடக்கும் ஒரிய மொழி பேசும் மக்களிடமும் பாலேசுவர்ப் பள்ளியில் பக்கீர்மோகன் தலைமையாசிரியராயிருந்த ஆண்டுகளில் முன்னேறும் தேசபக்தர்—எழுத்தாளர்—அறிஞர் என அவரை மக்கள் அறிந்திருந்தனர். அவருடைய தலைமையிலும் மேற்பார்வையிலும் அப்பள்ளிக்கூடம் பெயர் பெற்று விளங்கியது. மாநிலம் நல்கும் பெரும்பான்மை உபகாரச் சம்பளங்களை ஆண்டு தோறும் தொடர்ந்து அப்பள்ளி மாணுக்கர்கள் பெற்ருர்கள். அனைத்துக்கும் மேலாக, விட்டு விட்டுப்பெற்ற தொடக்கப்படிப்பும் கூலி வேலைச் சிறுவனுய்ப்பெற்ற அனுபவமும் கொண்டிருந்தவர், இளைஞரான தலைமையாசிரியர். கணிதம், பூகோளம், திரிகோண மெட்ரி ஆகியவை பற்றிய ஒரிய மொழிப் புத்தகங்களுக்காக எவரும் ஆசைப்படக்கூடிய அரசுப் பரிசுகளை அவர் பெற்ருர். அவருடைய முதல் முயற்சிகளான எதிர்பாராத சாதனை பாலேசுவருக்கு அப்பாலுள்ள ஒரிய மொழி பேசுமிடமெல்லாம் பரவியது. பிந்திய ஆண்டுகளின் இலக்கியப் படைப்புக்கள் போலவே, இப்பாட நூல்களும் அவருடைய ஆழ்ந்தகன்ற படிப்பு, உண்மைச் செய்திகளின் தொகுப்பு, இனிமையாக எடுத்துரைக்கும் பாங்கு ஆகியவற்றின் முத்திரை தாங்கி வெளிவந்தன.

மொழியையும் மக்களையும் பற்றிய சிந்தனை

தம்முடைய புத்தகங்களின் வெற்றி குறித்து அவரே வியப்படைந்தார். கூலி வேலை செய்த பையன் ஒன்றரை ஆண்டு பெயரளவில் பெற்ற படிப்பைக் கொண்டு எக்காலத்திலும் எழுத்தாளனுகக் கனவுகாண முடியுமா? பள்ளியாசிரியராகத் தேர்ச்சி, பிரிட்டிஷ் வகுப்பினரிடையே குறிப்பிடத்தக்க அறிஞரென்றும் பொதுவாழ்வில் ஈடுபட்டவரென்றும் பெற்ற ஆசைப்படக்கூடிய மதிப்பு, பல பொருள் பற்றிப் பள்ளிகளில் படிக்கப்பட்டுவந்த புத்தக ஆசிரியர் என்ற தகுதி ஆகிய இவையனைத்தும் இருபது வயதையொட்டிய ஆண்டுகளில் நாட்டின் மேற்படியில் அவரைக் கொண்டு சேர்ப்பித்தன. பணத்தைப் பற்றிய கவலை நீங்கவும், தம்முடைய மக்களின் அவல நிலையைப் போக்கி எவ்விதம் மேம்பாடடைய உதவலாம் எனச் சிந்திக்க அவருக்குப் போது கிடைத்தது.

பொருளாதார—நிர்வாகக் குறைபாடுகளினுல் ஒரியர்கள் உழன்றதொருபுறமிருக்க, ஒரிய மொழியில் உரிய பாடப் புத்தகங்களில்லையென்ற வங்காளிகளின் ஏளனத்துக்கும் பக்கிர்மோகன் நாள்தோறும் ஆளாக வேண்டியிருந்தது. முற்றிலும் இந்த அவமதிப்பைத் துடைப்பதற்காகவே ஒரிய மொழியில் பாடப்புத்தகங்கள் எழுத வேண்டுமென்று அவர் எண்ணியிருந்தார். கடவுள் சித்தம், நாட்டுப் பற்றுமிக்க இந்த இளைஞர் முதல் முயற்சிகளிலேயே தாம் எதிர்பார்த்ததற்கு மேலாக முன்னேறினுர். இத்தேர்வுகளில் வெற்றிகண்டு ஊக்கம் பெற்ற பணிவுள்ள ஆசிரியர் தம் கவனத்தை ஒரிய மொழியின்பாலும் அதன் இலக்கியத்தின்பாலும் திருப்பினுர். கூலிச் சிறுவன் இளந் தலைவனுக மலர்ந்தது நினைக்கவொண்ணுதது. இதை அவர் வாய் மொழியாகவே கேட்போம்.

''ஒரு புதிய வங்காளிப் புத்தகம் என்னுடைய கைக்கு வந்தபோதெல்லாம் அதன் பக்கங்களை முன்னும் பின்னும் பார்த்துத் தாங்கொணுத் துயரத்திலாழ்ந்து விடுவேன். என்னுடைய தாய்மொழியான ஒரியாவில் எப்பொழுது அத்தகைய புத்தகம் வரும் என்று என்னை உள்ளூரக்கேட்டுக்கொள்வேன். ஒரு துயரப் பெருமூச்சு என் நெஞ்சின் அடித்தளத்திலிருந்து கிளம்பும். ஆங்கிலம் அல்லது பாரசீகம் தெரிந்த ஒரு சிலர் தங்களுடைய அலுவலக வாழ்க்கையில் ஒரிய மொழியில் பேசுவதைக்கூட மதிப்புக்குறைவென்றும் முட்டுக்கட்டையென்றும் நினைத்தார்கள். ஒரியாப் புத்தகங்கள் குப்பை என்று கருதும் அவர்கள் தங்கள் அரிய பணத்தை வீணுக்குவர் என்று யார் எதிர்பார்க்கமுடியும்? எனவே, இரவும் பகலும் வளர்ச்சியில்லாது புறக்கணிக்கப்பட்ட என்னுடைய மொழிக்குப் புத்துயிர் கொடுப்பது எவ்வாறு என்ற கடினமான

சிக்கலைப் பற்றிச் சிந்தித்தேன். என்னுடைய ஆன்மாவின் அடித் தளத்தில் இம்முனைப்பு வெளி வேலைகளுக்கிடையே புயலாய் வீசிக் கொண்டிருந்தது. வங்காளி மொழியில் நடைபெற்று வருவது போன்று ஒரிய மொழியிலும் புத்தகங்கள் வெளிவரவேண்டும் என்பது என்னுடைய ஒரே குறிக்கோளாய் இருந்தது.

''ஆனால் ஐயோ! ஒரிசாவில் எழுத்தாளர் எங்குளர்? ஒரிய மொழியில் வார அல்லது மாத இதழ் ஏதுமில்லையாதலால் நான் எழுத்தாளனாக முடியுமா? அவ்வப்பொழுது சோமப்பிரகாசம் என்ற வங்காளி இதழுக்கு நான் சிறிய கட்டுரைகள் அனுப்புவது வழக்கம். அவையனைத்தும் வெளியிடப்பட்டதால், நானும் ஓர் எழுத்தாள னாகலாம் என்ற நம்பிக்கை என்னுள் வளர்ந்தது. இதற்கிடையில் கிராமத்தில் கிருஷ்ணலீலாப் பாடல்களில் என்னுடைய திறமை யைச் சோதிக்க முயன்றேன். பொது மக்கள் முன்னிலையில் நடந்த நிகழ்ச்சிகளில் அவை பாடப்பட்டது எனக்கு ஊக்கமளித்தது.

''அதன் பிறகு உரைநடையிலும் பெரிதாகக் கைவரிசையைக் காட்டினேன். ஓர் இளவரசன் வரலாறு என்பது தலைப்பு. நண்பர்கள் அதைப் பாராட்டியதால் ஒரிசா முழுவதிலுமுள்ள ஒரே அச்சுக்கூடமான கட்டாக்கிலுள்ள மிஷன் அச்சுக் கூடத்திற்கு எழுத்துரையை அனுப்பினேன். அச்சுக்கூலி ரூ. 300/- ஆகும் என்று தெரிவிக்கப்பட்டபொழுது நான் மிகவும் திகிலடைந்தேன். அதைத் தொடர்ந்த மன வருத்தத்தில் ஓர் இளவரசன் வரலாறு காற்றோடு காற்றாய்ப் போய்விட்டது.''

### ஒரியர்களும் அச்சுப் புத்தகமும்

''கவர்ச்சிகரமான ஆரவாரச் சொல்லாட்சியுடன் பலவித மான சந்தங்களிலும் இராகங்களிலும் இலக்கியத்தைக் கவிதை வழி நுகர்ந்து பழகிய சாதாரண ஒரியர் உரைநடை படிக்க முடியாதவர். மக்கள் மனத்தைக் கவர்ந்த அச்சான இலக்கியக் கவிதை நூல் ஒன்றுகூட அப்பொழுதில்லை. எனவே நாங்கள் சிலர் கூடி, ஒரியர்கள் அச்சுப் புத்தகங்களைப் படித்துப் பழக மலிவான விலையில், பலரும் அறிந்த ஒரிய மொழிக் கவிதை நூல்கள் எளி தாகக் கிடைக்குமாறு செய்யவேண்டும் என்று முடிவு பண்ணி னோம். இந்த ஒன்றை மட்டும் நிறைவேற்ற ஓர் அச்சுக்கூடம் வேண்டுமென்றும் தீர்மானித்தோம். இனிமேலும் கட்டாக் அச்சுக்கூடத்தின் ஈகையை நம்பியிருத்தல் கூடாது.''

### சேனாபதியின் அச்சுக்கூடம்

பாலேசுவரில் ஒரிசாவின் இரண்டாவது அச்சுக்கூடத்தை நிறுவப் பள்ளியாசிரியரான இளைஞர் சேனாபதி முற்பட்டார்.

ஐயுறவு மனப்பான்மையுடையவர்களிடமிருந்தும் தயக்கம் காட்டு பவர்களிடமிருந்தும் பணம் சேகரித்துக் கூட்டுப் பங்குதாரர் நிறுவனத்தை உண்டாக்க முயன்ருர்; ஏனெனில் அவரிடம் சொந்த மாகப் பணமில்லே. இத்திட்டத்தில் துணிந்திறங்கி வெற்றி கண்டது ஒரு சாதனே என்பதை நினேவில் வைத்துக்கொள்ள வேண்டும். கவிஞர் ராதாநாத் பிற்காலத்தில் குறித்தது போன்று கூட்டுறவு நடைமுறையிலேயே பாலேசுவரில் சேனுபதி நிறுவிய நிகழ்ச்சி ஒன்று மட்டுமே தற்கால ஒரிசா வரலாற்றில் அவருடைய பெயரை நிலேத்திருக்கச் செய்யும்.

சேனுபதியின் அச்சுச் சாதனங்கள் மாட்டு வண்டிகளில் கல்கத்தாவிலிருந்து பாலேசுவர் வந்து சேர இருபத்திரண்டு நாள்களாயின. பாலேசுவர் முழுவதிலும் அந்நாள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த திருநாளாகும். அச்சடிக்கும் 'மந்திரஜாலம்' பட்டப்பகலில் நடைபெறும் என்றறிவிக்கப்பட்டிருந்தது. கலேக்டர் அலுவலகம் கிட்டத்தட்ட வெறிச்சோடியிருந்தது. பெருவாரியான எழுத்தர் நேராகவே அச்சடிப்பதைக் காணத் 'தற்செயல்' விடுமுறை (Casual Leave) எடுத்துக்கொண்டனர். பல மாதங்கள் வரை தொலேவிலிருந்து பணக்காரர் அச்சுயந்திரம் வேலே செய் வதைக் கண்டுகளிக்க பல்லக்குகளில் வந்தனர். வெற்றிகரமாக அச்சுக்கூடம் ஆறு மாதங்கள் செயற்பட்ட பிறகு ஜான் பீம்ஸ், ஒரிசா டிவிஷன் கமிஷனர் T. E. ராவென்ஷா போன்ற பிரமுகர்கள் அச்சுக் கூடத்தை வந்து பார்த்தார்கள். வெஸ்ட்மின்ஸ்டரில் வில்லியம் காக்ஸ்டன் என்பவருடைய இதே போன்ற முதன் முயற்சியைப் பிரிட்டிஷ் அரசரும் ராணியும் வந்து பார்த்ததை இவ்வருகை ஒத் திருந்தது. சேனுபதியின் அனுபவங்களேச் செவியுற்ற ராவென்ஷா அவருக்குப் பத்து ரூபாய் வெகுமதி அளித்தார். அப்பணத்தைச் சேனுபதி பங்காக மாற்றிக்கொண்டார். கம்பெனி மூடியபொழுது பங்குத் தொகையாகவும் மிஞ்சிய சொத்தைப் பகிர்ந்துகொண்ட வகையிலும் ராவென்ஷாவுக்கு அவர் முப்பது ரூபாய் கொடுத்தார்.

### இதழ்களின் ஆசிரியர்

ஓயாது உழைத்த உரமுள்ள இளேஞர் பக்கீர்மோகன் நமக்குப் பெஞ்சமின் பிராங்கிளினே நினேவூட்டுகிருர். வெற்றிகரமாய் ஓர் அச்சுக்கூடத்தை நிறுவிய சாதனேயோடும், ஆசிரியராகவும், தலேமையாசிரியராகவும், நூலாசிரியராகவும் பணியாற்றிப் புகழ் பெற்ற தகுதியோடு போதுமென்று அவரிருந்து விடவில்லே. சேனுபதி போததாயினி, பாலேசுவர் சம்வாத பாஹிகா என்ற இதழ் களேயும் வெளியிட்டார். பின் சொல்லப்பட்டது செய்திகளேயும் குறிப்புகளேயும்; முன் சொல்லப்பட்டது இலக்கியத்தை மட்டும்

தாங்கிவந்தன. இதழ்களின் ஏகபோக எழுத்தாளர், அச்சிடுவோர், வெளியிடுபவர், வழங்குபவர், பண உதவி செய்பவர் என்ற எல்லாம் திரண்டு ஒருவராய்ப் பக்கீர்மோகன் விளங்கினுர்.

# 5. நாட்டுமொழியைக் காப்பாற்றியவர்

**பா**லேசுவர் அரசு உயர்நிலைப் பள்ளியில் நியமிக்கப்பட்ட வங்காளிப் பண்டிதர் வங்காளத்திலிருந்து நேராக வேலைக்குப் பொறுக்கப்பட்டவர். ஒரியா தனித்தியங்கும் மொழியல்ல வென்றும் அது வங்காளியின் கிளை மொழியென்றும் உடனடியாக ஒரிசா முழுவதிலும் அம்மொழியை அகற்றி வங்காளி மொழியை அவ்விடத்தில் இருத்தவேண்டும் என்பதுவும் அவர் வாதம்.

தம்முடைய மொழிக்கும் மக்களுக்கும் நேர்ந்த நெருக்கடி குறித்துப் பக்கீர்மோகன் சொன்ன துடி துடிக்கும்—குழப்பமூட்டும் சொற்கோவை பின்வருமாறு:

''பாலேசுவர் மாவட்டப் பள்ளிக்கூடத்து வங்காளித் தலைமை யாசிரியர் வங்காளிப் பள்ளிக்கூட உதவிக் கண்காணிப்பாளர் மூல மாக பள்ளிக்கூடக் கண்காணிப்பாளர்க்கு பண்டித காந்தி சந்திர பட்டாசாரியரின் இப்புத்தகத்தை அனுப்பினுர். அக்காலத்தில் ஒரிசா முழுவதும் மிட்னுப்பூரில் தலைமை அலுவலகத்தைக் கொண்ட கல்வி வட்டத்தின் பகுதியாய் இருந்தது. R.L. மார்ட்டின் என்ற ஆங்கிலேயர் பள்ளிக்கூடங்களின் கண்காணிப்பாளராயிருந் தார் என்பது உண்மையே. என்ருலும் அவருடைய மேற்பார்வை யில் பணிபுரிந்த அலுவலர்கள் எல்லோரும் வங்காளிகளே. பாலேசுவர் உயர்நிலைப் பள்ளியில் இனிமேல் சமஸ்கிருதமும் வங்காளியும் மட்டுமே படிக்க வேண்டுமென்றும் ஒரியா அறவே கூடாதென்றும் மிட்னுப்பூர் பள்ளிக்கூடக் கண்காணிப்பாளரிட மிருந்து ஆணைகள் வந்தன.

சேனுபதியின் எதிர்முனைத் தாக்கு

''பாலேசுவரிலுள்ள ஒரு சில படித்த ஒரியர்களாகிய நாங்கள் துணுக்குற்று இடியேறுண்டவர்கள் போலானேும். குழம்பி என்ன செய்வதென்று தெரியாமல் எங்களுக்குள் முணுமுணுத்தோம். எங்களுக்கு உண்மையாகவே என்ன நேர்ந்தது? இப்பொழுது என் செய்வது? எங்களுடைய மண்ணில் எங்களுடைய மொழியை இனி மேல் நாங்கள் படிக்க முடியாதா?

''நான் என்னுடைய கூட்டத்தை உசுப்பினேன். எங்களுடைய தாய்மொழியைக் காப்பதற்கான வழிவகைகளைக் கண்டுபிடிக்க இரவும் பகலும் எங்கள் மூளைக்கு வேலை கொடுத்தோம். கிடைத்த விடையோ ஏமாற்றமளித்தது. கீழ்மட்ட ஒரிய அலுவலர்களை ஒன்றுகூட்டி ஒருங்கிணைந்து செயல்படக் கோரினேம். இது மொத்தமும் அரசு காரியம் பாருங்கள். அரசு விதிக்கும் முறைப் படி நம்முடைய குழந்தைகள் கல்வி பயில்வார்கள். அரசு முடிவை எதிர்த்து நாம் நமக்கே கேடு விளைவித்துக் கொள்ளலாமா?'' என்று அவர்கள் ஒருமனதாகச் சொன்னார்கள்.

''இந்த அலுவலர்கள் குறிப்பைப் பின்பற்றிச் சில பணக்காரர் களும் ஜமீன்தார்களும் எங்கள் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்க மறுத்தார்கள். 'எல்லா வலிமையும் படைத்த அலுவலர்களே எதிர்க்க முடியாத காரியத்தில் தலையிட்டு அரசு எங்களைத் துன்புறுத்தட்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா' என்று அவர்கள் கேட்டார்கள்.''

எனினும் இத்தகைய ஏமாற்றம் விளைவிக்கும் அனுபவங் களால் மனந்தளராது பாதிரிப் பள்ளிக்கூடத்துத் தலைமையாசிரியர் ஒன்றுவிட்டு மற்றொன்ருகப் பலவழிகளில் முயன்றுகொண்டே யிருந்தார். மீண்டும் ஒரு முறை ஒரிய அலுவலர்களைத் திரட்டி அவர்களுடைய பொருளாதாரப் பிணைப்புக்களை உந்தக்கூடிய வகையில் தனிச்சிறப்புடன் திறமையாக அவர் பேசியதாவது:

''அன்பர்களே, ஒரியாவின் இடத்தில் வங்காளியை அமர்த்து வது அரசின் முடிவேயல்ல. அது ஒரு வங்காளிச் சதியாகும். பள்ளிக்கூடங்களின் ஆங்கிலேயக் கண்காணிப்பாளரை ஏய்த்து அவர்கள் இக்காரியத்தைக் கைவரப்பண்ணினர். அன்புகூர்ந்து தெரிந்துகொள்ளுங்கள். பள்ளிக்கூடத்தில் வரப்பெற்ற இவ் வெற்றியினுல் விரைவில் நீதிமன்றங்களிலிருந்தும் அலுவல் நிலையங் களிலிருந்தும் ஒரிய மொழியை அகற்றிவிடுவர். திரையிடப்பட்ட இம்முயற்சிக்கான காரணத்தை நீங்கள் உணரவில்லையா? பழைய அரசு மொழியான பாரசீகத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியும். ஆங்கிலமறிந்த வங்காளிகளுக்கு இடம் கொடுக்கவே பாரசீக மொழி நீக்கப்பட்டது. சிறுவயதில் நீங்கள் உழன்று பெற்ற பாரசீக அறிவு வீணய்ப்போய்விட்டது. இப்பொழுது ஒரிய மொழியை அகற்றி அவ்விடத்தில் வங்காளியை நிலைநிறுத்தினுல் தலைமுறை தலைமுறையாக எல்லா வேலைகளும் வங்காளிகளிடம் நிரந்தரமாகப் போய்ச்சேரும். கல்கத்தாவிலிருந்து வரும் புதிய வங்காளிகளின் கூட்டங்களுக்கு இடம் கொடுக்க நீங்களெல்லாம் மொத்தமாக ஒரே தடவையில் நீக்கப்படலாம். உங்களுடைய

பிள்ளைகளுக்கும் பிள்ளைகளின் பிள்ளைகளுக்கும் கிடைக்கவிருக்கும் வாய்ப்புக்களை என்னென்று சொல்வது, பாழிருட்டுத்தான்.''

''நான் சொன்ன சில வாக்கியங்கள் அக்கூட்டத்தில் உடனே பரபரப்பை உண்டாக்கியது'' என்று பக்கீர்மோகன் எழுதுகிறார். அவர் மேலும் சொல்வதாவது: ''இல்லை, இல்லை, அது கூடாது, நம்முடைய குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் ஒரியாதான் படிக்க வேண்டும், என்ன செய்யவேண்டுமென்று சொல்லுங்கள். நாங்கள் அதை உடனே செய்கிறோம்'' என்று அவர்கள் சேர்ந்து கத்தினார்கள்.

''அரசுக்கு விண்ணப்பித்துக் கொள்வதுவே எளிய வழி. அரசு மீண்டும் ஒரியாவைப் பள்ளிக்கூடங்களில் நிலைநாட்டுவர். வருங் காலத்தில் வங்காளிகள் எல்லா வேலைகளையும் பெறுவதை அது தடுக்கும்'' என்று நான் மறுமொழி கூறினேன். 'விண்ணப்பத்தை உடன் எழுதுக' என்று அவர்கள் உரக்கச் சொன்னார்கள்.

''விண்ணப்பம் வரையப்பட்டுக் கையொப்பங்கள் சேகரிக்கப் பட்டன. மாவட்டக் கலெக்டரிடம் இது வழங்கப்பட்டது. ஒரியர் களின் நல்லகாலம், அப்பொழுதிருந்த எல்லா பிரிட்டிஷ் அதிகாரி களும் ஆங்கிலக் கிறிஸ்தவப் பாதிரிமார்களும் எங்களுக்குச் சாதகமாயிருந்தனர். எங்களுடைய எதிர்ப்பு நடவடிக்கையை அப் பொழுது அவர்கள் ஆதரித்தார்கள். மொழியியல் கல்விமானான பாலேசுவர் மாவட்ட மாஜிஸ்திரேட் ஜான் பீம்ஸ் என்பவரிடம் இந்த மக்கள் விண்ணப்பம் சேர்ந்தபோது அவர் தமது வலுவான பரிந் துரையுடன் அதை ஒரிசாப் பிரிவின் கமிஷனரான T.E. ராவென்ஷா வுக்கு அனுப்பினார். பரிந்துரைக்கு அரண்செய்யுமாறு அவர் இன் னொன்றும் செய்தார். ஒரிய மொழியின் சார்பின்றி இயங்கும் தன்மையையும் பழைமையையும் விளக்கும் துண்டு வெளியீட்டில் அதனுடைய உரிய வளர்ச்சிக்குப் போதுமான வழிவகைகளை வகுத்துரைத்து அதன் படியொன்றையும் அனுப்பிவைத்தார்.''

''ஒரிசாவினுடையவும் ஒரியர்களுடையவும் நலத்தை விரும்பும் பெரிய மனிதரான T. E. ராவென்ஷா ஒரியா சார்பில் வலுவுள்ள குறிப்புரையும் அரசுக்கு அனுப்பினார். ஒரிசாவிலுள்ள பள்ளிக் கூடங்களிலிருந்து வங்காளியை அகற்றிவிடுவதோடு மட்டுமன்றி ஒரிசா முழுவதிலும் ஒரிய மொழி வளரப் புதிய பள்ளிக்கூடங்கள் நிறுவப்பட வேண்டுமென்றும் அரசு ஆணைகள் வந்தன.''

''எனவே பெருந்தன்மை படைத்த மனிதர்களான மாவட்ட மாஜிஸ்திரேட் பீம்ஸ், கமிஷனர் ராவென்ஷா என்ற இரண்டு பிரிட்டிஷாரையும் ஒரிசா நன்றியுடன் நினைவு கூரவேண்டும்.''

# 6. வகை தொகை தெரிந்த நிர்வாகி

பாலேசுவரில் பத்தாண்டுகாலம் வெற்றியுடன் பள்ளியாசிரியராய்ப் பணியாற்றிய பக்கீர்மோகன் வாழ்நாள் முழுவதும் தன்னுடைய ஒரே தொழிலாக ஆசிரியப் பணியை மேற்கொள்ள முடிவு செய்து விட்டார். ஆனால் அப்பொழுதுவரை தனியார் பள்ளிக்கூடங்களில்தான் பணியாற்றினர். அரசின் கல்விப்பிரிவில் உறுதியாகக் கூடுதல் சம்பளமும் மிகுதி; வேலை உயர்வுக்கான வாய்ப்புக்களும் இருந்தன. தேடிச் செல்லாது அத்தகைய வாய்ப்பு நம் இளவயது ஆசிரியரின் கடைவாயிலில் காத்து நின்றது. கட்டாக் நார்மல் (ஆசிரியர் பயிற்சி) பள்ளிக்கூடத்தின் இரண்டாவது பண்டிதர் வேலை காலியானதும் பள்ளிக்கூடக் கண்காணிப்பாளரான திரு. R.L. மார்ட்டின் பாலேசுவர்ப் பாதிரிப் பள்ளியின் திறமை வாய்ந்த தலைமையாசிரியர்க்கு அதையளிக்க முன்வந்தார். கட்டாக் ஒரிசாவின் நிர்வாகத் தலைமை அலுவலகமுமாகும்; அறிஞர்க்கும் உரிய இடம். சேனுபதி வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்தைக் காட்டிலும் மூன்று மடங்கு சம்பளம் அதிகம். வேறு பல வசதிகளும் உண்டு. எனவே, கட்டாக்கில் வழங்கப்பட்ட வேலையை ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தது இயல்பே. ஆனால் அதைப்பற்றி E.C.B. ஹல்லம் பாதிரியாரிடம் அவர் பேசிய பொழுது கட்டாக்கில் உள்ள புதிய வேலையில் எதிர்பார்க்கும் சம்பள அளவுக்கு அவருடைய சம்பளத்தை உயர்த்தி அவர் கட்டிக் காத்த பள்ளியை விட்டகல வேண்டாம் என்றும் வேண்டிக் கொண்டார்.

### பீம்ஸ் வழங்க விரும்பிய உதவி

அரசு வேலையில் அமர்வதற்கான அவருடைய ஆற்றெரு விருப்பம் நிறைவேறவில்லை; அவருடைய பிழையன்று. ஒரே தன்மைத்தான வாத்திமைத் தொழில் அளிக்கக்கூடிய சலுகைகளைக் காட்டிலும் மேலும் பளிச்சிடக்கூடிய வாய்ப்புக்களை ஊழ் கொணர்ந்தது.

இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்வரை ஒரிசா, ராஜாக்கள், மகாராஜாக்கள், நிலச்சுவான்தார்கள் ஆகியோருடைய நாடாயிருந்தது. பாலேசுவர் மாவட்டத்தை ஒட்டியுள்ள நீலகிரி ஒரு சிறிய சுதேச சமஸ்தானம். இளவரசு முறை நீக்கப்பட்ட பிறகு சுதந்திர இந்தியாவுடன் அது இணைக்கப்பட்டது. புதிய திவான் தேவைப்பட்டபொழுது திரு. ஜான் பீம்ஸ் அவ்வேலையைப் பக்கீர்மோகனுக்கு

அளிக்க முன் வந்தார். பள்ளிக்கூட ஆசிரியரும், அச்சுக்கூட நிறுவனருமான பக்கீர்மோகன் பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் தோற்று வித்த தாக்கம் அதற்குக் காரணமாயிருக்கலாம். பீம்ஸ் அளித்த வாய்ப்பை எவ்விதத் தயக்கமுமின்றி அவர் ஒப்புக்கொண்டார். இன்றுகூட எவர்தாம் அவ்வாறு ஒப்புக்கொள்ளாமல் இருப்பர்?

இருபத்தெட்டாவது இளவயதில் பக்கீர்மோகன் நீலகிரி சமஸ்தானத்தின் திவானாக 1871–ஆம் ஆண்டில் சேர்ந்தார். அப்போதிலிருந்து திவானாகவோ, உதவித் திவானாகவோ, மேலாளராகவோ, உதவி மேலாளராகவோ டம்படா (Dompada), டேங்காணல், தஸ்பல்லா, பால்-லகடா, கேலூஞ்சர், கேந்திரப்பரா ஆகிய சுதேச சமஸ்தானங்கள்—ஜமீன்கள் ஆகியவற்றில் பணியாற்றினார். நிர்வாகத்துறையில் பல்வேறு அனுபவங்களுடன் பணியாற்றி 1892 ஆம் ஆண்டில் அவர் ஓய்வு பெற்றார். அவர் ஆற்றிய பணிகள் இந்தச் சாதகமான சூழ்நிலையைப் பெற உதவின. பள்ளிக்கூட ஆசிரியராயிருந்து பெறக்கூடிய அனுபவங்களைக் காட்டிலும் மேலும் பரந்த இடத்தில் ஆண்களையும் பெண்களையும் அவர்களிடம் நிலவிய தொடர்புகளையும் தொல்லைகளையும் அவர் கண்டறிந்தார். அவருடைய கதைகளும் நாவல்களும் உயிர்த்துடிப்புடன் விளங்க இந்நோக்குகள் அவர்க்கு உதவின. எனவே, ஜான் பீம்சினால் திவான் பதவி வாய்ப்பு அவர்க்கு அளிக்கப்படாமலிருந்தால் மாவட்டப் பட்டணமொன்றில் வெறும் இரண்டாந்தர ஓரிய ஆர்வலராக அவர் மறைந்து போயிருப்பார்; ஓரிய மொழி இலக்கியமும் இவரின் பேனாமுனையிலிருந்து மலர்ந்த அரும் படைப்புக்களை அடைந்திராமல் போயிருக்கலாம்.

## தற்கால வாதி

எங்கெல்லாம் திவானாகவும் மேலாளராகவும் சென்றாரோ, அங்கெல்லாம் பக்கீர்மோகன் புது மாறுதல்களைப் புகுத்த முயன்றார். கிட்டத்தட்ட நூறாண்டுகட்கு முன்னர் தேயிலையை வாணிப நோக்கத்தோடு பயிரிடப் பக்கீர்மோகன் திட்டமிட்டிருந்தாரென்பது வாசகர் பலருக்கு வியப்பூட்டலாம். செவ்வையான சந்தைக் கடை, சமஸ்கிருதப் பள்ளிக்கூடம், ஆங்கிலப்பள்ளி முறைத் தொடக்கம், வெளியுலகுடன் நீலகிரியை இணைக்கும் சாலைகள், விரிந்து பரந்த தென்னை நடுகை ஆகியவற்றை முதன் முதல் நிறுவியவர் அவரே. அவர் வேலைக்கமர்ந்த இடங்களிலெல்லாம் மேற்கு நாட்டு மலர்கள், காய்கறிகள் ஆகியவைகளை உள்நாட்டு மக்களுக்கு அறிமுகப்படுத்தும் வகையில் செவ்வனே செழிப்புடன் விளங்கும் தோட்டங்களை அவர் அமைத்தார். தோட்டத்தில் அவருக்கு மிகவும் பிடித்தமான இடம் ரோஜா

உள்ள பகுதியே. அரிய-பொறுக்கியெடுக்கக்கூடிய தொலேவிலிருந்து சேகரித்த உயர்தர வகைகளே எப்போதும் அங்கே காணலாம். அப்பொழுதுதான் ஜப்பானிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஹுஸ்ஞ ஹேஞ (husna hena) மலர்களின் மென்மையான மணத்தை இரவில் நுகர்ந்து அவர் மட்டற்ற மகிழ்ச்சியில் திளேத்தார். கடலுக்கப்பாலிருந்து வந்த அயல்நாட்டு அழகு மலர் பற்றி முழுவதுமே கவிதை அஞ்சலி புனேந்தாரென்பது அத்தகைய மகிழ்ச்சிக்கு எடுத்துக்காட்டு. முட்டைக்கோசு, காலி பிளவர் (Cauliflower) போன்ற மேலே நாட்டுக் காய்கறிகளே ஒரிசா கிராமவாசிகளுக்கு அறிமுகப்படுத்தியது பற்றியும் அவர் குறிப்பெழுதியுள்ளார். தஸ்பல்லா என்ற இடத்தில் தோட்டத்தில் விளேந்த முட்டைக்கோசுகளே சில கிராமத்து மணியக்காரர்களுக்கு (padhans) அவர் வழங்கிஞர். சிறிதுகாலம் கழித்து அவர்களேச் சந்தித்தபொழுது தான் வழங்கிய காய்கறிகள் பிடித்தமாயிருந்தனவாவென்று அவர் வினவிஞர். ''ஹுஜூர்! உப்புக் கஞ்சியுடன் கொதிக்கக் கொதிக்க ஆவி வரும்படி இந்த வேடிக்கைப் பொருளே எங்கள் பெண்கள் காய்ச்சிஞர்கள். ஆஞல் அது தன்னுடைய புழுதி நாற்றத்தை விடவேயில்லே, பாருங்கள்'' என்று கிராமவாசிகள் விடையளித்தனர்.

சேஞபதியின் சுயசரிதம் பெரும்பகுதி திவாஞகவோ அல்லது மேற்பார்வையாளராகவோ அவர் பெற்ற சுவையான அனுபவங்களேத் தனக்கே உரிய எளிய நடையில் வண்ணமாகக் கொண்டுள்ளது. அவர் வரைந்துள்ளதை ஆதாரமற்ற தற்பெருமை என்று கொள்ள முடியாது. அவருடைய திறமைக்குச் சான்ருகப் பிரிட்டிஷ் அதிகாரி உரைப்பதாவது:

வங்காள அரசின் செயலருக்கு வழங்கிய 1873—ஆம் ஆண்டுக்குரிய அறிக்கையில் ஒரிசா டிவிஷன் கமிஷனரான T.E. ராவென்ஷா என்ற உயர் அதிகாரி பின்வருமாறு உரைக்கிருர்:

''பாலேசுவர் பாதிரிப் பள்ளிக்கூடம் நானறிந்த சிறந்த ஒரியர்களில் ஒருவரான பாபு பக்கீர்மோகன் சேஞபதி என்பவரால் நடத்தப்பட்டது. எனினும் நீலகிரி ராஜாவின் திவாஞகப் பெரிய வேலேக்கு அதைவிட்டுப் போய்விட்டார். திவான் பொறுப்பில் சீர்திருத்தங்களேக் கையாண்டு நேர்மை, நீதி என்ற கொள்கைகளேப் புகுத்தியுள்ளார் என்பதைக் கண்டு நான் மகிழ்கின்றேன். அந்த நேர்த்தியான மனிதரிடமிருந்து பெற்ற மறைமுகமான நன்மைகளில் இதுவும் ஒன்ருகும். அவருடைய பணியை இழந்தது குறித்து நாங்கள் மிகவும் வருந்துகிருேம்.''

**அறியாமலேயே மெஷிய வெல்லியின் சீடர்**

சற்றுமுன் நோக்குங்கால், மெஷிய வெல்லி, இளவரசன் என்ற தன்னுடைய நூலில் அரசர் பின்பற்ற வேண்டிய வழிகளை எடுத்துரைத்தார். முற்றிலும் அதையறியாத பக்கீர்மோகன் இத்தாலிய அரசியல்வாதியும் படிப்பாளியுமான மெஷிய வெல்லியின் அறிவு சால் புத்திமதிகளைக் கடைப்பிடித்தார். கடினமான நிர்வாகச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும்போது கொடுமைக்குள்ளான குடியானவர்களின் தந்தை போன்ற நன்மை பயப்பவராயும் கல் நெஞ்சவஞ்சக் காரியம் சாதிப்பவராயும் ஆகிய இருபாத்திரங்களிலும் மெஷிய வெல்லியைப் பின்பற்றினர். தன்னிடமிருந்த அரசியல் சூழ்ச்சியால் காரியம் சாதிப்பதைத் திறமையான நிர்வாகியான அவர் மறைக்கவில்லை.

காந்தியின் ஒத்துழையாமைக் கொள்கை உலகப்புகழ் பெறுவதற்கு வெகு காலத்துக்கு முன்னரே ஒரிசா முழுவதிலும் அது சமூக—அரசியல் நடைமுறையாயிருந்தது. தற்காலத்துக்கு முந்திய நிலையில் நாகரிகம் முதிராத இனங்கள் வாழும் தொலைவுக் கிராமப் பகுதிகளில் இன்றும் அது நிலவுகிறது. சுமார் ஒரு நூற்றுண்டுக்கு முன்னர் அடங்கா வெறிபடைத்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் இந்த நூற்றுண்டின் இருபதாவது ஆண்டுகளில் காந்தீய மக்கள் இயக்கத்தைச் சமாளித்தது போன்று பக்கீர்மோகன் ஒரிசா விவசாயிகளின் ஒத்துழையாமையையும் சாத்துவிக எதிர்ப்பையும் சமாளித்தார்.

**டம்படாச் சிக்கல்கள்**

கட்டாக் மாவட்டத்தோடு இணைக்கப்பட்ட டம்படா (Dompada) ஒரு சிறிய ஜமீன். பக்கீர்மோகன் அங்கு திவானுகச் சென்றபோது கல்கத்தாவில் கல்வி பயின்றவர் புது ராஜாவாக இருந்தார். காட்டிலிருக்கும் தலைநகர் வாசத்தைக் காட்டிலும் சலிப்பான நகர்ப்புற வாழ்க்கையே அவருக்குப் பிடித்திருந்தது. ஆகையால், அவர் தன்னுடைய பெரும்பகுதிக் காலத்தை கட்டாக், கல்கத்தா இன்னும் பல இந்திய நகரங்களில் கழித்தார். தன்னுடைய மூதாதையரின் அரண்மனையையும் ராணி உட்படக் குடிமக்களையும் முழுதும் துறந்தே வாழ்ந்தார். நகரங்களில் தனக்கு வேண்டிய மட்டுக்கடங்காச் செலவுகளுக்கு மேலும் மேலும் பணம் பெறுவதையே அவர் விரும்பினர். இதற்காகத் தம்முடைய ஜமீனில் புதிய வரித்திட்டம் ஏற்படுத்த விரும்பினர். அதன் பொருள் பழைய வரிகளை உயர்த்துவதே.

ஆனல் வரி கொடுக்க யார் விரும்புவர்? படிப்பில்லா கிராம மக்களும் இதைத் தீவிரமாக எதிர்த்தனர் என்பதில் வியப்பில்லை.

பல விவசாயிகள் ஆண்டனுபவித்த நிலங்கள் அவர்க்குச் சொந்தமானதன்று. அந்நிலங்களுக்கு அவர்கள் ஒரு பைசுடச் செலுத்தியதில்லை. புதிய வரித்திட்டம் என்று அஞ்சினுர்கள். வரிகொடாத உரிமையாளர் கூட்டத்தில் பிராமணர்களும் மணியக்காரரும் உண்டு. கல்வியறிவில்லாக் குத்தகைதாரர்களைத் தங்களுடைய சட்டத்துக்குப் புறம்பான சலுகைகளைக் காப்பாற்றிக் கொள்ள மக்கள் புரட்சியிலீடுபட அவர்கள் தூண்டினுர்கள். ஒப்பந்தத்துக்கு ராஜாவின் எதிர்ப்பு வலுக்கவும் மக்கள் வாடகைகளையும் வரிகளையும் கொடுப்பதை நிறுத்திக்கொண்டு ராஜாவின் குடும்பத்தினரையும் வரிவசூலிப்போரையும் சமூகத்தில் ஒட்டாமல் ஒதுக்கினுர்கள்.

முப்பத்துமூன்று வயது இளைஞரான பக்கீர்மோகன் வந்தபோது நாலா பக்கமும் காடுகள் சூழ்ந்து ராஜாவின் அரண்மனை மிக மோசமான நிலையிலிருந்தது. ராஜாவோ கடன் வாங்கி வாழ்ந்து கொண்டு பெரும்பாலும் ஊரில் இருப்பதில்லை. அவருடைய அந்தப்புரத்தினர் கட்டாக் ஜில்லா மாஜிஸ்திரேட்டிடம் ஜீவனும்சத்துக்கு மனுப்போட்டனர். கட்டாக்கின் ஜில்லா மாஜிஸ்திரேட்டான ஜான் பீம்ஸ் அத்தொல்லை பிடித்த இடத்துக்குப் பக்கீர் மோகனை அனுப்பினுர். நிலச்சுவான்தாருக்கும் குடியானவர்களுக்குமிடையில் உடன்பாட்டை ஏற்படுத்தத் திறமைசாலியான பக்கீர்மோகனுல் முடியுமென்று அவர் நம்பினுர்.

ஒத்துழையாமை ஓர் ஒரிய நடைமுறை

பக்கீர்மோகன் தீர்வு காண முயன்று கொண்டிருக்கையில் அணைந்துகொண்டிருந்த கங்குகள் எரியத் தொடங்கின. முன்னுள் திவானும் வசதிபடைத்த உள்ளூர் நிலச்சுவான்தாருமான ஒருவர் தலைமைதாங்கி அவர் காட்டிய வழியைப் பின்பற்றி எதிர்ப்பாளர் போட்டி நிர்வாகம் ஒன்றை அமைத்தனர். அவர்கள் எல்லா கிராமங்களுக்கும் தாக்கீதுகள் அனுப்பி மக்களின் எல்லாப் பிரிவினரும் அரண்மனையுடன் சமூக—வாணிபத் தொடர்புகளைத் துண்டித்துவிடக் கோரினர். அரண்மனை வேலைக்காரரும் அஞ்சினர். உள்ளூர் வண்ணுன் அரண்மனைத் துணிகளை வெளுக்க மறுத்துவிட்டதால் கட்டாக்கிலிருந்து துணிகளை வெளுத்து வாங்க வேண்டிய நிலைமை வந்தது. மீனவர், தண்ணீர் வழங்குவோர், பால்காரர் ஆகியவரும் தொன்று தொட்டு அரண்மனைக்குச் செய்து வந்த தொழில்களை நிறுத்திவிட்டனர்.

இருதரப்பினர்க்கும் நலன் கருதிய பக்கீர்மோகன் இருசாராரின் அவநம்பிக்கைக்குள்ளானுர். ராஜா அவரை மாஜிஸ்திரேட்டின்

ஆளென்றும் குடியானவர் அவரை ராஜாவின் ஆளென்றும் சந்தேகித்தார்கள்.

1876-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் திரு. பீம்ஸ், குறிப்பிட்ட இடத்திலேயே நிலைமையை நேரில் கண்டறிய டம்படாவுக்கு வந்தார். பக்கீர்மோகன் வேண்டுகோளின்பேரில் புதிய வரித் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். ஆனால் வரி உயர்வு அவர்க்கு உடன்பாடில்லை. ராஜாவோ இவ்விரண்டையும்பற்றிப் பிடிவாதமாயிருந்தார். அரசுவட்டாரங்களில் அவரைப் பித்துப்பிடித்தவர் என்று கருதினர். குத்தகைதாரர்க்கும் அவருக்கும் இடையில் உடன்பாடில்லையெனில் ஜமீனையே அவர் இழந்துவிடும் தறுவாயிலிருந்தார். டம்படா போன்ற ஒரிசாவின் தொன்மை அரசுவமிசம் தன்னுடைய திவான் பதவி காலத்தில் மறைந்து போகலாகாது என்பது அவருடைய ஆர்வமிக்க விருப்பமாகும்.

எட்டியுள்ள கிராமங்களில் சுற்றுப் பயணம் மேற்கொண்ட ஆங்கில ஜில்லா மாஜிஸ்திரேட்டுடன் நூறு வேலையாள்கள் தொடர்ந்தனர். ஜமீனுக்கு எதிராகச் சமூகப் பொருளாதார ஒதுக்கம் நிலவியதென்றாலும் இனிய விருந்தோம்பலுடன் அவர்களை மகிழ்விப்பது பக்கீர்மோகனுடைய கடமையாகும். எனவே ஐம்பது கல் தொலைவிலுள்ள கட்டாக்கிலிருந்து காய்கறி உட்படத் தேவையான பொருள்களை பக்கீர்மோகன் கொண்டு வரச் செய்தார். அவருக்கிருந்த தொல்லைகள் போதாதென்று குளிர் வலுக்கவும் போக்குவரத்து தடைப்படவும் மழைபெய்யத் தொடங்கியது. ஒதுக்கும் கூட்டமும் ஜமீன் ஊழியர்களும் வெளியே தலைகாட்டாமல் வீடுகளுக்குள் அடங்கிக் கிடந்தனர். இளைஞராகிய திவானே சேற்றிலும் மழையிலும் அங்குமிங்கும் அலைந்து ஜில்லா மாஜிஸ்திரேட்டை வரவேற்கும் சின்னஞ் சிறு பணியையும் மேற்பார்க்க வேண்டியதாயிற்று.

இவையெல்லாம் நடந்து கொண்டிருக்கையில் அரசியல் தந்திரமுள்ள திவான் பல குறுக்கு வழிகளைக் கையாண்டு—குடியானவர் எதிர்ப்பை ஊடுருவி அவர்களில் ஒரு பகுதியினரையாவது ராஜாவின் பக்கம் கொண்டுவர முனைந்தார்; ஒரு மட்டும் தான் வெற்றி கொண்டுவிட்டதாக எண்ணினார். ஆனால் ஏமாற்றமே காத்திருந்தது. எல்லா கிராமத்து நாட்டாண்மைகளும் முன்னணியில் நிற்கும் குடியானவர்களும் ஒருநாள் 4 மணிக்கு அவருடைய முகாமில் ஜில்லா மாஜிஸ்திரேட்டைச் சந்திப்பதற்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். தன் பக்கம் சார்ந்துவிட்டதாகக் கருதிய குடியானவர்க்குத் துரையுடன் பேசும்பொழுது நடந்துகொள்ளும் விதத்தைக் காலை முழுவதும் சொன்னார்.

நான்கு மணி அளவில் பலத்த மழை பெய்துகொண்டிருந்தது. சிறிய பனிப்புயலும்கூட. அறிஞர் பீம்சோ காடுகள் சூழ்ந்த அச் சிற்றூரில் தமக்குப் பிடித்தமான மொழியாராய்ச்சியில் போகாத நேரத்தைக் கழித்துக்கொண்டிருந்தார். இரு கட்சியினரிடமிருந் தும் முடிவில்லா வாதப் பிரதிவாதங்களைக் கேட்கும் நிலையில் அவரில்லை. பக்கீர்மோகனையும் குடியானவர்களையும் சந்திப்பதற் காக அவர் வெளியே வந்தபோது போர்வையால் தலையிலிருந்து கால்வரை மூடிக்கொண்டிருந்தார்.

மாஜிஸ்திரேட்டின் ஆணைப்படி கடைநிலை ஊழியர் கிராம நாட்டாண்மைக்காரர் வரக் குரல் கொடுத்தார். அமர்ந்திருந்த பல இடங்களிலிருந்து மாஜிஸ்திரேட்டின் கூடாரத்தின் எதிரே அவர்கள் வரிசையாக நின்றார்கள். ஆனால் பக்கீர்மோகனே காலை யில் தான் படித்துப் படித்துச் சொன்னவர்களில் ஒருவனைக்கூட அக்கூட்டத்தில் காணவில்லை. ஒருவேளை அவர்களைப் புரட்சியில் ஈடுபட்ட தலைவர்கள் தடுத்து நிறுத்திவிட்டனர் போலும்!

பீம்ஸ் தன்னுடைய கூடாரத்துக்குள் சென்று வசதியுட னமர்ந்து மீண்டும் மொழியியல் ஆராய்ச்சியில் ஈடுபடத்துடித்து அரைகுறை ஹிந்தியில் உளறினார். ''டம்படாக் குடியானவர்களே! ராஜாவுடன் உங்களுக்குள்ள பூசலைத் தீர்த்துவைக்க பக்கீர்மோகன் சமாதான முயற்சியில் ஈடுபடுவதை விரும்புகிறீர்களா?'' என்று பீம்ஸ் கேட்டார். முன்னணியில் நின்ற நாட்டாண்மைக்காரக் கூட்டத்தினர் ஒரே குரலில் ''திவான் எங்களுடைய வழக்கைத் தீர்த்து வைப்பதென்றால் மழை தூறிக்கொண்டிருக்கும். இந்த வேளை கட்டாக்கிலிருந்து இவ்வளவு தொலைவு நீங்கள் வரு வானேன்?'' என்று கத்தினார்கள். ஒரிய மொழி உட்படக் கிழக் கிந்திய மொழிகளில் அறிஞராயினும் பதான்கள் (Padhans) தங்க ளுடைய உள்ளூர் உச்சரிப்பில் உரத்துப் பேசியதை அவர் புரிந்து கொள்ளவில்லை. தனக்கு ஒரிய மொழி கற்பித்த பழைய ஆசிரி யரிடம் ''அவர்கள் சொல்வது என்ன?'' என்று கேட்டார். ''அவர்கள் சொல்வதாவது: திவான் பாபு எங்கள் சிக்கல்களைத் தீர்த்துவைப்பதில் நல்லெண்ணம் கொண்டவர். இவைபற்றிக் கனவானாகிய நீங்கள் அவதிப்படவேண்டியதில்லை'' என்று பக்கீர் மோகன் உரைத்தார். விரைவில் எதையும் சமாளிக்கும் திறன் வாய்ந்த ஆசிரியர் எவ்விதக் காலதாமதமுமின்றி விடையளித் தார்.

பக்கீர்மோகன் விளக்கத்தைக் கேட்டு மகிழ்ந்த பீம்ஸ் இறுதி யாகப் பேசியதாவது, ''மிகவும் நன்று. புதிய திவான் ஒவ்வொன் றையும் கவனிப்பார். அவர் திறமைசாலி. அவரிடம் எனக்கு

நிரம்ப நம்பிக்கையுண்டு. விடை பெற்றுக்கொள்கிறேன், குடியானவர்களே, விடை பெற்றுக்கொள்கிறேன்.''

இவ்வுரை அவர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தையளித்தது. ''என்னதான் நடந்தது? நம்முடைய நிலைமையைப் பற்றித் துரைக்கு என்னதான் விளங்கிற்று?'' என்று குடியானவர் பேசிக் கொண்டனர். நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. அறிஞரும் பள்ளிக்கூட ஆசிரியருமான மாறுபட்ட பக்கீர்மோகனைக் காண்கின்றோம். நிலைமையைச் சமாளிக்கக்கூடிய பக்கீர்மோகனாக அவர் திகழ்ந்தார். மாஜிஸ்திரேட்டின் ஆணைகள் துணைபுரியக் காவல்காரர்களிடம் அதிருப்தி கொண்டிருந்த நாட்டாண்மைக்காரர்களைத் துரத்துமாறு பக்கீர்மோகன் கட்டளையிட்டார். அவர்கள் துரையுடன் பேச்சு வார்த்தையைத் தொடங்காமலிருக்க இவ்வழியை அவர் கையாண்டார். நடந்ததும் அவ்வாறே.

காலநிலை மோசமாயிருந்ததால், பீம்ஸ் கட்டாக் திரும்புவது தடைப்பட்டது. எனவே, ஜமீனின் மற்றைய கிராமங்களை அவர் சென்று பார்க்கலானார். எதிர்பாராத விதமாகத் திவானுக்கு நெருக்கடி நீடித்தது. மாஜிஸ்திரேட்டுக்காகவும் உடன் வந்தவர்களுக்காகவும் தருவிக்கப்பட்ட உணவுப் பொருள்கள் தீர்ந்து போயின. எனவே அக்கம் பக்கத்திலேயே அவற்றைப் பெறவேண்டியதாயிற்று. முதலாவதாகப் பால்காரர்களை மறுநாட் காலை பாலும் நெய்யும் கொண்டுவரும்படி திவான் ஆணையிட்டார். ஆனால் அவர்கள் தென்படவில்லை. ஒரு மட்டும் காலையில் நேரம் கழித்து ஒரு பால்காரன் மிகக் குறைந்த அளவு பாலும் நெய்யும் கொண்டுவந்தான். பீம்ஸ் கூடாரத்துக்கு வெகு தொலைவிலில்லாத இடத்தில் ஒரு குடியானவன் திண்ணையில் பக்கீர்மோகன் உட்கார்ந்திருந்தார். வேண்டுமென்றே தாமதித்து வந்த பால்காரனைப் பார்த்ததுமே அவருக்குக் கோபக்கனல் மூண்டது. மழை தூறிக்கொண்டிருந்தது. கிராமத்தில் தெருவெல்லாம் சேறு. தெருவில் அறுக்கப்படாத பெரிய மரக்கட்டைகள் கிடந்தன. உடனேயே பக்கீர்மோகன் இரண்டு காவல் வீரர்களுக்கு பருத்த மரக்கட்டையொன்றில் அவனைக் கட்டிவைக்குமாறு ஆணையிட்டார். ஒருவன் பால்காரன் கொண்டுவந்த பாலையும் நெய்யையும் அவன்மேல் ஊற்ற மற்றவன் பக்கீர்மோகன் நிறுத்தும்படி கட்டளையிடும் வரை பிரம்பால் அவனை விளாசிவிட்டான்.

இச்செயல்முறை செவ்வனே நடைபெற்றுக்கொண்டிருக்கும் பொழுது உதைபடும் பால்காரனின் தோழர்கள் எங்கிருந்தோ ஓடி வந்து சகதியில் பக்கீர்மோகன் காலடியில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து ஒருமித்த குரலில் ஓலமிட்டார்கள். ''ஐயா, சாமி! எங்களைக் காப்பாற்றுங்கள். நீதியின் உருவமே, எங்கள் உடன்

பிறந்தானே விடுவியுங்கள். கும்பிடுகிறோம். மதிப்பிற்குரிய தாங்கள் வேண்டும் பாலேயும் நெய்யையும் உடனேயே கொணர்ந்தளிக்கிறோம்'' என்றார்கள். நியாயமான வேண்டுகோள் நிறைவேற்ற முடியாததைக் கடுமையான பிரம்பு நிறைவேற்றியது. சுமார் அரைமணி நேரத்தில் துரைக்கும் அவருடைய கூட்டத்தினர்க்கும் வேண்டிய பாலும் நெய்யும் தலேச்சுமைகளாய் வந்திறங்கின. துணிவான நடவடிக்கையால் ஒத்துழையாமை, சாத்விக எதிர்ப்பு, வரிகொடா இயக்கம் ஆகியவற்றை ஊடுருவித்தமைக்கு அது ஓர் எடுத்துக்காட்டு. திவான் பக்கீர்மோகன் எதிர்ப்பை முறியடித்தார்.

வெற்றியைப் போன்று வெற்றி பெறுவது எதுவுமில்லே. தன் சார்பில் நிலேமை திரும்பியதைக் கண்டு ஊக்கமடைந்து முன்னுள் திவான் தயாநிதி பட்டநாயக்கின் நெருங்கிய உறவினன் உட்பட முன்னணி நாட்டாண்மைக்காரர்மீது பீம்ஸ் முன்பாகப் பக்கீர் மோகன் குற்றவியல் வழக்குகள் தொடுத்தார். பட்டநாயக்தான் மக்கள் கிளர்ச்சி என்று சொல்லப்பட்டதற்கு வித்தாவான். கடைசி முறையாகத் துரையிடம் தங்களுடைய புகார்களேக்கூற நாட்டாண்மைக்காரர் முயன்றனர். அவர் தங்கியிருந்த இடத்துக்குச் சாரி சாரியாகக் கிராமங்களிலிருந்து அவர்கள் ஊர்வலமாகச் சென்றார்கள். விரைவில் செயற்படும் பக்கீர்மோகன் குற்றவியல் வழக்குகளுக்குள்ளானவர்களேக் கைது செய்யக் காவற்காரரின் குழுவொன்றை அனுப்பினர். உலர்ந்த ஆற்றுப் படுகையைக் கூட்டம் கடந்துகொண்டிருந்தபோது சேனுபதியின் ஆயுதந்தாங்கிய படையினர் அவர்களே அடையாளங் கண்டுபிடித்து குறிப்பிட்டோர்க்குக் கைவிலங்கிட்டனர். இச்செய்கை மின்னல் போன்று அவர்களேத் தாக்கியது. கலவரமடைந்த கூட்டத்தினர் தங்கள் உயிர்களேக் காப்பாற்றிக் கொள்வார்போல் அங்குமிங்கும் சிதறி ஓடினர். எதிர்ப்பு இயக்கம் அவ்வாறு முடிவுற்றது.

அப்பொழுது டம்படாவில் அமைதி நிலவத் தொடங்கியது. வழக்கமான நிலே ஏற்பட்டது. பக்கீர்மோகன் நிலவரம்புத் திட்டங்களேத் தொடங்கினர். ராஜாவுக்கு மகிழ்ச்சி. பக்கீர்மோகனே அவருடைய வாழ்நாள் முழுவதும் திவானுக வைத்துக்கொள்ளவும் ஓய்வு பெறும்போது கொழுத்த ஊதியம் கொடுக்கவும் ராஜா ஆவலுள்ளவராயிருந்தார். கமிஷனரிடம் தம்முடைய யோசனேகளே அவர் கூறினர். ஆனல் நல்லுணர்ச்சியுள்ள பிரிட்டிஷ் அதிகாரி ராஜாவின் வார்த்தைகளேக் கேட்டு மயங்கிவிடக் கூடாதென்றும் சுதேச சமஸ்தானமான டேங்கானுல் உதவிமேலாளராக அரசு பிறப்பித்த ஆணேக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும் என்றும் அறிவுரை கூறினர். அப்பொழுது அரசு மேற்பார்வையிலிருந்த

அந்தப் பதவி சம்பளத்திலும் அந்தஸ்திலும் உயர்ந்ததென்றும் அவர் சொன்னார்.

ராஜாவுக்கும் அவருடைய குடிகளுக்குமிடையில் எழுந்த நிரடான சிக்கலைப் பெருந்தன்மையுடனும் நடு நிலைமையுடனும் தீர்த்து வைத்துப் பக்கீர்மோகன் புகழ் ஒளியோடு டம்படாவுக்குப் புறப் பட்டுச் சென்றார். முன்னாள் திவான் பட்டநாயக்குக்கும் மற்றை யோர்க்கும் ஈடு வழங்கியது அவருடைய பெருந்தன்மைக்கும் மனித உணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டு. தீர்வு காண்பதில் அவர் களிடம் தான் கடுமையாய் நடந்து கொண்டதாக அவர் நினைத்ததே அதற்குக் காரணம்.

# 7. நாட்டுப் படையின் ஆணைத் தலைவர்

கேவூஞ்சர் தற்போது ஒரிசா மாநிலத்தின் ஒரு மாவட்ட மாகும். எனினும் முன்னர் பஞ்சாக்கள் ஆட்சிக்குட்பட்ட ஒரு சுதேச சமஸ்தானம். ஒரிசாவின் இடைக்காலப் புலவர்களில் மிகச் சிறந்த உபேந்திர பஞ்சா இந்த ஆளும் வகுப்பைச் சேர்ந்தவர். கேவூஞ்சர் பஞ்சாக்கள் மயூர் பஞ்சைச் சேர்ந்த புகழ்வாய்ந்த பஞ்சாக்களின் ஒரு கிளையாவார். ஒரிசாவின் இலக்கியத்துக்கும் பண்பாட்டுக்கும் அவர்கள் நன்கொடை கணிசமானது.

1887-ஆம் ஆண்டில் கேவூஞ்சர் சமஸ்தானப் பணியில் பக்கீர் மோகன் மேலாளராகச் சேர்ந்தபொழுது அவருக்கு நாற்பத்தைந்து வயது. அவர் ஆண்மைத் திறனும் ஊக்கமும் நிரம்பி விளங்கினார். கல்விப் பயிற்சியும் திறமையும் வாய்ந்த மகாராஜா தனஞ்சயபஞ்சா சமஸ்தானாதிபதியாயிருந்தார். அவர் தோற்றுவித்த நீர்ப்பாசனத் திட்டங்கள் அவருடைய நிர்வாகத் திறமையை நினைப்பூட்டும் எடுத்துக்காட்டுக்களாக இன்றும் உள்ளன. அவை குடிமக்கள்பால் அவர் கொண்டிருந்த கருணை மனப்பான்மையையும் காட்டுவ தாகும்.

### அரியணையேற்றும் பூயான்கள்

கேவூஞ்சர், பூயான் வகுப்பினரின் வீடும் நாடுமாகும். தனஞ்சய நாராயண் பஞ்சா, தரணிதர் என்ற பூயான் இளைஞரைச் சமஸ்தானச் செலவில் வரிவிதிப்பு ஆய்வுப்பயிற்சி பெறக் கட்டாக் நகருக்கு அனுப்பிய முற்போக்காளர், பயிற்சி முற்றுப் பெற்றவுடன் தரணிதர் சோதனைக்கால ஆய்வாளராக வேலைக்கமர்த்தப் பட்டார்.

நடைமுறையில் ஒரிசாவின் எல்லா முக்கிய இடங்களிலும் ஊதியமில்லாக் கொடுமையான கொத்தடிமை முறை வழக்கிலிருந்தது, ஒவ்வொரு குடும்பமும் ஓராண்டில் ஒரு குறிப்பிட்ட எண் கொண்ட நாள்கள் அதனுடைய பங்கு ஊழியத்தைச் செய்ய வேண்டும். ஏழைப் பாட்டாளி மக்கள் இக்கொடுமையால் பெரிதும் அல்லலுற்றனர். தங்களுடைய மிகக் குறைந்த அளவு நிலங்களை இளைஞர்பால் கண்காணிக்க விட்டுப் பெரும்பாலும் ஆண்களில் முதியவர் ஊதியமில்லா உழைப்பில் ஈடுபட முன் வந்தனர். இம்முதிய வேளாளர் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் உழவுக் கருவிகளையும் தாங்களே எடுத்துக் கொண்டு போய் முதுகொடிய நாள் முழுதும் வேலை செய்து, பிறகு உணவு சமைத்துத் திறந்த வெளியில் காட்டுப்பகுதியில் உறங்கினர்.

சமஸ்தானத்துப் பிற வகுப்பு மக்களைப் போன்று பூயான்களும் ஈவிரக்கமில்லாக் கட்டாய ஊழியத்துக்காளாக்கப்பட்டார்கள். பிராமணர், வசதிபடைத்த வேளாளர், அதிகாரிகள் ஆகியோர் இதற்கு அப்பாற்பட்டவர். கேஊஞ்சர் உதவி மேலாளரான விசித்திரானந்த தாஸ் சிறிய ஆற்று அணைத்திட்ட வேலையில் பூயான்களை அமர்த்தி அவர்களிடம் கடுமையாக நடந்துகொண்டார். தன்னுடைய சவுக்கை விரும்பியவாறு பயன்படுத்தி வெறும் வயிற்றில் வேலை செய்யுமாறு அவர்களிடம் வன்முறையைக் கையாண்டார். உணர்ச்சிமிக்க பூயான் மக்கள் கோபக் கனலில் கொந்தளித்தனர். பழிக்குப் பழிவாங்கும் போரில் ஈடுபடத் தங்களை உந்தச் செய்யக் கூடிய தலைவனொருவனுக்காக அவர்கள் காத்திருந்தனர். கட்டாக்கில் கல்வி பயின்ற இளைஞர் தரணிதர் தலைமை அவர்களுக்கு உரிய காலத்தில் கிடைத்தது.

சமஸ்தானம் முழுவதும் ஒரு காலத்தில் தங்களுடைமை என்ற இன நினைவும் பயனற்ற மலைப்பாங்கான உட்பகுதிகளுக்கு நேர்மையற்ற முறையில் ஒதுக்கப்பட்டதையும் பூயான்கள் அறிவார்கள். பழங்காலத்தில் கேஊஞ்சர், மயூர்பஞ்ச் சமஸ்தானத்தின் ஒரு பகுதியாயிருந்தது. ஆனால் தலைநகரோ வெகு தொலைவிலிருந்தது. அத்தனை வழி நடந்து தங்கள் தலைவனுக்குக் கடமையுணர்ச்சியைத் தெரிவிப்பதில் அவர்களுக்கு இடர்ப்பாடு இருந்தது. எனவே ஒரு தடவை மயூர்பஞ்ச் இளவரசனொருவனைக் கடத்திக் கொண்டுபோய் அவனை அவர்களுடைய ராஜாவாக்கினர்கள். ராஜா என்பவன் குதிரை அல்லது யானையில் சவாரி செய்யவேண்டும். பூயான்களிடம் அவற்றில் ஏதுமில்லை. எனவே பூயான் நாட்டாண்மைக்காரனொருவன் நாலுகால்ப் பாய்ச்சலில் பட்டத்துக் குதிரை அல்லது யானை போல் நடந்து இளவயது ராஜாவை முதுகில் அமரச் செய்து அரசு

அதிகாரத்தைப் பறை சாற்றினான். பிறகு மற்றொரு பூயான் இனத் தலைவன் ராஜாவின் முன்னால் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கவும் ராஜா அவனுடைய கழுத்தைத் தன்னுடைய வாளால் தொட்டான். அதாவது, இதன் வழி குற்றமிழைக்கும் பூயான் களைத் தண்டிக்க ராஜாவுக்கு அவ்வினத்தார் அதிகாரம் அளித் தனர். கேவூஞ்சரில் ஒவ்வொரு ராஜாவின் முடிசூட்டு விழாவின் போதும் இந்தச் சடங்கு கடைப்பிடிக்கப்பட்டது. எனவே ஒருவனை ராஜாவாக ஏற்றுவதோ இறக்குவதோ அவர்களுடைய பொறுப்பும் கடமையும் என்ற கருத்தை இச்செயல் பூயான்களிடம் தோற்றுவித் தது. அவர்கள் நாட்டில் அவர்கள்மீது கொடுங்கோல் ஆட்சி புரியும் துணிவு எவனுக்கும் ஏற்படக்கூடாது என்பதுவும் காரணமாகும்.

### பாசாங்குக்காரன்

இளைஞரான தரணிதர் கட்டாக்கிலிருந்தபொழுது நாட்டுப் பற்றையும் முன்னேற்றக் கருத்துக்களையும் தேடிக்கொண்டார். அண்டைப் பிரிட்டிஷ் மாவட்டமான சிங்பும்முடன் ஏற்பட்ட எல்லை வழக்கில் அவருடைய உடன் பிறந்தான் கோபால் மற்றும் நெருங் கிய உறவினர்களுடன் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப் பட்டான் என்பதைக் கேட்டு அவர் திகிலுற்றார். உடனே வேலையை உதறித் தம்மினத்தார் இருக்கைக்கு ஓடி அவர்களை ஆட்சிக்கெதிராகப் புரட்சி செய்யுமாறு தரணிதர் கலகத்தைத் தூண்டிவிட்டார். தன்னை மகாராணியின் சுவீகார மகன் என்று விளம்பரம் செய்து அதே பெயருடன் ஆணைகள் பிறப்பித்தார். நூற்றுக்கணக்கான பழங்குடி மக்கள் வில்லுடனும் அம்புடனும் அவருக்கு ஆதரவாகச் செயற்படத் திரண்டு, தொலைவிலுள்ள ராஜாவின் களஞ்சியங்களையும் காவல் நிலையங்களையும் தாக் கினார்கள். நீண்ட காலம் காட்டுப் பாசறைகளில் ஒளிந்தும் தங்கி யிருந்தும் தாக்குப்பிடிக்க வேண்டியதற்குப் போதுமான உணவுப் பொருள்களை அவர்கள் சேகரித்து வைத்தார்கள். கேவூஞ்சர் விவகாரங்களை மகாராஜா அரண்மனையிலிருந்த கேவூஞ்சர்கரைத் தவிர்த்து ஆனந்தப்பூரிலிருந்து பக்கீர்மோகன் நடத்தி வந்தார். ஆனந்தப்பூர் சமஸ்தானத்தின் இரண்டாவது பெரிய நகரமாகும்; சமஸ்தானத்தின் செல்வச் செழிப்புக்கு இருப்பிடமுமாகும். பூயான்களுடைய எழுச்சி பற்றிய வதந்திகளையும் வரவிருக்கும் அபாயங்கள் பற்றிய செய்திகளையும் கேட்டதுமே சுடச்சுடச் செய்தி கொண்டுவரப் பலபேர்களை கேவூஞ்சர்கருக்கும் ஆனந்தப்பூருக்கும் இடையில் ஓடியோடித் தகவல் திரட்டச் செய்தார். ஆனால் கலகம் தொடங்கிய மூன்றும் நாள் மகாராஜா தன்னுடைய ஏவ லாளர்களுடன் கட்டாக்கிற்கு ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு

அவர் திடுக்கிட்டார். எவ்விதப் பாதுகாப்புமின்றித் தன்னுடைய பெண்களையும் தவிக்கவிட்டு மகாராஜா ஓடினர்.

கலகக்காரர் கூட்டத்தைச் சமாளிக்கப் பக்கீர்மோகன் சமஸ்தான இராணுவத்தினரை அழைத்து நடுங்கிக்கொண்டிருந்த மகாராஜாவைக் கட்டாக் நகர் கொண்டு சேர்ப்பித்தார். அங்கு இராணுவ உதவிபெற அவர் முயற்சிகள் மேற்கொண்டார். பெருமளவு வெற்றி கண்டு பக்கீர்மோகன் மகாராஜாவுடன் ஆனந்தப்பூர் திரும்பினர். யானைமேல் மகாராஜா முன்னுலும் மற்றொன்றில் பக்கீர்மோகன் அமர்ந்து பின்னுலும் செல்லப் பண்டைக்கால முறையிலமைந்த படை தலைநகருக்குப் பயணமானது. பழங்குடி மக்களின் நெறிமுறையற்ற தாக்குதல்களைத் தவிர்க்க நெடுந்தொலைவுக் காட்டுச் சுற்றுப்பாதைகள் வழியாக அவர்கள் சென்ருர்கள்.

### கந்தலுடைப் படை

இரண்டாம் நாளிரவு அவர்கள் தங்கிய இடத்தில் கலகக்காரர் அரண்மனையைக் கைப்பற்றிவிட்டதாகச் செய்தி கிடைத்தது. கலவரமடைந்த மகாராஜா மீண்டும் கட்டாக் நகருக்கு ஓடிவிட்டார். அவர் ஓடுவதற்கு முன்பே தற்காப்புக்காகவும்; சொத்துக்களையும் அரண்மனையில் ஆதரவின்றித் தவிக்கும் பெண்களின் மானத்தைக் காக்கவும் மேலாளருக்கு அதிகாரம் அளித்த பிறகே மகாராஜா கட்டாக் நகருக்கு ஓடினர்.

சேனபதி (படைத் தலைவர்) பக்கீர்மோகன் குடும்பப் பெயருக்கேற்பவும் பாரம்பரியத்துக் கொப்பவும் படை முன்னணியில் அதை நடத்திச் செல்லும் தலைவராயிருந்தார். எதிர்பாரா—வழக்கத்திற்கு மாருன பொறுப்பு தன்மீது சார்ந்துவிடத் தங்குமிடம் ஒவ்வொன்றிலும் புது முறையில் வீரர்களை அணிவகுத்து நிற்கச் செய்து அவர்களுடைய ஆயுதங்களையும் பக்கீர்மோகன் பார்வையிட்டார். அவர் ஆடிய நாடகம் மன அதிர்ச்சியை விளைவித்தாலும் அதை அவர் வாய்விட்டுக் கூறவில்லை, போர்வீரர் பெரும்பாலும் வயது முதிர்ந்தவர். மராட்டியர் காலத்தில் அவர்களுடைய பாட்டன்மார் ஒருவேளை நேரில் போரில் ஈடுபட்டிருக்கக்கூடும். ஆனல் நூருண்டுகளுக்கு மேற்பட்ட பிரிட்டன் ஆட்சியில் அவர்களுடைய வாள்கள் சலிப்பின்றி ஓய்வெடுத்துக்கொண்டும் பழங்காலத் துப்பாக்கிகள் துருப்பிடித்துக்கொண்டும் பயன்படுத்தப் படாமலும் கிடந்தன. எதிர்பாராத இப்படையெழுச்சியில் போர் வீரர் தங்கள் இல்லங்களை விட்டுப் போகு முன்னர் துப்பாக்கிகளைச் சரிவரச் சோதித்துப் பார்க்கவில்லை? ஆயத்தம் செய்யவும் போதுமான வெடி மருந்தைக் கையோடு எடுத்துக்கொண்டு போகவும்

கூடப் போதிய நேரமில்லை என்று அவர்களிற் பலர் புகார் செய் தனர். எனினும் இத்தனை தொல்லைகளையும் பொருட்படுத்தாது பக்கீர்மோகன் தன் கந்தலுடைப் படையை ஆண்மையுடன் முன் நடத்திச் சென்றார். அவர்களிடை கலந்திருந்த சில அடியாள்கள் தங்களுடைய துருப்பிடித்த வாள்களைப் படைத்தலைவர் முன் சுழற்றிக் காட்டினர். பூயான் பழங்குடி மக்களைப் பூண்டோடு ஒழித்துக்கட்டிவிடுவதாகவும் அவர் கூச்சலிட்டனர். வழக்கமான இந்த வீரிய வாசகங்களையும் வீண் டம்பங்களையும் கூரிய மதி படைத்த பக்கீர்மோகன் கேட்டு மகிழ்ந்தார். இந்த உரை நடைப் பேச்சுக்கள் பிற்காலத்தில் அவர் எழுதிய சிறுகதைகளும் நெடுங்கதைகளும் கவர்ச்சியுடன் அமைய உதவின.

## இராணுவ தந்திரச் சரணாகதி

தலைநகரை நெருங்கிக்கொண்டிருக்கையில் பூயான்கள் உண்மை யில் அரண்மனையை முற்றுகையிடவில்லையென்றும் தலைநகரிலிருந்து தள்ளியிருக்கும் குன்றின்மேலுள்ள சிற்றூரான ராயிசுவானுக் கருகில் குவிந்துள்ளார்களென்றும் விரைவில் தலைநகர்மேல் பாயலாமென்றும் பக்கீர்மோகனுக்குச் செய்தி கிடைத்தது. கலகக்காரரின் தீய சூழ்ச்சிகளை முன்னேற்பாட்டுடன் தவிர்க்க அவர்கள் கோட்டையிலேயே அவர்களைச் சந்தித்து அழித்துவிடப் பக்கீர்மோகன் முற்பட்டார். எதிரிகள் குவிந்துள்ள இடங்களையும் ஆள் பலத்தையும் தெரிந்துகொள்ள ஒற்றர்களை அனுப்பினார். ஆனால் அவர் வஞ்சித்துப் பக்கீர்மோகனை ஏமாற்றிவிட்டனர். ராயிசுவான் கணவாயை அவரும் அவருடைய துருப்புக்களும் கடந்துகொண்டிருக்கும்போது குன்றுகளின் இரு பக்கங்களிலும் துப்பாக்கிக் குண்டுகள் எதிரொலித்தன. தெளிவான காலை வெளிச்சத்தில் வில், அம்பு, நாட்டுத் துப்பாக்கி ஆகிய போர்க் கருவிகளுடன் புதர்களுக்கும் மரங்களுக்கும் பின்னால் கலகக்காரர் களை அவர் கண்டார். அடுத்தபடியாக என்ன செய்வது என்பது பற்றி அவர் நினைத்துக்கொண்டிருக்கும்போதே ஒரு மயிரிழையில் அவர் தலை தப்பியது. எதிரியின் கூடுதலான படை எண்ணிக்கை யையும் மலைச்சரிவுகளில் அவர்க்கு ஆதரவான நிலைமையையும் கருத்தில்கொண்டு தருணத்துக்குத் தக்கபடி உத்தியை மாற்றி, மேலும் வீணாக இரத்தம் சிந்த விரும்பாமல் அவர் சரணடைந் தார்.

## அறிவுக் கூர்மைப் போராட்டம்

அப்பொழுதிருந்த நிலையில் ஆயுதப்போரை நிறுத்தி விட்டாலும் தந்திரசாலியான பக்கீர்மோகன் விரைவிலேயே சூழ்ச்சிப்போர் முறையைக் கையாண்டு எதிரியை மண் கௌவச்

செய்தார். கேஹூஞ்சர் சிம்மாசனத்துக்கு உரிமை கோரிய தரணிதரிடம் பிடிபட்ட மேலாளரான பக்கீர்மோகன் கொண்டுபோகப் பட்டார். தன்னுடைய முன்னுட் பணியாளரான 'சர்வேயர்' இளைஞனே அவர் நன்ருக அறிந்தவர். உருவான புதிய நிலைமைக்குத் தக்கபடி தன்னைச் சரிப்படுத்திக்கொண்டு தன்னுடைய குடும்பத்தைக் காப்பாற்றும் ஒரே குடும்பத் தலைவன் மட்டுமன்றித் தான் புதிய 'மகாராஜாவின் திவானுகப்' பணிபுரியப் பெரிதும் மகிழ்வாரென்றும் வெட்கமின்றி அவர் சொன்னுர்.

குழுமியிருந்த தொண்டர்களிடம் அவ்வளவு பெரிய சமஸ்தானத்தைத் தான் தனியாக ஆட்சி புரிவது இயலாதென்றும் திறமையான அதிகாரியின் உதவி தேவையென்றும் தரணிதர் உரைத்தார். ஆட்சிப் பொறுப்பின் நுணுக்கங்களை அறிந்த அனுபவம் மிக்க மேலாளர் ஒருவர் கிடைத்துள்ளார். ஏன் அவரை இப்பொழுது நாம் பயன்படுத்திக்கொள்ளக்கூடாது? பொதுவாகச் சந்தேகப் பிராணிகளான பூயான்கள் தங்களுடைய தலைவன் கருத்தை மனத்தாங்கலுடன் ஏற்றுக்கொண்டார்கள். பக்கீர்மோகன் அதை அறியாதவரல்லர். பூயான்களுடைய நம்பிக்கையைப் பெறுவதற்குப் பக்கீர்மோகன் திட்டமிட்டுத் தீட்டிய முகமூடித்தந்திரங்களைக் கையாண்டார். பயனளிக்கும் வகையில் மகாராஜாவின் அரண்மனையைத் தாக்க அவர்கள் தீட்டியதிட்டங்களைத் தன்னுடைய ஒப்பற்ற திறமையால் அவர் சமயத்துக்கேற்ற கதைகள் சொல்லித் தவிர்த்தார். உயர் இராணுவத் தந்திரக் கருத்துக்களை எடுத்துரைத்துத் தற்காலப் போர் முறையைக் கையாண்டு நொடிப்பொழுதில் அரண்மனையனைத்தையும் தவிடுபொடியாக்கி விடலாம் என்று சொல்லி அவர்களுடைய தாக்குதலைத் தவிர்த்தார். வில்லும் அம்பும் கொண்ட போர் முறையைக் கையாண்டு வீணுக உயிர்ச்சேதம் விளைவிப்பானேன்?

இளைஞர் தரணிதர் பக்கீர்மோகனைப்போலவே வெற்றிலை போடும் பழக்கத்தையுடையவர். இது அவர்களிடை ஒரு பிணைப்பை ஏற்படுத்தியது. கூடுதலாக வெற்றிலை பெறுவது என்ற சாக்கில் விரைவில் இராணுவ நடவடிக்கை மேற்கொள்ளுமாறு மகாராஜாவுக்குப் புதிர்ச் செய்தி அனுப்பினுர். 1891-ஆம் ஆண்டு மே 16 நாளிட்ட இக்கடிதம் பக்கீர்மோகன் வீட்டுக் காரியங்களுக்குதவும் போலநாத் என்பவருக்கு எழுதப்பட்டது. ஆனுல் உண்மையில் அவர் சமஸ்தான அலுவலர். தரணிதர் தணிக்கை செய்தபின் அனுப்பப்பட்ட கடிதம் வருமாறு:

''இது என்னுடைய மேலாளரான போலநாத் பார்வைக்கு. வெகு அவசரமாக மகாராணியின் மகனுக்குத் தேவைப்படுவதால் அன்புகூர்ந்து எப்படியாவது நூறு வெற்றிலைகளும் இருநூறு பாக்கு

களும் அனுப்பிவைக்கவும். என்னுடைய கரும்புத் தோட்டத்துக்கு நீர் பாய்ச்ச வடக்குப் பக்கமிருந்து ஒரு பள்ளம் தோண்டவும். இல்லையேல் கரும்புப் பயிர் வாடிவிடும்.''

செய்திக் கடிதம் மூன்று கம்பிகளால் கட்டப்பட்டிருந்தது. எல்லார்க்கும் நன்மை பயக்கும் வகையில் சேனுபதியின் மூடு மந்திரச் செய்தியை அவர்கள் புரிந்துகொண்டார்கள். கம்பிகளின் குறிப்புப் பொருளைச் சரியாக உணர்ந்து சமஸ்தானத்தில் நிலவிய அபாயகரமான நிலைமையை அதிகாரிகளுக்குத் தந்திமூலம் செய்தியனுப்பி இராணுவ உதவியைக் கோரினுர்கள். இவையனைத்தும் விரைவில் செயற்பட்டு தரணிதரும் அவருடைய தோழர்களும் இருப்பிடங்களில் திடீரென்று தாக்கப்பட்டுச் சிறைப்படுத்தப் பட்டார்கள். கேவூஞ்சரின் மகாராஜா ஆகப்போவதாகக் கண்ட இளைஞர் தரணிதரின் கனவு சுக்குநூறுகியது. அவருக்குப் பல ஆண்டுக் கடுங்காவல் சிறைவாசம் விதிக்கப்பட்டது.

# 8. வீட்டுத் துப்புரவும் இரண்டாவது மனைவியுடன் இல்வாழ்க்கை இன்பமும்

பக்கீர்மோகனுடைய புறவாழ்க்கை இன்பச் சோலைவனமாயிருந்தும் அகத்தே வெப்பமும் வேதனையும் நிலவிய பாலைவனமாயிருந்தது. திறமை குமிழியிடும் மேதை தனிமையில் வாடிய மனிதர்; எனினும் இத்தனிமை இரண்டு அரிய பெண்மையின் எழில் மலர்களின் மணத்தால் சிறிதுகாலம் மட்டும் விலகி நின்றது. ஆனால் அம்மேதையின் எதிர்பார்க்க முடியாத புதுமைப் பணிகள் தொடக்கநிலையைத் தாண்டியதுமே அவ்விரு அரிய தேவதைகளும் இவ்வுலகைவிட்டு நீங்கினர். மீண்டும் அவர் ஒதுக்கப்பட்டுத் துயருக்குள்ளானுர்.

வாழ்க்கையில் முற்றிலும் வெறுப்படையவும் சோர்வுடனும் அவநம்பிக்கையுடனும் நாள்களைக் கழிக்கப் போதிய காரணமிருந்தாலும் இம்மனிதர் வாழ்வில் ஒழுக்கத்தை விரும்பியவர். இருப்பினும் காரிருளில் ஒளியின் கீற்றைத் துணைக்கொண்டு மனித மிருகத்தின் முரண்பாடுகளை நினைத்து எள்ளி நகையாடி அவ்வின்பத்தை மற்றோரும் நுகரும்படி அவர் நடந்துகொண்டார். தனக்குண்டான துன்பங்கள் ஏராளம். சமநோக்குடன் இயங்கிய அவருடைய குணநலனும் விந்தையுலகத்தைக் கருணையுள்ளத்துடன் கண்ட பார்வையும் படிப்பில்லாத அல்லது அரைகுறைப்

படிப்புள்ள இரண்டு பெண்களின் பாசத்தால் தாக்கப்பெற்றன. தங்கு தடையில்லா அன்பும் பாசமும் பெண்களுக்கே உரியவை. அவற்றின் மூலம் பக்கீர்மோகனுடைய நுண்ணுணர்வுகள் உரமடைந்தன.

மணவாழ்வின் அருமை

பக்கீர்மோகனுக்கு உறுதுணையாயிருந்த இரு பெண் தெய்வங்கள் [பாட்டி குசிலா தேய்யும் இரண்டாவது மனைவி கிருஷ்ணகுமாரியும் ஆவர்.

பதின்மூன்ருவது வயது அறியாப் பருவத்தில் ஒரு திருமணம் அவர்மீது சுமத்தப்பட்டது. நெஞ்சில் ஈரமில்லாத அவருடைய மனைவி பெரிய தாயாருடன் ஓரே வீட்டில் வசித்துத் தொடக்க ஆண்டுகளில் இருவரும் அவருடைய வாழ்க்கையை நரகமாக்கினர். பாவம் பரிதாபத்துக்குரிய கணவன் சொல்வதாவது:

''பாலேசுவர் நகர் மாணிக்க கம்பப் பகுதியில் வாழ்ந்த நாராயணப் பரிடாவின் மகள் லீலாவதி தேவியை நான் மணந்தேன். என்னுடைய இருபத்தெட்டாவது வயது வரை என்னுடன் இருந்தாள். இதயமில்லாதவள்—இறுமாப்புக்காரி—சுடுசொற்களை உதிர்ப்பவள்—எல்லாவற்றிற்கும் மேலாக எப்பொழுதும் என் விருப்பத்துக்கு மாருகச் செயற்படுபவள். என் இளவயதில் நீடித்த—கொடுமையான நோயால் நான்பட்ட துன்பங்களைக் காட்டிலும் இந்த மணவாழ்க்கை கொடிதாயிருந்தது. பொறுக்க முடியாத மன உளைச்சலில் கழித்த ஆண்டுகளில் சமஸ்கிருத நாலடி மூதுரை என் நினைவுக்கு வரும்.

நாடிச் சென்றடைய அன்புத் தாயில்லை;
தேடிச் சென்ருல் இல்லாளின் நச்சும் உரையும்;
காடுசென்று அத்தகையன் வாழ்தல் நன்ரும்;
வீடும் காடும் அவனுக்கு என்றும் ஒன்ரும்.

அந்தக் காலத்தில் எனக்கு வேண்டிய அமைதிக்கு ஒரே புகலிடம் பாட்டியாவாள். அவள் காலஞ்சென்ற பிறகு இல்லம் என்ற இடம் எனக்கு நரகமாயிற்று. என் முதல் மனைவி ஒரு கொடிய நோய்க்காளானள். ஓராண்டு மருத்துவத்துக்குப் பிறகு குணப்படுத்த முடியாத நோய் என்று சொல்லிவிட்டார்கள். கடைசி முயற்சியாக அவளுடைய பெற்ரோர் தங்கள் வீட்டிற்கு அவளை அழைத்துச் சென்றனர். கடைசியில் அவள் அங்கேயே இறந்தாள். நான் அப்பொழுது பூரியில் இருந்தேன்.''

**கல்நெஞ்சுப் பெரிய தாயார்**

பொருத்தமில்லா மனைவியின் தொல்லைகள் போதாதென்று இளைஞர் பக்கீர்மோகன் ஒவ்வொரு நாளும் கொடிய ஈவிரக்க மில்லாப் பெரிய தாயாரின் நரக வேதனைக்கும் உள்ளானார். இவ் விரண்டு பெண்களும் இளைஞர் பக்கீர்மோகனைக் கிட்டத்தட்டப் பைத்தியமாயடித்துவிட்டனர். நரகமாகிய இவ்வில்லத்தில் இருந்து கொண்டே, வெளியுலகில் எல்லாத் துறைகளிலும் பள்ளித் தலைமை யாசிரியராகவோ, எழுத்தாளராகவோ, அறிஞராகவோ, அனைத் துக்கும் மேலாக மன உறுதியுள்ள சமூகத் தலைவராகவோ அவர் வாகை மாலை பூண்டார். கருவிலே தோன்றிய வலுவும் சிறப்புமிகு உரமும் இவைபற்றிப் பறைசாற்றுகின்றன.

மனைவியிடமும் பெரிய தாயாரிடமும் தான்பட்ட கொடிய துன்பங்களுக்குப் பிறகும் அறிவுக் கூர்மையுள்ள பக்கீர்மோகன் இரண்டாவது திருமணம் செய்துகொள்ளாமலிருந்திருக்கலாம். ஆனால் முதல் மனைவி இறந்த பிறகு தனக்குப் பின்னால் மகனொரு வன் இல்லாமற்போவது விரும்பத்தக்கதன்று என்று அறிந்தோர் அவரிடம் அடிக்கடி சொல்லிவந்தனர். முன்னோர்களுடன் ஆன் மிகத் தொடர்புகொள்ளவும் மூதாதையர் வழி தொடர்ந்து நீடிக்கவும் வகை செய்யாது வேண்டுமென்றே அவற்றைத் துண்டிப் பது கூடாதென்றும் அவர்கள் சொன்னார்கள். அனாதையான பக்கீர்மோகன் பெற்றோரை நேரில் அறியாமலிருந்தாலும் வணக்கத் துடன் அவர்களை நெஞ்சில் வழிபட்டார். மணவாழ்க்கை இன்பம் என்பதைவிட உலகைவிட்டு நீங்கிய மூதாதையர் ஆன்மா அமைதி பெறுவதையே அறவினையென்றுகொண்டு தம்பால் நல்லெண்ணம் கொண்டவர்களின் தூண்டுதலுக்கிசைந்து மீண்டும் திருமணம் செய்துகொள்ள இசைந்தார்.

**பாலைவன மணத்தைக் கடந்து சென்ற தெய்வப் பெண்**

இந்தத் திருமணமும் ஒரு பெண் உறவினர்மூலம் ஏற்பாடா யிற்று. மனைவியாகப் போகிறவளுக்கு வயது பன்னிரண்டு, வரப் போகும் கணவன் வயதில் பாதிக்கும் குறைவு, ஆனால் நினைப் பதற்கு மாறாக அரைகுறைப் படிப்புள்ள இரண்டாவது குழந்தைப் பருவ மனைவி கிருஷ்ணகுமாரிதான் மேதையின் நீண்ட ஆயுட் காலத்தில் அவருடைய ஒரே இன்பமாக வாழ்க்கையில் பங்கு கொண்டவள். சார்லி சாப்ளின் தன்னுடைய நான்காவது மனைவி ஊனாவுடன் இல்வாழ்க்கை நடத்திப்பெற்ற இல்லற இன்பத்தை இது நினைவூட்டுகிறது. திருமணங்கள் வானுலகில் நிச்சயிக்கப்படு கின்றன என்பதையும் மணவாழ்க்கை இன்பம் மனிதன் ஏற்பாட்டுக்கு அப்பாற்பட்டது என்பதையும் இது ஐயந்திரிபற உறுதிப்படுத்துகின்றது.

கிருஷ்ணகுமாரி அவளுடைய கணவரின் செல்வச் செழிப்புக்கு முன்னேடி; ஏனெனில் முன்னர் குறிப்பிட்டது போன்று அவளைத் திருமணம் செய்துகொண்ட சிறிது காலத்திற்குள்ளேயே நீலகிரி சமஸ்தானத்தின் திவான் வேலையை ஏற்றுக்கொள்ளுமாறு அவர் கேட்டுக்கொள்ளப்பட்டார். பள்ளியாசிரியர் ஒருவர்க்கு அது சிறந்த எதிர்பார்க்க முடியாத பதவி உயர்வுதானே!

பக்கீர்மோகனும் கிருஷ்ணகுமாரியும் இருபத்தைந்து ஆண்டுகள் கணவனும் மனைவியுமாய் வாழ்ந்தார்கள். ஆனல் இந்த எளிய—அரைகுறைப் படிப்புள்ள—பெண் இவ்வுலக வாழ்வை நீத்த பொழுது அவள் மேலும் கால் நூற்றுண்டு காலம் கடைசி மூச்சிருந்த வரைக்கும் தன் மேதைக் கணவரை மீளாத் துயரில் ஆழ்த்திவிட்டுச் சென்ருள். அது மட்டுமன்று, கணவரின் கண்ணீர்த் துளிகள் வாயிலாக அவளுடைய புனித நினைவை அவர் தேசிய இலக்கியமாகப் படைக்கவும் செய்தாள்.

**வணக்கத்துக்குரிய பாட்டி**

சமூக முறைக்கேற்ப இரக்கமில்லாப் பெரிய தந்தையிடமும் அவர் மனைவியிடமும் ஒப்படைக்கப்பட்ட அனுதைப் பிணிவாய்ப் பட்ட பக்கீர்மோகனுக்குப் பாட்டி அளித்த ஆதரவுபற்றி வாசகர் அறிவர். கண்ணுக்கு கண்ணுன பேரன் அவளுடைய தியாகங் களின் விளைவாக எதிர்பாராத சிறப்புப் பெற்றதை அவள் காண முடிந்தது என்பது மனநிறைவை அளிக்கிறது.

இந்த எளிய—பேருள்ளம் படைத்த பெண்மணியின் நினைவாக நன்றிமறவாத அவளுடைய பேரன் நீண்ட பாடலொன்றை அவளுக்குப் படையல் செய்தார். அது மட்டுமன்று, எவ்வித வேறுபாடுமின்றி உயர்ந்தவர் தாழ்ந்தவர் எல்லார்க்கும் அவர் தம்முடைய புகழ்பெற்ற இலக்கியப் படைப்புக்களான சிறுகதை கள்—பெருங்கதைகள் அனைத்திலும் சிதறிக்கிடக்கும் தன்னலமற்ற —கருணையுள்ளம் படைத்த மூதாட்டியர் பற்றி உளமார்ந்த காணிக்கையைச் செலுத்தியுள்ளார்.

# 9. முன் நின்ற மூவர்

சென்ற நூற்றுண்டில் அறுபதாம் ஆண்டுகளில் பாலேசுவரில் மூன்று அறிஞர் மலர்ந்தனர். அவர்கள் சந்தித்து வாழ்நாள் நண்பர்களானுர்கள். ஒரியமொழி இலக்கியத்தில் ஒவ்வொருவரும் புதிய முறைகளைத் தோற்றுவித்தனர். இவர்களில் ராதாநாத்ராயும்

மதுசூதனராவும் பல்கலைக் கழகத்தில் சிறந்த ஆங்கிலக் கல்வி பயின்றவர். அரசு வேலைகளில் அமர்ந்தவர் பிள்ளைகளாதலால் அவர்கள் அரசின் கல்விப் பிரிவில் நல்ல இடங்களில் இருந்தனர். பின்னர் உயர் அலுவலர்களாய் ஓய்வுபெற்றுப் போதுமான ஓய்வு ஊதியங்களும் பெற்றனர். அவர்களில் மூன்றுமவர்தான் போது மான ஆரம்பக் கல்வியும் நிலையான வேலையும்கூடப் பெறாத பக்கீர் மோகன். அவருக்கு வாழ்க்கையென்பதுவே உயிர்வாழ ஏற்பட்ட போராட்டமாயிருந்தது. ஆனால் ஒரு மேதையின் நடைமுறை விசித்திரமானதால், இம்மூவரில் மிகக் குறைந்த படிப்புள்ளவரும், பரம்பரைச் சொத்து ஏதுமில்லாதவரும், சமூக—கல்விப் பின்னணி யாதுமில்லாதவருமான பக்கீர்மோகன்தான் எல்லார்க்கும் முன் நின்று ஒளி வீசினார். அவருடைய ஆன்மிக அறிவுமிக்க செயல் திறன் மற்றிருவரும் எத்துணை முனைந்தாலும் அடைய முடியாததா யிருந்தது.

ஒரிய மொழி இலக்கியத்தில் 1872ஆம் ஆண்டு குறிப்பிடத் தக்கதாகும். ஏனெனில் அந்த ஆண்டில் பிரிட்டிஷ் அரசால் தொடங்கப்பட்ட புதுமுறைப் பள்ளிக்கூடங்களில் ஒரிய வாசகர் களின் தேவைக்கு உதவுமாறு தற்காலச் சந்தப் பாடல்களின் சிறிய தொகுப்பொன்றை ராதாநாத்தும் மதுசூதனும் 'கவிதாவளி' என்ற தலைப்பில் வெளியிட்டார்கள். இவ் ஒரிய மொழிச் சந்தத்துடன் பாடக்கூடிய நாட்டுப் பாடல்கள் அதனுடைய நீண்ட காலக் கவிதை மரபில் ஒரு புதிய கால கட்டத்தைத் தோற்றுவித்தன. பக்கீர்மோகனுடைய இவ்விரண்டு பல்கலைக் கழக நண்பர்களும் இக்கூட்டுக் கவிதை முயற்சியில் பக்கீர்மோகனை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. ஏனெனில் முப்பது வயதினராயிருந்தும்கூட அவரைக் கவிதை நுகர்வோர் என்று அவர்கள் கருதினரில்லை.

மெய்யாகப் படிப்பாளிகள் உலகில் முறைப்படி பயிலா மேதை யொருவர் உளரெனில் உறுதியாகப் பக்கீர்மோகன் சேனபதிதான் அவரென்று கூறலாம். அவரிடம் சுடர்விடும் தன்னம்பிக்கை உண்டு. உள்ளுணர்வின் அடித்தளத்தில் படிந்திருந்த அவருடைய அரிய திறமைகள் துயிலெழுந்து எதிர்பாராத நிலைமைகளையும் அசாதாரண சக்தியுடன் சமாளித்தன. அரைகுறைப் பள்ளிக் கல்வி பெற்ற சிறுவன் திறமையான ஆசிரியராயும் மொழி வல்லுனராயும் நல்ல நிர்வாகியாகவும் மக்கட் தலைவராயும் மலர்ந் தான் என்பதை நாம் முன்னரே கண்டோம். இப்பொழுது பரந்து பலதுறைக் கவிஞராக மலர்ந்து 'விவாச கவி' அல்லது உலகோர் கவிஞன் என்ற பொருமைப்படும்படியான அசாதாரண அடைமொழி பெறுவதையும் காண்கின்றோம். இம்மேதையின் அரிய திறமையைப் புலப்படுத்தும் வகையில் எளிதில் மலிந்த பல

விதமான இலக்கியப் படைப்புக்களை ஒதுக்கிவிட்டு விவரம் தெரிந்த பாம்ரா தர்பார் பொருமைப்படும்படியான சரஸ்வதி என்ற பட்டத்தை அளித்தது. நினைத்துப் பார்க்க முடியாத தருணங்களிலும் கவிஞராயும் புதுமைப் படைப்பாளராயும் வியக்கத்தக்க நாவலாசிரியராகவும் தோற்றமளித்தது அவருடைய அரிய சாதனையே; கூலியாட் சிறுவன் ஆசிரியராயும் தேசிய நலன்களின் ஆதரவாளராயும் நிர்வாகியாயும் சிறப்பாகச் செயற்பட்டதைப் போன்றது.

1872ஆம் ஆண்டுக்கு முந்திய பத்து ஆண்டுகளிலும் பக்கீர் மோகன் எழுதிய உரைநடை நூல்கள் இரண்டேயாகும். அவை யாவன: (1) ஈசுவர சந்திர வித்தியாசாகரின் ஜீவன சரிதம் என்ற வங்காள நூலின் மொழிபெயர்ப்பு; (2) இந்தியாவின் வரலாறு: இந்நூலை எழுத மூன்று ஆண்டுகட்கும் மேலாக உழைத்தாரென்று அவரே சொல்கிருர். பல ஆண்டுகள் ஒரிசாப் பள்ளிக்கூடங்களில் அதன் தகுதி கருதிப் பாடப் புத்தகமாக அதை வைத்தனர்.

### ஆற்றெணுப் படைப்பாளர்

பத்தாண்டுகள் கழிந்த பிறகே நாம் மீண்டும் சேனுபதியைக் காண்கின்ருேம். பாலேசுவரில் பள்ளியாசிரியரின் அமைதியையும் பாதுகாப்பையும் கைவிட்டு அவர் இடத்துக்கிடம் சுறுசுறுப்பான அலுவலராய்ப் பெயர்ந்துகொண்டிருந்தார். நீண்ட கால வேலையின்மை, பண உதவியில்லாமை என்ற இடைவெளிகளுக்குப்பின் நினைத்துப் பார்க்காத நல்ல வேலைகளும் தொடர்ந்து கிடைத்தன. சேனுபதி டேங்காணுல் சமஸ்தானத்தின் உதவி மேலாளராயிருந்த போது அருமை இரண்டாவது மனைவி கிருஷ்ணகுமாரிக்குப் பிறந்த அவருடைய முதலாவது குழந்தையை அவர் இழந்தார். ஆண் குழந்தை, எனவே பெற்ருேர் இருவரும் அன்பு சொரிந்தனர். அடுத்தபடியாகக் குழந்தையிடம் பொலிவு மிளிர்ந்தது. முதல் மனைவி வயிற்றிற் பிறந்த ஒரே மகளும் பக்கீர்மோகனுக்கு இருந்தாள். எனவே முதல் ஆண் குழந்தையின் அகால மரணம் பெற்ருேர்களை உலுக்கியது. நெஞ்சைக் கிள்ளும் அதனுடைய குழந்தைப் பருவ விளையாட்டுக்கள் ஆறு மாதங்களுக்கு மேலாகப் பெற்ருேரை ஆட்கொண்டது. இந்த இழப்பு இளமைப் பருவத் தாய் கிருஷ்ணகுமாரியைத் துயரத்தில் ஆழ்த்தியது. தந்தைக்கும் துயரம் குறைவில்லைதான். அருமை மனைவிக்குண்டான முதல் இழப்பின் தாக்கத்துக்கு ஆறுதலளிக்க வேலையில் முழுகியிருந்த அலுவலர் பக்கீர்மோகன் அமைதி நிலவும் அவர் இல்லத்துக்குக் கவிஞரொருவரை அழைத்து வந்தார்.

பக்கீர்மோகனுடைய நற்பயனைக் கிருஷ்ணகுமாரி சமயப் பற்றுள்ளவளாயும் ஆன்மிக உணர்ச்சியுள்ளவளாயும் இருந்தாள். விடாப்பிடியாய்த் தன்னை ஆட்படுத்திக்கொண்டு இருபது ஆண்டு கட்கும் மேலாகத் தன் மேதைக் கணவரின் வாழ்வை ஒருவாறு படிப்பேயில்லாத இந்தப் பெண் மலர வைத்தாள். அதற்கு அவள் நெஞ்சில் கசிந்த ஆன்மிக உணர்ச்சி காரணமாகும்.

இராமாயணத்தைக் காட்டிலும் துயரமான பெற்றோர் பிள்ளை உறவு வேறெங்கும் சிறப்போடில்லை. காட்டுக்கு விரட்டப்பட்ட இராமன் பிரிவால் தாங்கொணாத் துயருக்குள்ளாகி உயிர் துறந்த முதுமைத் தசரதன் பாவமன்னிப்புக் கோரி வடித்த கண்ணீர், குழந்தைகளை இழந்து தவிக்கும் பல கோடிக்கணக்கான பெற்றோர்க்கு ஆறுதலையளிக்கும். துயருறும் கிருஷ்ணகுமாரியின் மனத்தைத் திருப்பும் வழியாக பலராமதாசரின் ஒரிய ராமாயணத் தைப் படித்துக்காட்ட பிராமணரொருவரை அவர் அமர்த்தினார். இராமாயணத்தை வேகமாகப் பாடகர் பாடவே கிருஷ்ண குமாரிக்குப் பொருள் விளங்கவில்லை. எனவே அந்த ஏற்பாட்டைக் கைவிட்டு வால்மீகியின் ஆதிகாவியத்தை எளிய ஒரியக் கவிதை யாகத் தானே மொழிபெயர்த்து மாலையில் அன்று முடித்த பகுதி யைப் பாடிக்காட்டும் துணிவை அவர் மேற்கொண்டார். இது நல்ல பயனளித்தது. பக்கீர்மோகனுடைய ஒவ்வொரு பாடலும் தெளிவெனலாம். அரைகுறைப் படிப்புக் கிருஷ்ணகுமாரிக்குக்கூட ஒவ்வொன்றும் தெளிவாகப் புரிந்தது. தற்கால இந்திய இலக்கியத் தில் அடித்தள மக்களின் முதற் குரலை இச்சிறந்த அறிஞர் எழுப்பினார். அத்தகையரிடமிருந்து கேள்வி ஞானம் பெற்றவரும் அவரை மெச்சும் ஆய்வாளருமாக அவருடைய எளிய படிப்பில்லா மனைவி அமைந்தது மெய்யாகவே பொருத்தமானது. தன்னுடைய சிறந்த கணவர் வாயிலிருந்து இராமாயணத்தின் ஓர் அதிகாரத்தி லிருந்து மற்றொன்றுக்கு அவர் தாவும்போதும் ஒரு நிகழ்ச்சியைச் சொல்லி அடுத்த நிகழ்ச்சியைச் சொல்லும்போதும் கிருஷ்ணகுமாரி வடித்த சிலையாய் வாயடைத்துக் கேட்டுக்கொண்டிருந்தாள். இராமனுடைய வனவாசக் கதை முழுவதையும் கேட்கும்போது அவளுடைய கண்களில் நீர்பெருகி வழிந்தது. பக்கீர்மோகனுடைய இராமாயணத்தின் முதற்காண்ட மொழிபெயர்ப்பு அச்சாகி வெளிவந்தபொழுது புத்தகப் படியைக் கையில் வைத்த வண்ணம் கண்ணில் நீர் மல்கக் கிருஷ்ணகுமாரி சொன்னதாகப் பக்கீர் மோகன் உரைப்பதாவது: ''நாம் இழந்த குழந்தையைப் பற்றி இனியும் ஏன் துயர்ப்பட வேண்டும்? தம் நினைவை நிலவச் செய்யத்தானே பெற்றோர் குழந்தை வேண்டுமென்கிறார்கள். எல்லா நினைவுச் சின்னங்களும் சிறிது காலமே நிற்கும். ஆனால்

இந்தக் குழந்தை (புத்தகம்) என்றும் அழியாது நம் பெயரை நிலைக்கச் செய்யும்.''

வழக்கத்திற்கு மாருகத் தன்னைப் புகழும் மனைவியின் சொற்களால் ஊக்கம் பெற்றுப் பக்கீர்மோகன் விரைவிலேயே இராமாயணம் முழுவதையும் மொழிபெயர்த்துவிட்டார். இராமாயணத்துக்கடுத்தபடியாக, அவளுக்காக அவர் மகாபாரதத்தை மொழிபெயர்க்கும் பணியை மேற்கொண்டார். சென்ற நூற்ருண்டின் கடைசிப் பத்தாண்டுகட்குள் அவர் இம்மாபெரும் உழைப்பின் முடிவைக் கண்டார்.

பக்கீர்மோகனுடைய இராமாயண—மகாபாரத மொழிபெயர்ப்புக்களுக்கு அவற்றின் கலைவண்ணத்தின் அருமையாலேயே ஓரிசாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் புகழ் கிட்டியது. ஓரிய மொழியில் இராமாயண—மகாபாரதத்தின் பல மொழிபெயர்ப்புகளிருந்தாலும் எளியநடையில் உள்ளது உள்ளவாறு படித்துப் புரிந்துகொள்ளக்கூடிய மொழிபெயர்ப்புக்கள் இல்லை. இவ்வகையில் பக்கீர்மோகனுடைய மொழிபெயர்ப்புக்கள் துயருறும் கிருஷ்ண குமாரியின் தேவையை மட்டுமன்றி ஓரிசா முழுவதின் தேவையையும் நிறைவேற்றின.

அவ்வினத்தின் ஆன்மிகத் தேவைகள் மேலும் கிட்டுமாறு எல்லா முக்கிய உபநிடதங்களையும் கவிதைகளாய் மொழிபெயர்ப்பதில் பக்கீர்மோகன் ஈடுபட்டார். இத்துறையில் அவருடையது முதல் முயற்சியாகும்.

வேதாந்தங்களின் தத்துவ விசாரணை நிரடுகள் எளிதாக ஐயந்திரிபற அமைந்ததால் பக்கீர் மோகனுடைய மொழிபெயர்ப்புக்களை மறுபடைப்பெனக் கொள்ளவேண்டும்.

இராமாயண—மகாபாரத—உபநிடத மொழிபெயர்ப்பு ஒரு தனி மனிதனின் வியத்தகு சாதனையாகும். அம்மனிதன் நிர்வாகச் சிக்கல்களையும் எதிர்ப்புச் சக்திகளின் சதிகளையும் சமாளிக்கும் ஓய்வில்லா அரசு அலுவலர் என்பதைக் கேட்டு வாசகர் வியப்புறலாம்.

சீரிய உந்துதலின்றி இத்தகைய வியப்புறும் உள்ளம்—உடல் ஆகியவற்றின் உழைப்புச் சாதனைகளை எந்த மனிதனிடத்திலும் காணமுடியாது. அந்தோ! தன்னுடைய மொழிவளம் பெற இவற்றை அவர் அறியாமலேயே உண்டான எழுச்சி எனலாம். பக்கீர்மோகனுடைய உழைப்புப் போன்ற வேறு எந்த மனிதனுடைய உழைப்பும் ஓரிய மொழியை அவர் ஆற்றிய அளவு வளமாக்கவில்லை.

**முதலாவது இலக்கியப் படைப்பு**

மெய்யாகவே, அவருடைய முதலாவது படைப்பு நூலாகிய உத்கலப் பிரமணம் (ஒரிசாப் பயணங்கள்) தழுவலுக்கும் வழிமுறை வகுப்பதில் காட்டும் துணிவுக்கும் திகைக்கவைக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டாகும். அவருடைய மொழிபெயர்ப்புக்கள் வெளி வந்த காலத்தில் இந்நூல் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. முந்தின அதிகாரத்தில் குறிப்பிட்ட பூயான் கலவரத்தைச் சேனுபதி சமாளித்த காலமும் அதுவேயாகும். அக்கலவரத்தையொட்டி கேவூஞ்சருக்கு வந்திருந்த பிரிட்டிஷ் அரசியலதிகாரிகளைப் பாலேசுவர் மாவட்டத்தில் மிக அருகிலுள்ள பத்ரக் ரயில் நிலையத்தில் வழி யனுப்பிவிட்டுப் பக்கீர்மோகன் ஆனந்தப்பூரிலுள்ள தன்னுடைய தலைமைச் செயலகத்துக்கு யானை மேலமர்ந்து திரும்பிக் கொண் டிருந்தார். சவாரி செய்துகொண்டிருக்கும்போதே அவருடைய மூளை திடீரென்று வேலைசெய்யத் தொடங்கியது. புகழ் பெற்ற சமகால ஒரிசாத் தலைவர்களைக் கவிதையில் வடிக்க வேண்டும் என்பதுவே அத்தோற்றம். அவ்வெண்ணம் எழுந்ததுமே பையி லிருந்து குறிப்புப் புத்தகத்தையும் எழுதுகோலையும் எடுத்து யானை யின் ஆட்டத்திலும் அசைவிலும் அவர் கிறுக்கத் தொடங்கினர். ஆனந்தப்பூரை அடைவதற்குள் அவர் கருத்திலுதித்த நூல் பாதிக்கு மேல் ஆக்கப்பட்டுவிட்டது. மூன்ருவது நாள் முடிவதற் குள் புத்தகம் உள்ளூர் அச்சகத்திலிருந்து வெளியேறியது.

ஒரிய மொழி இலக்கியத்தில் இந்நகைச்சுவைக் கவிதை நூல் இன்றும் அரிய நூலாய்த் திகழ்கிறது. அதுபோல் மற்ருென்று எழுதப்படவில்லை. பக்கீர்மோகனைப் போன்ற ஒரு தலைவன்தான் கவிதையும் சமூகமும் அரசியலும் விரவப்பெற்ற நூலை எழுதும் முயற்சியில் துணிய முடியும். நானறிந்தவரை வங்காளியிலும் ஹிந்தியிலும் கூட இதற்கொப்பான நூல் இல்லை. எனவே சேனு பதியின் உத்கலப் பிரமணம் இன்றும் அரிய முதல் நூலாய்க் கொள்ளப்படலாம்.

இந்த நூல் ஒரிசா முழுவதிலும் ஓர் எழுச்சியை உண் டாக்கியது. தம் காலத்து மனிதர் பற்றி உயிரோட்டச் சொற் ருெடர்களில் நகைச்சுவையுடனும் சுருக்கெனத் தைக்கும் பரிகாசத் துடனும் எழுந்த கதையொத்த சின்னஞ் சிறிய வர்ணனைகள் வாசகர்களை வாய்விட்டு உரக்கச் சிரிக்கச் செய்தன. ஜகன்னுதப் பெருமானைச் சூழ்ந்திருக்கும் வெட்கங்கெட்ட—கூலிப்பட்டாள— கல்வியறிவில்லாப் பண்டாக்களையும் பிராமணர்களையும் செம்மை யாக அவர் சாடினர். நல்ல அடக்கமான இந்தியர்களாய் நடந்து கொள்ளாமல் மோசமான சின்னத்தன ஆங்கிலேயர்களைப்போல நகைப்புக்குள்ளாகித் தங்களுடைய மொழியையும் பண்பாட்டையும்

மறந்து ஆங்கில அரைகுறைப் படிப்புடன் நடமாடுபவர்களுக்கும் அவர் சாட்டையடி கொடுத்தார். அறிவுகெட்ட குரங்குக் கூட்டத்தின் மீது தன்னுடைய கண்டனத்தை நாடவிட்ட போதும் படித்தவர் என்று சொல்லப்படும் பாபுக்களைத் தான் பார்க்கும் போதும் இந்தக் குரங்குப் புத்தி இந்தியர்களைக் கருத்தில் கொண்டு தான் சார்லஸ் டார்வின், குரங்கு மனிதனுடைய மூதாதை என்ற கருத்தைப் பெற்றிருக்க முடியும். ஆங்கிலப் புல்லறிவைக் கொண்டு மங்கிய அகமகிழ்வு பற்றியும் தாய்மொழிகளைப் புறக்கணிப்பது பற்றியும் அவர் கூறுவதாவது: ''நாள்தோறும் சாக்கடையில் எறியப்பட்ட எச்சில் இலைகளை நக்குவதால் வயிருர உணவு கிடைக்கும்பொழுது ஒரு நாய் எதற்காகத் தனக்காக வீடு தேடி அலைய வேண்டும்?''

உத்கலப் பிரமணம் என்ற மகிழ்விக்கும் பொருட் செறிவு வெளியீடு வந்த இரண்டாண்டுகளுக்குப் பிறகு தனிமையில் உதவுவாரில்லாத—இதயம் வெடித்த கணவரைத் தவிக்கவிட்டுக் கிருஷ்ணகுமாரி இறந்துபோனுள். தணியாத் துயரம் கவிதை மொழிபெயர்ப்பாளரும் நையாண்டிக் கவிஞருமான பக்கீர் மோகனைப் பெருவாரியாகப் படைப்புக் கவிதைகளை எழுதிக் குவிக்கும் நிலைக்கு மாற்றியது. இப்புதிய சூழ்நிலையில் தன்னைப் பற்றிப் பக்கீர்மோகன் சொல்வதாவது:

''உண்மையை உரைப்பதென்ருல் கவிதை எழுதும் நற்பழக்கம் ஏற்பட நான் என் மனைவிக்குக் கடப்பாடுடையேன். என்னுடைய பாடல்களைக் கேட்டு அவள் பெரிதும் மகிழ்ந்தாள். அவள் உவகைக்காகவே நான் செய்யுள் இயற்றத் தொடங்கினேன். அவள் காலமான பிறகு இந்தப் பழக்கம் நீடித்தது. சலித்த என் சிந்தையும் அமைதியுற்றது. நாள்தோறும் காலையில் குளித்த பிறகு கிருஷ்ணகுமாரி நான் எழுதிய இராமாயண—மகாபாரதங்களிலிருந்து சில அதிகாரங்களைப் படிப்பது வழக்கம். அவள் சாவுக்குப் பின் கடுமையான மனக்கலக்கம், விபத்து, ஆளை முடக்கும் நோய் ஆகியவை எனக்கு நேர்ந்தபொழுது அவற்றின் விளைவுகளிலிருந்து தப்புவதற்கு என்னுடைய பெரும்பாலான கவிதைகள் இயற்றப்பட்டன.''

### ஓங்கும் ஒரு சார்பின்மை

இதன் விளைவாய்ப் பலதரப்பட்ட பொருள்கள் பற்றி வியப்புறும் வண்ணம் பக்கீர்மோகன் கவிதைகள் எழுதிக் குவித்தார். பின்னுல் எழுதிய புனைக்கதைகளைக் காட்டிலும் இக்கவிதைகள் மட்டுமே ஒரிய இலக்கியத்தில் அவருக்கு ஒப்பற்ற இடத்தைப் பெறச்

செய்தன. முழுமையாகவும் மேன்மையுடனும் அவை அவருடைய தகுதியை வெளிக்காட்டுகின்றன.

அவருடைய பரந்த உள்ளச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாகச் சொர்க்க வாசலில் ஆன்மாக்கள் என்ற அரிய கவிதையைக் குறிப்பிடலாம்.

சொர்க்கத்தின் நுழைவாயிலில் ஒவ்வொரு ஆன்மாவும் புகு முன்பு மொத்தத்தில் மனித இனம் குறித்துக் குறிப்பிட்ட பிரிவின் சடங்குகளைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவது என்பதைக் காட்டிலும் அதனுடைய அணுகுமுறை பற்றித் தந்திரசாலியான வாயிற் காப்போனுக்குச் சமாதானம் சொல்ல வேண்டும். முதலாவதாக, வானுலக வாயிற்காப்போன் நிலவுலகில் சமயப்பற்றுள்ள முஸ்லிம் என்று சொல்லப்பட்டவனுடைய ஆன்மாவைச் சந்திக்கிறான். நாளுக்கு ஐந்து தடவைகள் தவறாமல் நமாஸ் படிப்பதாயும் ரம்ஜான் மாதத்தில் கண்டிப்பான உபவாசம் இருப்பதாயும் அல்லாவின் ஒரே தூதரான முகம்மது நபியின்பால் மட்டுமே நம்பிக்கை கொண்டிருப்பதாயும் சொல்கிறான். ''மோஸஸ், புத்தர், கிறிஸ்து இன்னும் பல தெய்விகத் தூதர்கள் ஆகியவரின் ஆசியை எப்பொழு தாவது நாடியது உண்டா?'' என்று வானுலக வாயிற்காப்போன் வினவினான். ''நான் எவ்வாறு அதைச் செய்ய முடியும்? அவர்க ளெல்லாம் காபிர்களல்லவோ'' என்று விடையளிக்கிறான் புறந் தொழா முஸ்லிம். அத்தகைய ஒருவனுக்குக் கடவுள் ஆட்சியில் இடமில்லையென்று வானுலக வாயிற்காப்போன் சொல்லிவிடு கிறான். அடுத்து முன்னவனைப்போல எள்ளளவும் குறையாத— மறந்தும் புறந்தொழா வைஷ்ணவன் கழுத்தில் துளசிமாலை தொங்க இறைவன் நாமங்களை முணுமுணுத்துக்கொண்டு வந்தான். மொட்டைத் தலையும் சால்வை போர்த்திய உடம்பும் துளசிமாலை அணிசெய் கழுத்தும் கீழே மண்ணுலகில் சாம்பராகிவிட்டது என்று வாயிற்காப்போன் சொல்கிறான், வானுலக வாயிற்காப்போன்; நிலவுலகில் கடவுளின் மாபெரும் தூதர்களான புத்தர், இயேசு, முகம்மது போன்றவர்களை வைஷ்ணவன் நினைக்கவேயில்லை. அத் தகைய ஒருவனுக்கும் கடவுள் ஆட்சியில் இடம் இல்லை.

இவ்வாறாக மற்றச் சமயவாதிகளும் குறுக்கு விசாரணை செய்யப்பட்டு உண்மையான தெய்விக அளவுகோலுக்குப் பாத்திர ராகவில்லை. இறுதியில் சொர்க்கவாயிலோன் மண்ணுலகில் உண்மையான சமயத்தின் வடித்தெடுத்த சாறு பற்றிப் பேசு கின்றான். மனித இனத்துக்கு இன்றியமையாத பண்புகளை ஓதவே இறைவன் பல தூதர்களை அனுப்பினான். புத்தர் பகுத்தறிவும் பற்று நீக்கமும் போதித்தார். இயேசு அன்பைப் பொழிந்தார். முகம்மது நம்பிக்கை விளம்பினார். அவர்கள் எல்லா மனித இனமும் ஒரே

அளவில் போற்றத்தக்க கடவுளின் தூதர்கள். அன்பு, நம்பிக்கை, பக்தி, பற்றின்மை என்ற ஆன்மாவின் குணங்களே கடவுள் ஆட்சி புரியும் உலகின் வாயிலில் நுழையத் தகுதியளிப்பவை; புறச் சடங்குகளும் ஒருவர் மற்றொருவரிடம் காட்டும் வெறுப்பும் அன்று. எவனொருவன் அடுத்தவனை வேற்று மனிதனென நினைக்கிறானோ சாவுக்குப் பிறகு நரகமே அவன் உறைவிடம்; சொர்க்கம் அன்று.

உலக நோக்கு

கவிதை நண்பர்கள் ராதாநாத்தும் மதுசூதனும் கவிதை நடை முறைகளிலும் பொருள்கள் பற்றி மட்டுமே கருத்துச் செலுத்தப் பெருமளவு பள்ளி சென்றறியாத பக்கீர்மோகனுடைய உள்ளம் அறிஞர் மூக்கணாங்கயிறுகளுக்கடங்காமல் விரும்பியவாறு செயற்பட்டது. எனவே எண்ணங்கள், கருத்துக்கள், உணர்வுகள் ஆகியவை இயல்பாக எழுவது போன்று அவர் உரை இருந்தது; விளைவுகளை ஆய்வுசெய்து எழுந்தவை அன்று. நூல்களிலிருந்து கல்விச் செருக்கை நல்கும் அணியிலக்கணங்களைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியதில்லை. தன்னைச் சுற்றிலும் எது நிகழ்ந்தாலும் குமிழியிடும் அவருடைய கூர்த்த மதி பயன்பெற்று வாசகர்க்கு நற்செய்தியொன்றை எப்பொழுதும் நல்கும். நம்மில் பலர் போலன்றிச் செவிகைப்பச் சிலர் பேசும் எதிர்ப்புக்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல் உண்மை, நீதி, பகுத்தறிவு ஆகியவைகளைப் போற்றி மனந்திறந்து பேசும் திறனை அவர் படைத்திருந்தார். எனவே பக்கீர்மோகனுடைய கவிதைப் பொருள்கள் விரிந்த பார்வையுடையன. 'கவிஞனின் நச்சரிக்கும் மனைவி', 'மணமுறிவுக்குள்ளான ஜோசப்பைன் கண்ணீர்', 'இந்திய விவசாயியினுடைய இன்னல்' 'இளவயது ஹிந்து விதவைகள்' எனப் பரந்து விரிந்து அவையமைந்தன. பல கவிதைகளில் ஜப்பான் நாட்டின் புதிய ஆற்றல்களையும் சாதனைகளையும் வாயார வாழ்த்தி வரவேற்றுத் தன் நாட்டு மக்களுக்கு அவற்றைப் பின்பற்ற வேண்டிய எடுத்துக்காட்டுகளாயும் அவர் மொழிந்தார். ஜப்பானிலிருந்து இறக்குமதியானதாகச் சொல்லப்பட்ட ஹுஸ்னு ஹேனுப் பூச்செடி பற்றியும் அவர் இதயங் குளிரப் பாடினார். ஜப்பானியரின் பண்பாடு, கட்டுப்பாடு, ஆழ்ந்த கலையுணர்வு ஆகியவற்றால் கவரப்பட்டுப் பழுத்த முதிய வயதிலும் அவ்வுதய சூரியன் நாட்டுக்குப் பயணம் மேற்கொள்ள அவர் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். ரோமானியக் கற்பு மனைவி லுக்ரீசியா பற்றி நீண்டதொரு கவிதை எழுதினார். பெண் கற்பு இந்நாட்டுக்குத்தான் உரியதென்று தற்பெருமையடித்துக்கொள்ளும் இந்தியப் புராதனக் கருத்தைத் தகர்த்தெறியும் அவாவுடன் அவர் எழுதியிருக்கலாம். கிளியோபாட்ரா பற்றியும் அதேபோலப் பாடியுள்ளார். எழில் மங்கையரின் மான்விழிகள் அறிவுள்ள ஆண்களைத் தாக்கவும்

ஏமாந்து வன்மை வாய்ந்த டாலமிகளும் டார்க்குவின்களும் சுவடு தெரியாமல் அழிந்து போனார்கள். இவ்விரு வீராங்கனைகளின் வாழ்க்கை தெரிவிக்கும் வரலாற்று நீதியைக் கவிஞர் உரைத்தார். அதே போன்று கிருஷ்ணன், இயேசு கிறிஸ்து, துகாராம் ஆகியோர் பற்றியும் பக்கீர்மோகனுடைய பாடல்கள் உள்ளன. 'பட்டுப்போன பலாச மரம்', 'காதற் புறுக்கள் இரண்டு', 'தரையில் விழு முன் இலைச் சருகின் எண்ணக் குமிழி' என்பனவும் அவருடைய கவிதைகள்.

## சூதுவாதற்ற பெண்ணை நினைந்து வடித்த கண்ணீர்

பக்கீர்மோகனுடைய கவிதை உலகத்தின் கதம்பக் குவியலில் காப்பியங்கள், உபநிடதங்கள், எண்ணற்ற சந்தப் பாடல்கள், அங்கதப் பாடல்கள் ஆகியவை இடம்பெற்றன. இவற்றில் பாட்டியும் மனைவி கிருஷ்ணகுமாரியும் காலமான பிறகு எழுந்தவை அவருடைய கண்ணீரில் நனைந்தன. துயரக் கண்ணீரில் நனைந்த சரம கவிகள் வாசகர் இதயத்தைத் தொடுகின்றன. ஆத்ம கீதம் காதில் ஒலிக்காவிடினும் கவிகள் உள்ளத்தை உருக்குகின்றன.

கிருஷ்ணகுமாரியைப் பற்றிய பாடல்கள் அடங்கிய மலர்மாலையில் உள்ள கவிதைப்படையல் உலகின் எல்லாப் பகுதியிலுள்ள மெய்யன்பர்களின் உணர்ச்சியைத் தூண்டும். சில தொடக்க வரிகள் பின்வருமாறு:

எழில் கொழிக்கும் கிருஷ்ணகுமாரி! என் எளிய குடில் ராணியே!
என் இதயகமலமே, ஆருயிரே, இணை பிரியாத் துணைவியே!
கண்மணியே, சென்று விட்டாய் நீ:
என்றாலும் நின் குணநல மனைத்தும்
என் குருதியில் கலந்துவிட்டனவே.
உன்னிலும் சிறந்த கற்புடையாளை
நான் கண்டதில்லை வாழ்நாளில்.
கணவன் பணியில் அர்ப்பணித்த இல்லாளும் வேறில்லையே.
நீலவானின் முழு மதிச்சோதியும்,
பனித்துளி முத்துக்களும், நனிவிரி தாமரையும்,
வனப்பு ரோஜாவும், இதயம் ஒன்றி,
இறைவனை நீர்வார் கண்ணுடன் நீ போற்ற,
அவையெல்லாம் குன்றி நின்றன.
அமைதி தவழும் உன் முக அழகு
விண்ணில் விரிந்தது என்பது என் கணிப்பு.
இரவில் உலகம் உறங்குங் காலை
மொட்டை மாடியிலும் பூங்காவிலும் நாமிருவர்.

4

திங்களும் விண்மீன்களும் நம் கண் முன்
மெல்ல மிதந்து சென்றன வானத்தில்;
எங்கணும் வானில் ஒளி பரப்பின.
அவை போலத்தான் நாமும்,
இல்லையா, என் கண்மணி?

'என்னைக் கண்ணீர் சிந்தவிட்டுப் புன்சிரிப்புடன் அவள் பிரிந்தாள்', 'சிரித்த முகத்தை என்று காண்பேன் இனி', 'என்னருமைத் துணைவி எங்கு சென்றுள் என்று சொல்வார் எவர்' என்ற கவிதைகள் உணர்ச்சி நிரம்பியவை. சித்திரவதைக்குள்ளான ஆன்மாவின் அடித்தளத்தில் அவை தோன்றின. ஒரு பெரும்புலவனுடைய ஆன்மாதான் காதலியின் அடிகளில் இத்தகைய பக்திப் பெருக்கோடும் அன்பைப் பொழிய முடியும்.

## புத்தர்மீது காப்பியம்

பக்கீர்மோகன் போன்ற பகுத்தறிவுள்ள ஒருவரைப் பௌத்தம் ஈர்ப்பது இயல்பே. ஓரிய மொழி இலக்கியத்துக்கு அவர் வழங்கிய மற்ற முன்னேடிகளைப் போலப் பௌத்தம் பற்றிய முதலாவது நூலையும் அவர் எழுதினர். புத்தருடைய வாழ்க்கையையும் சீரிய குறிக்கோளையும் பற்றிய காப்பியம் நீண்ட அறிவுச் செறிவுள்ள — செவ்வனே கொடுக்கப்பட்ட செய்திகள் அடங்கிய முன்னுரையுடன் உள்ளதாகும். அரை நூற்றுண்டுக்குப் பிறகுகூட ஒரு காலத்துக்குரியதாய் அமையவில்லை. அசுவகோசருடைய நேர்த்தியான புத்தசரிதம், ஆசிரியர் பெயர் தெரியாத லலித விஸ்தாரம், சர் எட்வின் ஆர்னல்டு எழுதிய பலர் விரும்பும் ஆசியச் சோதி ஆகிய நூல்களைப் போன்று பௌத்தாவதாரக் காவியம் அவருடைய சொந்தச் சரக்கில்லைதான். எனினும், இந்தக் காப்பியக் கவிதை பல பாவகைகளில் வரலாறறிந்த உலகப் பெரியாரின் வாழ்க்கை, சமயம் ஆகியவை பற்றிப் பகுத்தறிவுக் கண்ணேட்டத்தை விளக்கி எழுதப்பட்டதால் உறுதியாக ஒரு வழிகாட்டியாகும். மாருகப் பெரும்பாலான ஓரிய மொழிக்காப்பியங்கள் புராணக் கதைகள் செறிந்தவை.

## நச்சரிக்கும் மனைவி

'கவிஞனின் நச்சரிக்கும் துணைவி' என்ற தலைப்பில் மக்கள் வாயில் தவழும் சில வரிகளைக் குறிப்பிடாமல் இந்த அதிகாரத்தை முடிப்பது நன்றன்று. அக்கவிதை புலவர்களின் மனைவியராகிய பெண்ணினத்தின் இன்னல்களையும் முடிவில்லா மனக்குறையையும் கலைமகளை வழிபடும் அன்பர்களின் நின்று நிலவும் துன்பத்தையும் எல்லா நாடுகளிலும் காலங்களிலும் எதிரொலிக்கும்.

கவிஞன் மனைவி சொல்கிறுள் கவிஞனுக்கு:

'என்னுடைய இல்லம் என்று சொல்லப்படும் இவ்விடம் பாழாய்க் கிடக்கின்றது என்பது உங்களுடைய கண்ணுக்குத் தெரியவில்லையா? மீண்டும் மீண்டும் என்னுடைய முறையீடுகள்—ஓலங்கள் அனைத்துக்கும் நீங்கள் ஏன் செவிசாய்ப்பதில்லை? உங்களுடைய பாவகைகள், எதுகைகள், சொற்கட்டுகள் ஆகியவற்றுடன் இரவும் பகலும் நீங்கள் சுறுசுறுப்பாய் இருக்கிறீர்கள். நான் வீட்டு அடுப்பை மூட்டுவதற்குச் சில செப்புக்காசுகளைக்கூட அவை கொணர்வதில்லை. நான் வேண்டாமென்று விடாது தடுத்தும் அசட்டுத்தனமான சொற்சிலம்பங்களை ஏன் எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்? நம்மைச் சுற்றிலும் வாழ்பவர் புத்திக் கூர்மையான வழிகளைக் கையாண்டு பணம், வசதி, துணிகள், வண்டிகள் ஆகியவற்றையெல்லாம் சேகரிப்பதை நீங்கள் ஏன் பார்க்கிறதில்லை? இவற்றைப் பார்க்கமுடியாத உங்களுக்கு ஏதாவது மூளை இருக்கிறதா? உங்களுடைய இழிந்த பாடல்களைக் கேட்கவேண்டுமென்று எவன் கவலைப்படுகிறுன்? நான்தான் கேட்கின்றேன். முட்டாள்தனமான எதுகைகளுக்கு அடிமையாகும் பழக்கத்தை விட்டொழியுங்கள் என்று சொல்லி நானும் அலுத்துப் போய்விட்டேன். கடன் கொடுத்தவன் நேற்றுவந்து இறுதி எச்சரிக்கையை என் முகத்திலறைந்து சொல்லிவிட்டுப் போய்விட்டான். அன்புகூர்ந்து இதைத் தெரிந்துகொள்ளுங்கள். இதற்குப் பிறகும் அந்த மூலையில் உட்கார்ந்து கேடுகெட்ட—வறண்ட—இரண்டு வரிக் கவிதைகள் எழுதும் பொறுமை உங்களுக்கு எப்படியிருக்க முடியும் என்று என்ஞல் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை!'

# 10. மாபெரும் கதாசிரியர் கண்விழித்தார்

ஓரியக் கட்டுக்கதை இலக்கியத்தில் ஒரிசா முழுவதிலும் அதன் தந்தையென்றும் அத்துறையில் தலைசிறந்தவரென்றும் பக்கீர் மோகன் போற்றப்படுகிறுர். என்றுலும் ஐம்பது வயதையொட்டிய நடுப்பகுதிக் காலம் வரை தன்னிடம் அத்தகைய திறமை இருப்பதாகத் துளிகூட அவருக்குத் தெரியாது. வாழ்க்கையின் பிற்பகுதி வரை கவிதை மூலமாகவே அவருடைய எழுத்துப்பணி இருந்தது. உரைநடையோ கட்டுக்கதையோ அவர் எழுதவில்லை என்பது பொருளல்ல. குறைந்த ஊதியம் பெற்ற பள்ளியாசிரியரா

யிருந்தும்கூட பாலேசுவரில் அச்சுக்கூடமொன்றை அவர் நிறுவினுர். அதுமட்டுமன்றிப் புதிய கருத்துக்களைப் பரப்ப இதழ்களை வெளியிட்டுக் கேடுகள் விளைவிக்கும் சக்திகளுக்கெதிராக அவர் ஓய்வின்றிப் போராட்டம் நிகழ்த்திஞர்.

வங்கமொழி இதழ்கள், கதைகள் வழியே மக்களிடம்பரவி ஆதரவைப் பெற்றன என்பதை அவர் தெரிந்தவராதலால் அத்துறையில் முயற்சி மேற்கொண்டார். சென்ற நூற்ருண்டின் அறுபதாம் ஆண்டுகளையொட்டி ஒரிய மொழியில் முதன் முதலாகச் சிறுகதையொன்றை போததாயினி என்ற தம்முடைய இலக்கிய இதழில் அவர் வெளியிட்டார். லச்சமானியா என்ற தலைப்பைக் கொண்ட அச்சிறுகதை பற்றிய தகவல் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை.

1871 முதல் 1876 வரை பக்கீர்மோகன் நிர்வாக அலுவலராக ஈடுபட்டு வேறெதிலும் கவனம் செலுத்தமுடியவில்லை. பலகாலம் வேலையில்லாமலிருந்ததஞல் அவருக்குப் பணவசதியில்லை. அவர் நோய்வாய்ப்பட்டவராயுமிருந்தார். பாலேசுவர் மாவட்டத் தலைநகருக்கப்பால் புதிய இடம் நாடிப்போவதற்கு முன்பே பக்கீர்மோகன் நிறுவிய சேனுபதி அச்சுக்கூடம் மூடப்பட்டுவிட்டது. பிறர் கையில் ஒப்படைக்கப்பட்ட அவர் தொடங்கிய இதழ்கள் விரைவிலேயே நின்று போயின.

அவர் பாலேசுவரை விட்டு நீங்கிய இருபத்தைந்து ஆண்டுகளின் போதும் லச்சமானியா போன்ற இன்னெரு கதை தலைகாட்டவில்லை. எனினும், நாம் முன்பே தெரிந்துகொண்டபடி சமயத்துக்கேற்பவும் நிகழ்ச்சிகளையொட்டியும் அவர் கவிதையெழுதிக் கொட்டிஞர்.

சலிப்புத்தட்டும் நிர்வாக அலுவல்களிலிருந்து ஓய்வுபெற்ற பிறகு பக்கீர்மோகன் கட்டாக்கில் புதிய வசதிகளுடனமைக்கப்பட்ட தோட்ட இல்லத்திற்குக் குடிபோஞர். கிட்டத்தட்ட அதே சமயம் ஒரிசாவின் இலக்கிய மும்மூர்த்திகள் ராதாநாத், மதுசூதன், பக்கீர்மோகன் ஆகியவர்களின் பெருமதிப்புக்குரிய நண்பரும் ஒரிசாவின் சிறந்த பத்திரிகையாளருமான விசுவநாத்கர் கட்டாக்கிலிருந்து உத்கல சாகித்தியம் என்ற புகழ்வாய்ந்த ஒரிய மாத இதழை வெளியிட்டார். இலக்கியப் படைப்புக்களை மேலும் கவர்ச்சிகரமாக்க எல்லா இடங்களிலிருந்தும் கதைகள் அனுப்புமாறு விசுவநாத்கர் விண்ணப்பித்தார். இத்துறையில் முயலுமாறு பக்கீர்மோகனையும் அவர் வேண்டிஞர். ஆகா! இந்த வாய்ப்புத்தான் உறங்கிக்கொண்டிருந்த மாபெரும் மனிதரைத் தட்டியெழுப்பியது.

அப்போதிலிருந்து 1918ஆம் ஆண்டு—சாகும்வரை பக்கீர்மோகன் கதைகளையும் நாவல்களையும் எழுதித் தள்ளிஞர். படைப்பின் உச்சக்கட்டத்திலும் எந்த இள மேதைக்கும் அவை

சிறப்புத் தரும். ஓய்வுபெற்று வாழும் ஆண்டுகளில் குடும்பத்தின ரிடமிருந்து நன்றிப் பெருக்குடன் கனிவை ஒருவர் விரும்புவது போக வீட்டில் பொறுக்கமுடியாத மகிழ்ச்சியின்மை நிலவியது என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். அத்தகைய சூழ்நிலை யில் முதுமையில் அவருடைய உற்பத்திச் சாதனை இலக்கிய வரலாற்றில் அரிதாகும். கட்டாக்கில் குழுமியிருந்த அவருடைய நண்பர்கள்—உடன் பணிபுரிந்தோர் ஆகியோருடைய மனத்துக் குகந்த அறிஞர் சுற்றச்சூழல்கூட அவருக்குக் கிட்டவில்லை. மகனும் மருமகளும் குடிவந்ததும் பெரியவர் கட்டாக் தோட்ட வீட்டை விட்டகன்று பாலேசுவரில் கடைசிப் பத்தாண்டுகளைக் கழிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. நல்லகாலமாக, அங்கே யும் புறநகரில் வசதியுள்ள மாளிகை கட்டியிருந்தார். பக்கீர் மோகன் பிணிவாய்ப்பட்டுத் தனிமையில் மகிழ்ச்சியின்றிக் கழித்த இறுதியாண்டுகளில் கட்டாக்கிலும் பாலேசுவரிலும் உள்ள இரண்டு இல்லங்கள் உரைநடையும் கவிதையுமாக அவர் யாத்த குறிப்பிடத்தக்க இலக்கியங்கள் எழுந்த இடங்களாகும். அவை யெல்லாம் ஓரிசாவின் சமகாலத் திங்களிதழ்களான உத்கல சாகித்தியம், முகுரம் ஆகியவற்றின் ஆசிரியர்களின் வேண்டுகோள் களுக்கிணங்கிப் பெரும்பாலும் எழுதப்பட்டவையாகும்.

**பேச்சு வழக்குக்கு இடம் தந்தார்**

கட்டுக்கதையாசிரியராய்ப் பக்கீர்மோகன் தன்னுடைய புதிய வாழ்வைத் தொடங்குவதற்குள் தம் காலங்களில் சுடர்விட் டெரிந்து வங்க மொழியின் தொடக்க கால உரைநடை எழுதிய வல்லுநர்கள் மறைந்துவிட்டார்கள். பியாரி சந்திர மித்ரா, அட்சய குமார் தத்தா, ஈசுவர சந்திர வித்தியாசாகர், பூதேவ் முகர்ஜி, பங்கிம் சந்திரர் ஆகியவரெல்லாம் காலஞ்சென்றுவிட்டார்கள். இவ்வங்க மொழி அறிஞர் பெருமக்களின் நூல்களைப் பற்றிப் பக்கீர்மோகன் அறிந்திருந்தார் என்று கொள்ளலாம். ஆனால் அவருடைய உரை நடை நூல்களின் தரமும் போக்கும் மேலும் குறிப்பிடத்தக்க வகையில் இருந்தன. இப்பேரறிஞர்களின் தாக்கத்துக்கு உட்பட இந்த அரைகுறைப் படிப்பு மேதை மறுத்தார். பலரறிந்த இலக்கிய வழிகளினின்றும் முற்றிலும் பிறழ்ந்து, தனக்கென மிக அழகான தனிப்பாதையை வகுத்துக்கொண்டு கருத்து, நடை, முடிவு என்ற மூன்று துறைகளிலும் அரிய முன்னோடியாய் விளங்கினர்.

தற்காலக் கல்வியும், மேற்குக் கிழக்கு ஞானமும் பெற்றுப் புதிதாக நிறுவப்பட்ட கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் முறை யாகப் பயின்ற வங்க மொழிப் படைப்பிலக்கிய ஒளிவீசும் ஆசிரியர் கூட்டத்தினர்க்கு மாறாக இரண்டு ஆண்டுக்கும் குறைவாகத்

தொடக்கக் கல்வி பயின்ற பக்கீர்மோகன் விளங்கினுர். தன்னுடைய படைப்புக்கள் எல்லாவற்றிலும், மிகத் தூய்மையான மனிதாபிமானி எனச் சுடர் விட்டுக்கொண்டும், நல்ல புதிய கருத்துக்களுக்குச் செவிசாய்த்தும், தொன்றுதொட்டுச் சுரண்டும் அறிவிலிப் பூசாரிக் கூட்டங்களையும் இந்திய சமூகத்தை அரிக்கும் வேண்டாத மாசையும், செவ்வனே சாடியும், இந்திய நாட்டின் கருவூலமான விவசாயியின் நலனைப் போற்றியும், அவர் எழுத்துரைகள் அமைந்தன. அரை நூற்றுண்டுக்கு முன்னதாகவே பின்னுல் நிகழப்போவதை முன்னறிவிப்புச் செய்வதுபோல் அரசியல் வாதிகளும் இந்திய இலக்கியங்களில் முனைந்தவரும் எழுப்பிய வஞ்சக விளம்பரக் குரலைக் கண்டித்தும் அவர் எழுதினுர். இந்த ஒரிசா மேதை உண்மையான மக்களைப் பற்றி அவர்களின் அன்றுடப் பேச்சு மொழியிலேயே எழுதினுர். மக்கள் கவிஞர் என்று இன்று போற்றப்படும் ஏமாற்றுக்காரர் எழுத்துக்களில் சிலவரிகளைப் பேராசிரியரும் புரிந்து கொள்ளமுடியாது. ஆனுல் என்றைக்கும் பக்கீர்மோகனுடைய உரைநடையையும் கவிதையையும் ஒரிசாவின் எந்தப் பகுதியிலுமுள்ள கிராம மக்களிடம் சோதித்துப் பார்க்கமுடியும்.

மக்கள் குரல்

இன்றைய இந்திய மொழிகளில், எடுத்துக்காட்டாகத் தெலுங்கு அல்லது வங்கம் போன்ற மொழிகளில் சாதுபாஷை பற்றியும் படிப்பில்லா மக்களின் கொச்சைப் பேச்சு பற்றியும் நிகழ்ந்த இலக்கிய விவாதம் ஒரிசாவில் நடக்கவில்லை. அதற்குப் பெரும்பாலும் உதவியவர் பக்கீர்மோகன். நடைமுறையில் ராதாநாத் ராயும் மதுசூதனராவும் வங்க மொழியில் சமகாலத்தில் நிலவிய நடைபோன்று ஒரிசாவிலும் சாதுபாஷை நடையை வாசகர்க்கு மிகுதியாய் வழங்கினர். ஆனுல் இத்துறையில், பக்கீர்மோகனுடைய வழக்கத்திற்கு மாறுனதும் எதிர்பாராததுமான செயலாற்றல் இலக்கியக் குழாம் என்று கருதப்பட்டவரைத் தள்ளாடச் செய்தது. வாசகர் பக்கீர்மோகனுடைய கதைகளில் நாட்டு மண்ணின் மணம் வீசுவதை உணர்ந்தனர். சென்ற நூற்றுண்டில் ஐம்பதாம் அறுபதாம் ஆண்டுகளில் ஆலாலோர் தரேர் தலால் (பணக்காரக் குடும்பத்தின் கெடுக்கப்பட்ட குழந்தை) ஹூதோம் பஞ்சார் நக்சா (கூர்ந்து பார்த்துக்கொண்டிருக்கும் ஆந்தையின் வரைபடம்) என்ற வங்க மொழி நூல்களில் ஈசுவர சந்திர வித்தியாசாகரும் மற்றையோரும் உச்சியிலிருந்து கீழேயிறங்கி கல்கத்தா நகர்ப் புறத்தானை ஓர் இலக்கியப் பாத்திரமாகக் கையாண்டது உண்மையே. ஆனுல் 1897-ஆம் ஆண்டு பக்கீர்மோகன் தன்னுடைய கதைகளையும் நாவல்களையும் எழுதத் தொடங்குமுன்

அத்தகைய முறையை வங்காளத்திலேயே மக்கள் மறந்து விட்டார்கள். வங்கமொழியின் ஒத்த கருத்துக்களைப் பக்கீர் மோகனுடைய சாதனையுடன் இணைத்துப் பார்க்கும்பொழுது இராமகிருஷ்ண பரமஹம்சரின் கதாமிர்தம் என்ற நூலில்தான் காண முடியும். பக்கீர்மோகனைப்போன்று அவரும் மண்ணுக்குரியவர். அவர்களுடைய பண்பட்ட ஆன்மாக்கள் வெளியுலகம் காணவும் நுகரவும் ஒளிவு மறைவின்றிச் செயற்பட்டன.

எளிய மக்கள் பேச்சில் வல்லுனர்களில் ஒருவராயினும் பக்கீர் மோகன் அதைப் பெரிது படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அரை நூற்றாண்டுக்குமுன் சந்தப் பாடல்கள் (Lyrical Ballads) என்ற நூலுக்கு எழுதிய கூட்டு முன்னுரையில் வெர்ட்ஸ் வொர்த்தும் காலரிட்ஜும் இதைப்பற்றிய கொள்கையை விளம்பரப்படுத்தினர். சேனுபதி பல நடைகளைக் கற்றுத் தேர்ந்த புலவர் என்பதை வெளிப்படுத்தியுள்ளார் என்பது உண்மையாகும். திறமையுடன் சமயத்துக்கேற்றபடி உயர்ந்த நடையையும் கோடிக்கணக்கான மக்களின் நெஞ்சை அள்ளும் நாட்டு வழக்குச் சொற்றொடர்களையும் கையாண்டுள்ளார்.

## நாட்டின் செல்வம்

பக்கீர்மோகனுடைய கதைகளும் நாவல்களும் அவ்வப் பொழுது திட்டமிடாது குவிந்தன என்பது குறிப்பிடத்தக்கது. எனினும் அவைகளில் வியக்கத்தக்க முழுமையும், நன்றாக நிறை வேற்றப்பட்ட சிறந்த திட்டமும் விரிந்த பல வண்ண ஓவியமும் இறுதியாக ஒரிய மக்களின் ஒருங்கிணைந்த சித்திரமும் காணப்படு கின்றன, செர்வாண்டிஸ் எழுதிய டான்குவிக்சாட் ஸ்பானியர்களின் தேசிய வாழ்க்கையை முழுமையாகச் சித்திரிப்பதுபோல் பக்கீர் மோகனுடைய நான்கு சிறந்த நாவல்களும் பல சிறிய பெரிய கதை களும் ஒரிசாவின் இரண்டு நூற்றாண்டுகளை இணைத்து எழுந்தவை யாகும். பக்கீர் மோகனுடைய சிறப்பான படைப்புத் திறன் எளிய ஆணையும் பெண்ணையும் இலக்கிய உலகின் மேன்மைக்கு உயர்த் தியது. சமூக—அரசியல் துறைகளில் லெனின்களும் காந்திகளும் செய்வதற்கு முன்பே பக்கீர்மோகன் இதைச் சாதித்தார். எனினும் அவருடைய பரந்த படைப்பில் அவர் எந்தச் சமூகப் பிரிவினரையும் வேண்டுமென்றே தவிர்க்கவில்லை. சாதாரண மனிதன் சாதிக்கும் வகுப்புக்கும் அப்பாற்பட்ட அவருடைய உள்ளார்ந்த மனிதாபிமானத்தில் ஒன்றியவனுவான். எனவே பக்கீர்மோகனுடைய வாசகர்கள் அவருடைய படைப்பில் சமூகத்தின் எல்லாத் தளங்களிலிருந்தும் தோட்டி முதல் தொண்டைமான் வரையும் இலட்சிய வீரர்கள்—வீராங்கனைகளி

லிருந்து கசடர்கள்—அயோக்கியர்கள் வரையும் எல்லாரையும் காணலாம். நம் நாட்டின் சிற்றூர்களிலிருந்தும் பேரூர்களிலிருந்தும் வேணளவு அயோக்கியர்கள், கயவர்கள், முட்டாள்கள் ஆகியவர்களையும் விருப்பு வெறுப்பின்றித் தம் நூல்களில் அவர் புகுத்தியுள்ளார். நம்மிடம் இன்னும் ஒட்டிக்கொண்டிருக்கும் கிராமங்களைப் பற்றிய கனவுலகு மருட்சி பக்கீர்மோகனிடம் இல்லை.

தாகூர் ஒருவரைத் தவிர்த்துத் தற்கால இந்தியாவில் பக்கீர் மோகனை மிகத் தெளிவான நோக்குடைய அறிஞர் என்று சொல்லலாம். பரந்த—சிறந்த மனிதாபிமானத்தைக் கைவிட்டுக் குறுகிய பற்றுக்கும் பொய்மைக்கும் அவர் என்றும் ஆளானதில்லை.

# 11. சரியான வாழ்க்கைக் கண்ணுடி

தன்னைச் சுற்றியுள்ள இடங்களில் குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் தகுதியுடையன என்று தோன்றியபொழுதுதான் பக்கீர்மோகன் எழுத முனைந்தார். எனவே பெரும்பாலான அவருடைய கட்டுக் கதைகள் கண் மறைவாயிருப்பினும் மனித நலனுக்குப் பயன்படுகிற நிகழ்ச்சிகளைச் சார்ந்து நிற்கின்றன.

**மீண்டும் எலியாவாய்**

எடுத்துக்காட்டாகப் பலரறிந்த **மீண்டும் எலியாவாய்** என்ற அவருடைய சிறுகதையொன்றை நோக்குவோம். மாவட்டத் தலைநகரிலிருந்த தலைமை எழுத்தரொருவர் தன்னுடைய சிற்றூர் நாவிதச் சாதியினரைப் பல பணிகளில் ஈடுபடுத்தினர். அம் மனிதர் திறமை வாய்ந்தவர்; பெரிய உடலமைப்புக்கொண்டவரும் எந்த வேலைக்கும் தகுதியானவருங்கூட. புதிதாகத் தோற்றுவிக்கப் பட்ட கிழக்கிந்தியக் கம்பெனியின் உப்புப் பிரிவுக்குக் கிராமங்களில் காவலர் தேவைப்பட்டபொழுது தலைமை எழுத்தரின் அன்புக்குரிய நாவிதர் ஒருவர் தனக்கு வேலை தரும்படி மேலாளரை வேண்டினர். அவருடைய உதவியால் நாவிதருக்கு வேலை கிடைத்தது. எட்டியிருந்த கிராமமொன்றுக்கு அனுப்பப்பட்டுப் பல பணிகளில் ஈடுபட்டிருந்த நாவிதர் வேலைக்குரிய உடையணிந்து எல்லா வல்லமையுள்ள சர்க்காரின் உறுப்பினராய்க் கிராமத்து மக்களிடம் காணப்பட்டார். நேற்றைய நாவிதப் பையன் இன்று மதிப்புக்குரிய ஜமேதார் ஆனுன். இல்லமாகவும் அலுவலமாகவும் கிராமத்தில் ஒரே இடத்தை வைத்துக்கொண்டு சமைக்கவும் மற்றும் வேலைகளுக்கும் ஒரு சமையற்காரனை அவன் அமர்த்திக்

கொண்டான். இடைச்சாதி வேலையாள் சாதியை இழந்துவிடும் அச்சத்தில் நாவித ஜமேதார் சாப்பிட்ட எச்சில் தட்டுக்களைக் கழுவ மறுத்துவிட்டான். அவனுடைய சாதியினரின் வன்முறைக்கஞ்சி வேலைக்கு வராமல் நின்றுவிட்டான். புதிதாகப் பதவி உயர்வு பெற்ற நாவித ஜமேதார் சமூகத்தில் தானடைந்த ஏளனத்தை மறக்கவில்லை, மன்னிக்கவுமில்லை. விரைவிலேயே அந்த இடைச்சாதிப் பையனைத் திருட்டுத்தனமாக உப்பு உற்பத்தி செய்தான் என்ற பொய் வழக்கில் புகுத்திக் கைது செய்து மாவட்டத் தலைநகருக்கு விசாரணைக்கு அனுப்பவும் செய்தான். ஒரே முயற்சியில் இரண்டு காரியங்களில் வெற்றி காணலாம் என அவன் நம்பிஞன். அடங்கா இளைஞனைப் பழிவாங்கி அதன்மூலம் கிராமமனைத்துக்கும் பாடம் கற்பிக்கவும் அதே சமயம் உப்புக் களவாளியைப் பிடித்ததற்காக அரசிடமிருந்து பரிசு பெறவும் அவன் திட்டமிட்டான்.

இதற்கிடையில் மண்டைக்கன நாவிதன் கிராமத்துப் பூசாரியையும் அவமதிக்கத் துணிந்தான். ஒரு காலத்தில் கீழ்ச் சாதிப் பணியாளாயிருந்தவன்மீது 'மீண்டும் எலியாவாய்' என்று சாபமிடுவதைத் தவிர வெகுண்ட—அவமதிக்கப்பட்ட பிராமணனுக்கு வேறு வழியில்லை.

விசாரணை நடத்தின மாஜிஸ்திரேட் வழக்கைப் பொய்யென்று தள்ளுபடி செய்து இடையனை விடுதலை செய்தார். ஆனுல் ஊரார் இதைப்போன்ற வழக்குகளில் மாட்டிவிடப்படுவதைத் தவிர்க்கச் சும்மாயிருப்பதே சுகம் என்றெண்ணி வல்லமை படைத்த ஜமேதார் சாகிப்பைச் சமாதானப்படுத்த ஒழுங்காகப் பணம் கொடுக்க முடிவு செய்தனர். தொல்லை தரும் சட்ட நடவடிக்கைகளிலிருந்தும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள இம்முறை உதவும் என்று அவர் கருதினர்.

இந்த முறை நன்ருகவே செயற்பட்டது. மக்களிடை நிலவிய அச்சத்தைக் கொண்டு உப்புப் பிரிவுக் காவல் பணியாளர் அனைவரும் கைக்கூலி பெறுகிருர்கள் என்று மேல் அலுவலர்களுக்குத் தெரியவந்தது. எனவே கைக்கூலி வாங்குபவர்களைக் கண்டு பிடிக்க உளவுதாரரை அதிகாரிகள் ஆங்காங்கே அனுப்பிஞர்கள். தொடக்கத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டவர்களில் நம் நாவித ஜமேதாரும் ஒருவர். அதன் விளைவாய் அவர் வேலையை இழந்து விட்டதோடு மட்டுமன்றி சிறைவாசமும் செய்ய நேரிட்டது.

சிறைவாசமென்பது அக்காலத்தில் சமூகத் தீட்டு என்று கருதப்பட்டது. மிகுதியாகப் பணம் செலவு செய்து பரிகாரச் சடங்குகள் நடத்தி அத்தீட்டைப் போக்கமுடியும். நீதிமன்றத்தில் எதிர் வழக்காடச் செய்த செலவோடு சிறையிலிருந்து விடுதலை

யடைந்ததும் பாவமன்னிப்புக்காகச் செய்த பரிகாரச் சடங்கு களுக்கான செலவும் நாவிதரை வறுமையில் தள்ளிப் பழையபடி அவருடைய தொன்றுதொட்ட தொழிலில் புகுத்தியது. எனவே, பிராமணனுடைய 'மீண்டும் எலியாவாய்' என்ற சாபம் பலித்தது.

இக்கதை என்னவோ பக்கீர்மோகனுடைய சொந்தப் படைப்பன்று. பிராமணனுடைய சாபம் உறுதியாகப் பலிக்கும் என்பதை நிறுவும் மனப்பாங்குடைய மனிதரும் அவரல்லர். இந்து சமூகத்தட்டில் நாவிதனும் பிராமணனும் இரு கோடிகளிலுள்ளவர்களின் பிரதிநிதிகளாவர். கதையில் இருவரையும் நேருக்கு நேர் நிறுத்தித் தலைக்கனம் கொண்ட தறுதலைகள் எத்துணை இழிவுச் செயலில் ஈடுபடுவர் என்பதைத் தெரிவிப்பதே இம்முயற்சி. இச்சிறுகதையும் அவரைச் சுற்றிலும் வண்ணக் காட்சிகள் மாறுவதைப் போன்ற நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டது. ஜான் பீம்ஸ் தன்னுடைய சுயசரிதத்தில் சென்ற நூற்றுண்டின் எழுபதாம் ஆண்டுகளில் பாலேசுவர் மாவட்டத்தில் திருட்டுத் தனமான உப்பு உற்பத்தி குறித்து அவர் நேரில் கண்டவற்றை எழுதியிருக்கிறுர். அவருடைய அனுபவங்கள் பக்கீர்மோகன் கதை நிகழ்ச்சிகளை அரண் செய்கின்றன.

லச்சமா

பக்கீர்மோகனுடைய நாவல்களில் நேரடிக் கதைக் கருவூலங்களைச் சிறிது ஆராயலாம். அலிவெர்தி கான் வங்காளம், ஒரிசா, பீகார் ஆகியவற்றின் நவாப் ஆவதற்குள், டெல்லி—ஆக்ரா பெரும் புகழ் முகலாயர்கள் பெயரளவில் பட்டத்தைக் கொண்டிருந்தனர். மராட்டியக் குதிரைவீரர் எட்டியிருந்த சிதறுண்ட பகுதிகளைப் பிணையாகக் கொண்டார்கள். போஸ்லாக்களின் தலைநகரான நாகப்பூரிலிருந்து திரண்டுவரும் அச்சமூட்டும் பர்க்கீயர்களுக்கு ஒரிசா வசதியான நிலைக்களனுயமைந்தது. அலிவெர்தியின் தலைநகரான முர்ஷிதாபாத் தொலைவிலிருந்தது. எனவே, ஒரிசாவின் பெருவாரியான கண்டாயத்துத் தலைவர்கள் கொள்ளைக்கூட்ட மராட்டியத் தாக்குதல்களுக்குள்ளானுர்கள். அத்தாக்குதல்கள் எதிரியைத் தாக்கியதும் ஓடிவிடுதல் என்றவாறு அமைந்தனவாதலால் பதிலடி கொடுப்பதென்பது பயனளிக்கவில்லை. மேலும் பர்க்கீயர்கள் படைவீரர்களல்லர்; அநாகரிகத் திருடர்களும் கொள்ளைக்காரர்களும் ஆவர். நேருக்கு நேர் சண்டையிடுவதைத் தவிர்த்துக் கிராமப்புறத்து எளிய மக்களைக் கொள்ளையிடுவதும் தொடக்கத்தில் கிராமவாசிகள் எதிரிகளை எதிர்த்துக் காப்பாற்றிக்கொள்ள முற்பட்டால் கிராமங்களைத் தீக்கிரையாக்கவும் செய்தனர்.

முகலாயர்களின் ஒரிசா சூபா (மாகாணம்) சுதந்திர இந்து மன்னர்களின் கீழிருந்ததுபோல் கங்கையிலிருந்து கோதாவரிவரை விரிந்திருந்தது. மராட்டியர் ஊடுருவல்கள் இம்மாகாணத்தின் மேற்குப் பகுதிகளிலிருந்து படிப்படியாக வடகிழக்குப் பகுதிவரை நிகழ்ந்தன. ஆண்டுதோறும் இவ்விரிந்த பரப்பு லட்சக் கணக்கான கொள்ளைக்கார மராட்டிய வீரர்களின் குதிரைக் குளம்புகளின் கீழ் நசுங்கி ஓலமிட்டது. 1744-ஆம் ஆண்டு அலிவெர்தி கான் சேனைத் தலைவர்களில் ஒருவனுல் கொடிய பர்க்கியத் தலைவனுன பாஸ்கர் பண்டித் வஞ்சகமாகக் கொலை செய்யப்பட்டதும் மக்களும் அலிவெர்தியின் அரசும் தாங்கொணு இன்னலுக்குள்ளாயினர்.

பக்கீர்மோகனுடைய லச்சமா 18-ஆம் நூற்றுண்டின் பின் ஐம்பது ஆண்டுகளில் அவருடைய மக்களின் இருண்டகாலத்தைச் சித்திரிக்கிறது.

சமாண ஆட்ட குண்டா (ஆறு புள்ளி முப்பத்திரண்டு ஏக்கர்கள்)

1803-ஆம் ஆண்டில் பிரிட்டிஷார் மராட்டியர்களைத் தோற்கடித்து ஒரிசாவுக்கு வந்தார்கள். பிரிட்டிஷ் வருகையோடு வங்காளி அலுவலர்கள் கூட்டமும் புகுந்தது. 1804-ஆம் ஆண்டிலும் 1817–18-ஆம் ஆண்டுகளிலும் நடந்த பைக் கலகங்கள் பரம்பரை உரிமையுள்ள கண்டாயத்து பட்டாளத்தார் தொன்றுதொட்டு அனுபவித்து வந்த நிலங்களைப் பறித்ததோடு மட்டுமன்றி போர்க் கருவிகள் வைத்துக்கொள்ளும் உரிமையையும் பறித்துவிட்டன. கண்டாயத்து தலைவர்களின் நாட்டுப்பற்று எழுச்சியை ஒடுக்கப் பிரிட்டிஷார் கடைப்பிடித்த அடக்குமுறைகளே இதற்குக் காரணமாகும். எனவே, இரவோடு இரவாக ஆயிரக்கணக்கான வேளாண்மைக் குடியினரும் கிராமக் காவலரும் பிச்சைக்காரர் களும் கூலிகளுமாயினர். ஒரிசாவில் தொன்றுதொட்டு வழங்கி வந்த கௌரி என்ற நாணயம் செல்லுபடியாகாது என்றறிவிக்கப் பட்டு ஆயிரக்கணக்கான எளிய ஒரிய விவசாயிகள் புது நாணயத் தட்டுப்பாட்டினுல் வரி செலுத்த முடியாமல் தங்கள் மூதாதையர் விட்டுச்சென்ற நிலங்களை இழந்தார்கள். சிக்கலான நிலவரி விதிப்பு முறையினுலும் பாழாய்ப்போன 'இருட்டுச் சட்ட'த்தினுலும் சாதாரண மக்கள் பெரிதும் இன்னலுக்குள்ளானுர்கள். இவை கல்கத்தாவில் இருந்த எழுத்தர்களைக்கூட ஒரிசாவின் வரலாற்றுப் புகழ்மிக்க நிலப்பரப்புகளின் உடைமைக்காரர்களாக்கின. எங்கிருந்துகொண்டோ நிலத்துக்குரிமை கொண்டாடும் இதற்கு முன் கண்டிராத சமூக மாற்றத்தை இம்முறை தோற்றுவித்தது. புதிதாகக் கொண்டுவரப்பட்ட நில உரிமைச் சட்டங்களின்கீழ், நிலங்கள் விரைவில் கைமாறும் நிலை ஏற்பட்டது. பிரிட்டிஷ் நீதி

மன்றங்களில் புதிதாக வளர்ந்து வந்து வழக்குரைஞர்களின் ஆதரவைக்கொண்டு இம்முறை சாதாரண—எளிய—கபடமில்லா கிராமத்தொழில் வினைஞர்களையும் விவசாயிகளையும் ஒழித்து இரையாக்கிக் கொண்டது.

பக்கீர்மோகனுடைய சமாண ஆட்டகுண்டா (ஆறு புள்ளி முப்பத்திரண்டு ஏக்கர்கள்) என்ற நூல் ஒரிசாவில் பிரிட்டிஷாரின் முதல் ஐம்பது ஆண்டு ஆட்சியின் அவல நிலையை உரைக்கிறது. மேலும் ஐம்பதாண்டுக்காலம் மராட்டியப் பர்க்கியர்களிடம் அத் துரதிர்ஷ்ட நாடு அடைந்த வயிற்றைக் கலக்கும் அனுபவங்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முற்பட்டவையாகும்.

மாமு (தாய் மாமன்)

சென்ற நூற்றுண்டின் அறுபதாம் ஆண்டுகட்குள் மாவட்டத் தலைநகரிலிருந்த சில ஆங்கில உயர் பள்ளிகளில் தற்காலக் கல்வி யில் தொடக்கப் பயிற்சி பெற்ற சிலரே ஒரிசாவில் இருந்தனர். ஓரியர்கள் தங்கள் மண்ணிலேயே அவல நிலையிலிருந்தனர். இதை யறிந்த பிரிட்டிஷ் நிர்வாகத்தின் உதவியால் உயர்நிலைப் பள்ளிகளி னின்றும் வெளிவந்த சில ஓரியர்களுக்கு அரசின் கீழ்நிலைப்படி வேலைகள் காத்திருந்தன. ஒரு காலத்தில் செல்வத்தில் திளைத்த குடும்பப் பிள்ளைகள் வறுமைநிலை காரணமாக அவ்வேலைகளைப் பெற்ற அதிர்ஷ்டசாலிகளாவர். எட்டியுள்ள தங்கள் கிராமங் களினின்றும் வெளியேறி நகரங்களில் மனைவியர்களோடும் அவர்கள் குடியேறினுர்கள். ரெவின்யூ அலுவலகங்கள் என்ற அதிசய வட்டத்துக்குள் அனுமதிக்கப்பட்டதுமே அவர்கள் தங்களுடைய குடும்பங்களிழந்த பெருமையைக் கயமையினுல் பெறமுயன்றனர். சின்னத்தனமுள்ள கிராமத்து ஆண்களும் பெண்களும் அடங்கிய சிறிய பேய்க்கூட்டம் அறநெறிக்கொவ்வாச் சூழ்ச்சிகள் மூலம் பணமும் பதவியும் பெற முனைந்தார்கள் என்று சமாண ஆட்டகுண் டாவில் எழுதப்பட்டதை இது ஒத்திருந்தது.

பிராயச்சித்தம்

1878–ஆம் ஆண்டுக்குள் பக்கீர்மோகனுடைய காலம் முடிந்து விட்டது. எனினும், ஒரிசா பலதுறைகளில் புதுமையாகியுள்ளது. 1872-ஆம் ஆண்டில் ராதாநாத்ராயும் மதுசூதனராவும் கூட்டாசிரிய ராய்ப் புனைந்த கவிதாவளி வெளியீட்டுடன் ஒரிய இலக்கியத்தின் தற்காலம் தொடங்கிவிட்டது எனலாம். அதற்குள் ஓரியர்கள் தங்களினம் எந்நிலையில் ஒரு காலத்தில் இருந்ததென்பதை அறிந்து கொண்டு அது இழந்துவிட்ட சிறப்பை மீண்டும் எவ்வாறு கொணர் வது என்பதை அறிந்துகொண்டார்கள். பிரிட்டிஷார் ஒரிசாவைக்

கைப்பற்றிய சரியாக நூறு ஆண்டுகட்குப் பிறகு 1903-ஆம் ஆண்டில் உத்கல சமிலனி என்ற நிறுவனத்தின் ஆதரவில் ஒரிய மொழி பேசப்படும் பகுதிகளெல்லாம் ஒன்றுய் இணைக்கப்படவேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் விடுத்தார்கள். திரு. எம். எஸ். தாஸ், பண்டித கோப பந்துதாஸ் ஆகியவர் போன்ற ஒரிய மேன் மக்கள் மாகாண—ஏகாதிபத்திய மன்றங்களிலும் ஒரிசாவின் நியாயமான அரசியல்—நிர்வாகத் தேவைகள் பற்றி முழங்கினுர் கள். கட்டாக்கில் ஒரிய இலக்கியக் கழகம் (உத்கல சாகித்திய சமாஜம்) நிறுவப்பட்டு வார—மாத இதழ்கள் இடைவிடாது ஒரிய மக்கள் செவியில் அவர்களுடைய தொன்மைப் பெருமையை ஏற்றி வந்தன.

எனினும் புதுத் தலைமுறை ஒரியர்கள் கட்டாக்கிலும் கல்கத் தாவிலும் பெற்ற மேல்நாட்டுக் கல்வியின் தாக்கத்தால் சமூகச் சீர்குலைவு தொடங்கியது. புதிய பல்கலைக் கழகக் கல்வி பெற்றவ ரிடம் சாதியின் இறுக்கமானபிடி தளர்ந்து அவர்கள் தங்கள் துணைவியரைத் தாங்களே தேடிக்கொள்ளும் உரிமைக்காக ஒத்துழையாமையைக் கடைப்பிடித்தனர். குடியும் நாத்திக வாதமும் பலவிடங்களிலும் காணப்பட்டன.

1915-ஆம் ஆண்டு வெளியான பக்கீர்மோகனுடைய கடைசி நாவலான பிராயச்சித்தம் ஒரிசாவின் சமூக வாழ்க்கையிலேற்பட்ட வளர்ச்சிபற்றிக் குறிப்பிடுகிறது. அரசியல் மகாத்மாவின் புரட்சி கரமான தாக்கத்தில் அடுத்த எடுப்பு அதே இடத்தில் துவங்கு கிறது. சென்னையில் நடந்த இந்திய தேசியக் காங்கிரசின் ஆண்டுக் கூட்டத்துக்கு முதிய எழுபத்தைந்தாவது வயதில் சென்றபொழுது பக்கீர்மோகன் லோகமான்ய திலகரைக் கண்டு பேசினுர். 1918-ஆம் ஆண்டுக்குள் மகாத்மாவாகிவிட்டாலும், அவருடைய எழுத்துக் களில் ஒரிடத்திலும் காந்தியைப் பற்றிய குறிப்பு இல்லை. அவரு டைய தலைமுறையின் பெரும்பாலான இந்தியர்களைப் போன்று பக்கீர்மோகனுக்குப் பிரிட்டிஷ் ஆட்சியில் நிலவும் அமைதியில் நம்பிக்கை இருந்தது. இந்த உள்ளுணர்வுள்ள அறிஞர் தம் எழுத் துக்களில் ஏழ்கடல் தாண்டிவந்திருக்கும் வெள்ளையர்கள் நாட்டின் செழிப்பை இனிதே நுகருங்கால், பாட்டாளிகளாக வாழும் இந்தியர்களின் முட்டாள்தனத்தைத் கடிந்து மறைமுகமாகச் சாடியுள்ளார்.

சமாண ஆட்ட குண்டாவில் (1897) ஒரு கிராமத்துக் குளத்தைப் பற்றி அவருக்கே உரித்தான நையாண்டி மொழியில் அவர் சொல்வதாவது: குளக்கரையை யொட்டியுள்ள சேற்றில் விடிந்ததி லிருந்து இருள் கௌவும்வரை சொற்ப இரைக்குத் துருவிக் கொண்டிருக்கும் இருபதுக்கும் மேற்பட்ட கொக்கினப் பறவைகளைக்

காணலாம். ஆனுல் என்ன விந்தை! எங்கிருந்தோ இரண்டு பெருந்தீனிக் கடற்பறவைகள் பறந்து வந்து குளத்துக்குள் சில தடவைகள் மூழ்கிப் பெரிய மீன்களை வயிருரப்புசித்து—மிதமிஞ்சியும்கூட உண்டு விரைந்து சென்றன. மாலை கௌன்கள் (மாலை விருந்து உடை) அணிந்து மாலை விருந்துக்கு வந்துள்ள 'மேம் சாகிப்புகள்' போன்று நன்ருக மனநிறைவுடன் வெயிலில் சிறகுகளை விரித்து நிற்கும் பெருந்தீனிக் கடற்பறவையை இன்றுகூடக் குளத்தின் கரையுச்சியில் பார்க்கலாம். எளிய இந்தியக் கொக்கினங்களே! நேற்று ஒட்டைப்பைச் சட்டையுடன் வந்த ஆங்கிலக் கடற்பறவைகள் கடல் கடந்து வந்து அருமையான மீன்களைப் பைகளில் நிரப்பிக் கொண்டு எவ்வளவு மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்கின்றன. ஆனுல் மூடர்களாகிய நீங்கள் குளக்கரை மரக்கிளைகளில் அமர்ந்து நாளெல்லாம் பாடுபட்டும் சொற்ப இரைகூடக் கிடைக்காமல் தவிக்கிறீர்கள். இப்போது உயிர்வாழ்வதே ஒரு போராட்டமாகி விட்டது. மேலும் மேலும் வெகு விரைவில் பல கடற்பறவைகளை நீங்கள் எதிர்பார்க்கலாம். குளத்திலுள்ள எல்லா மீன்களையும் அவை தின்றுவிடும். உயிரின்மேல் உங்களுக்கு நாட்டமிருந்தால் நீங்களும் அக்கடற்பறவைகளின் முறையைப் பின்பற்றுவீராக! கடலில் நீந்த நீங்கள் கற்றுக்கொள்ளவேண்டும். வேறு எவ்வகையில் நீங்கள் உயிரையும் உடலையும் பிணைத்துவைப்பீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

கற்பனைத்திறன் வாய்ந்த—நாட்டுப்பற்றுள்ள ஆசிரியரின் உருவக எண்ணங்களில் அரசியல் கருத்துகள் நிழலாடுவதை அரை நூற்றுண்டுக்கு முன்பே வாசகர் அறிந்திருந்தனர்.

### துடியான ஆண்களும் பெண்களும்

சிறப்பு மிக்க ஆசிரியரின் நாவல்களை நாம் ஆராயும்போது இரண்டு அடிப்படை உண்மைகளை மறந்துவிடக்கூடாது. ஒன்று: ஒன்றரை ஆண்டுக்குக் கூடுதலாக அவர் முறையான கல்வி பயின்றவரில்லை. இரண்டு: எழுதுவதைத் தொழிலாகக் கொண்டு, குறிப்பாகப் புதுவழி தோற்றுவிக்கும் நாவலாசிரியராகப் பேரும் புகழும் அடையவேண்டுமென்ற ஆசை அவருக்கிருந்ததில்லை. அவ்வப்போது தனக்குத் தோன்றியவாறு கவிதைகள், காவியங்கள், கட்டுரைகள், கதைகள், நாவல்கள் ஆகியவற்றை எவ்வித அக்கறையுமின்றிப் பருவநிலையடைந்த எழுத்தாளராகிய அவர் படைத்தார். அணியிலக்கணம் பற்றியோ, கலை நுணுக்கம் பற்றியோ அல்லது வாசகர்பால் தன்னுடைய நூல்கள் எத்துணைத் தாக்கத்தையுண்டாக்கும் என்பது பற்றியோ அவர் கவலைப்படவில்லை. இதே காரணங்களினுலேயே, நாட்டுப்புற அல்லது நகர்ப்

புற எளிய ஆண் பெண்ணுடைய கலப்படமற்ற—ஈடற்ற—கிளர்ச்சி யூட்டுகிற வழக்காற்றுப் பேச்சு அவருடைய நூல்களில் பட்டை தீட்டப்படா இயல்புடன் விளங்குகிறது. ஆனுல் அவ்வியல்பு மேதையொருவரின் உள்ளத்தில் கிளர்ந்தெழும் எண்ணங்களுக்குச் சிறப்புப்பொருள் அளிக்கிறது. அது பிறப்பிலேயே அறிவுச் செறி வுள்ளவரும் முதிர்வினைஞருமான சேனுபதியின் உருக்கமூட்டும் பகட்டில்லாக் கலையாகும். எனவே, கிட்டத்தட்ட பள்ளிப்படிப்பே இல்லாத முன்னேடியிடமிருந்து முற்றிலும் ஒரு வரையறைக்குட் பட்ட பென்னெட் அல்லது ஹார்டி என்பவரின் சிறப்பக்கலை நுணுக்க அறிவுக்கூறுகளை நாம் எதிர்பார்க்கக்கூடாது. தற்காலக் கட்டுக் கதை இலக்கியத்தில் குழப்பத்தைத் தூண்டும் வீர தீரச் செயல்களை யும் எதிர்பார்க்கமுடியாது. ஆனுல் வாழ்க்கையில் நம்மைப் போன்று அவர் நேரில் கண்ட ஆண்களையும் பெண்களையும் உலாவ விடுவது கதைக்கருவூலங்களுக்கு உயிர்த்துடிப்பையளிக்கிறது.

பக்கீர்மோகனுடைய காலத்துக்குப்பின் ஒரியக் கட்டுக்கதை இலக்கியம் வளர்ச்சி பெற்றிருக்கிறது. இயல்பான ஆண்கள் பெண்கள் ஆகியவர்களைப் படைப்பதிலும், நாட்டுப்புற—நகர்ப் புறக் கல்லா மக்களைக் கலப்படமில்லா வழக்காற்றுச் சொற்களைப் பேசவைப்பதிலும் சேனுபதியை ஒப்பாரும் மிக்காரும் ஒரிய நாவலா சிரியர்களில் எவரும் இலர்.

புதிதாக முன்னிருந்ததைப் பின்பற்றும் முறை, தனிப்பாங்கு, சிறப்பான வேறுபட்ட வளர்ச்சி, அடையாளம், விளம்பரம் ஆகிய வற்றையும் பட்டப்பகலில் வெட்கமின்றிக் கையாளப்படும் திருட் டுத் தொழிலையும் நாம் காண்கின்றேம். ஆனுல், எங்கணும் சேனு பதியின் கட்டுக்கதைகளில் நாட்டு மண்ணிலிருந்து தோன்றிய பாத் திரங்களைப் பின்பற்றி மெய்யான ஒரிய ஆண்களையும் பெண்களையும் படைக்கும் உள்ளார்ந்த—இயல்பான சக்தி இடம் பெறவில்லை.

சற்றுப் பின்நோக்கிப் பார்த்தால், அரை நூற்றுண்டுக்கு முன்பெழுந்த அவருடைய எல்லா நூல்களிலும் எளிய மானிடனுக் காகக் கிளர்ந்தெழுந்த மனிதாபிமானப் பரிவைக் கண்டு நாம் வியக்கின்றேம். அத்துடன் நுண்ணிய ஒரே நிலையில் செயற்படும் ஒழுக்க உயர்வையும் நிலைபிறழா நடுநிலைமையையும் காண்கின் றேம். ஒட்டுப்பற்றின்றி நம் சமூகத்தின் அடித்தள எளிய மக்க ளிடையே இருப்பதாகக் கருதப்படும் கீழ்த்தரக் கயவர்களையும் சாத்தான் குடிகொண்ட மேல்தளத்தில் காணப்படும் பேரான்மாக் களையும் அவர் தம் நூல்களில் புகுத்தியுள்ளார். சாதி, சமயம், சமூக நிலை என்பவற்றைக் கடந்த நிலையில் பேராசிரியரின் உறுதி யான நம்பிக்கையை இது காட்டுகிறது. தனிப்பட்டவர்களின் துயரங்கள் நம்முடைய ஒழுக்கநெறிகளுடன் பிணைக்கப்பட்டு

அவற்றினின்றும் பிறழ்வதைப் பொறுத்தனவாகும். சமூகத்தின் எல்லாப் பிரிவுகளிலும் குறிப்பிட்ட மனிதர்களைப் பிறருக்கு வழி காட்டும் ஒளியாக இயங்குமாறு இறைவன் சான்ருண்மையுடை யோராய் விதித்துள்ளான்.

சேனுபதியின் சமாண ஆட்டகுண்டாவில் அமைதியான நாட்டுப் புறச் சூழலில் நிகழ்ந்த உள்ளமுருக்கும் அவலம் அவருடைய கட்டுக்கதைப் படைப்பில் தன்னையறியாமலேயே எத்துணை உயர்ந்து ஒளிவீசுகிறது என்பதை எடுத்துக்காட்டும்.

இராமச்சந்திர மங்கராஜா எட்டியுள்ள ஒரிசா கிராமத்தில் எளிய அனதைச் சிறுவன்; கிராமங்களில் வீடு வீடாகச் சென்று இரந்து எப்படியோ உயிர் வாழ்ந்தான். ஏனினும் உள்ளூரில் பிறந்த கூர்த்த அறிவுடையனுதலால் சிறுபிள்ளைப் பருவத்திலிருந்தே சமூக நிலையை நன்கு தெரிந்தவன். அவனுடைய தீயூழைக் கடியும் வகை யில் தன்னுடைய கிராமத்தில் மிகக் கூடுதலான சொத்துக்காரனுகி விட உறுதி பூண்டான். சிறிய அளவில் வியாபாரம் செய்தும் கடன் கொடுத்தும் முதலில் அவன் தொழிலைத் தொடங்கினுன். பணம் சேர்க்கும் முயற்சிகளில் அவன் பெரும்பாலும் வெற்றி கண்டான். வங்காளத்திலுள்ள முஸ்லிம் ஒருவனுக்கு மங்கராஜா வின் கிராமம் சொந்தமானது. அவனே கிராமத்தில் வாழ்பவனல் லன். மிட்னைப்பூரிலுள்ள பண்ணை வீட்டிலிருந்துகொண்டு தன் னுடைய வீண் செலவுக்குப் பணம் அனுப்புமாறு அதிகாரம் செலுத்திக்கொண்டிருந்தான். இதற்குள் நல்ல நிலைக்கு வந்து விட்ட கபட மங்கராஜா நிலைமையை உன்னிப்பாக நோக்கி வந் தான். ஜமீன்தாருக்குப் பணம் செலுத்திய மேலாளுக்குப் பணம் அனுப்ப முடியாத நிலை ஏற்பட்டது. கேட்டபொழுதெல்லாம் பணம் கொடுக்க முடியாதென்று சொல்லிப் பணம் கொடுப்பதை நிறுத்திவிட்டான்.

இந்த இடைவெளியை நிரப்பத் தந்திரசாலியான மங்கராஜா முன்வந்து ஊதாரி ஜமீன்தாருக்கு ஆசைகாட்டி மோசம் செய்து புதிய வரி வாங்கும் மேலாளராக நியமனம் பெற்றுக் கொண்டான். வரிப் பாக்கிகள் இருக்கும்படி சூழ்ச்சியால் ஒரு நிலையை உருவாக்கி நீதிமன்றம் ஜமீனை ஏலம் போட்டபோது ஜமீன் முழுவதையும் தன் னுடைய சொத்தாக்கிக் கொள்வதென்பது அவனுக்குப் பெரிய காரியமன்று.

ஜமீன்தாராகிவிட்ட மங்கராஜா சொத்துக்களைச் சேர்ப்பதில் தீவிரமாக முனைந்தான். நல்லவழியிலோ அன்றி வேறு முறையிலோ அவன் பிறர் பணத்தையும் சொத்துக்களையும் பறிக்கத் தொடங்கி னுன். தெருவில் கிடந்த நேற்றைய ஏழ்மையன் இன்று பெரிய

நிலச்சுவான் தார் மட்டுமன்றிக் கிராமங்களில் இருபது மைல்களுக்கு மேற்பட்ட சுற்றளவில் தெரிந்துக்காரனும் கொடுக்கல் வாங்கலில் பெரும்புள்ளியுமாகிவிட்டான்.

அவனுடைய சிற்றூரையொட்டித் துணி நெய்வோரின் குடியிருப்பொன்றிருந்தது. பரம்பரை மணியக்காரன் தலைமையில் இயங்கும் பஞ்சாயத்து அவர்களுடைய நலனைப் பாதுகாக்க அவர்கள் ஒரு தனியுலகில் வாழ்ந்தார்கள். அப்பொழுது கல்வியறிவில்லா பாகியா அவ்வினத்தின் மணியக்காரன்; அதன் சின்னமாக விளங்கினான். அத்தகையளே அவனுடைய மனைவி சாரியாவும். பிள்ளையில்லாக் குறையால் அவர்களுடைய மணவாழ்க்கை முற்றுப் பெருதிருந்தது. சாரியா தன்னுடைய தாய்மையுணர்ச்சிகளை ஆசையுடன் வளர்த்துவந்த பசுவின் மீது சொரிந்தாள்.

ஆறுபுள்ளி முப்பத்திரண்டு ஏக்கர்ப் பரப்புள்ள—கிராமத்திலேயே மிகச் செழிப்பான நன்செய் நிலம் பாகியாவுக்குச் சொந்தமானது. நாள்தோறும் விரிந்து கொண்டிருந்த மங்கராஜாவின் வயல்கள் இதற்குள் சிறியதானலும் அருமையான பாகியாவின் நிலத்தை எட்டிவிட்டன. மங்கராஜா அங்கேயே நின்றுவிடுவதா?

இதற்குள் மங்கராஜாவுக்குப் போதுமான பணப்பலம் வந்துவிட்டாலும், மனிதன் அடக்கமுடியாத இன்னொரு பாலுணர்ச்சியையும் அவன் ஒடுக்கவில்லை. பாவமூட்டைகளுக்கிடையில் அவனுடைய மனைவி உருவில் தூய்மை விளக்கொன்று சுடர்விட்டெரிந்து கொண்டிருந்தது. அவளுடைய கணவனே கயவன். ஆனல் அவனுடைய செழிப்பனைத்துக்கும் காரணம் மறைபொருளாய் நின்ற மனைவி என்று கிராம மக்கள் அவளைப் போற்றினர்கள். இக்கற்புத் துணைவியை நோக்காது நெறி தவறிய மங்கராஜா கெட்ட பேர்பெற்ற சம்பா என்ற வைப்பாட்டியினிடம் தன்னுடைய ஆன்மாவை அடகு வைத்தான். ஆனல் அவளோ அவனுடைய இல்லத்தில் மட்டும் ஆதிக்கம் செலுத்தவில்லை; மற்ற எல்லா விவகாரங்களையுமே ஆட்டிப்படைத்தாள்.

எளிய பாகியாவின் ஆறுபுள்ளி முப்பத்திரண்டு ஏக்கர் நிலங்களின் மீது அவனுக்கொரு கண் என்று தெரிந்து தந்திரக்காரச் சம்பாவுக்கு பருந்து புருவைச் சாடுவதைப் போலக் கபடமற்ற சாரியா மீது அவள் பார்வை விழுந்தது. அவளுக்கு மகப்பேறில்லாக் குறையை நினைவுபடுத்தி உறுதியாகத் தீர்வு காணமுடியும் என்றும் குளக்கரை ஆலமரத்தடியில் கூரையில்லாத அம்மனுக்குக் கோயில்கட்ட அவளுடைய கணவனைத் தூண்டுமாறு சொன்னாள். மலடி என்ற அவமானத்தைப் போக்கிக் கொள்ளப் பாவம் சாரியா தொடக்கத்தில் சற்று சலித்தாளாயினும் சம்பாவின் ஏமாற்றுத் திட்டங்களை நம்பி இணங்கினாள்.

பாகியா தன்னுடைய ஆறுபுள்ளி முப்பத்திரண்டு ஏக்கர் நிலங்களை மங்கராஜாவுக்கு அடமானம் வைத்துக் கோயில் கட்டுவதற்கு வேண்டிய பணத்தைப்பெற்ருன். சட்டப்படி எழுதப்பட்ட பத்திரத்தில் பெருவிரல் ரேகையைப் பதித்தானேயொழிய அதில் கண்ட ஒரு சொல்லும்கூட அவனுக்குப் புரியவில்லை. பாகியாவுக்குச் சேர வேண்டிய அடமானத் தொகைக்காக அம்மன் கோயிலுக்கருகில் சில வண்டிக் கற்களை மங்கராஜா கொட்டுவித்தான். கோயிலைக் கட்டுவதில் மேலும் கற்களையடுக்கப் பாகியாவிடம் வேறு சொத்து ஏதுமில்லை. அடமானப் பத்திரத்தின் காலவரையறை முடிந்ததும் மங்கராஜா ஒரு பாவமுமறியாப் பாகியாவுக்கு எதிராக வழக்குத் தொடர்ந்து தனக்கு ஆதரவாகத் தீர்ப்பை எளிதில் பெற்ருன். பாகியாவின் நிலத்தைப் பெற எவரும் ஆசைப்படுவர். சட்டப்படி அந்த நிலத்தின் உடைமையைப் பெற்றதுமன்றி வழக்குச் செலவுத் தொகைக்கும் வட்டிக்குமாகச் சேர்த்து கைத்தறி நெசவு செய்து பிழைக்கும் கணவன் மனைவியர் வீட்டையும் மங்கராஜா பறித்துக் கொண்டான். இக்கொடிய கொடுக்கல் வாங்கல் நடவடிக்கைக்குப் பிறகு சாரியாவின் ஆசைப்பசு நேதாவின் மீது சம்பாவின் கண்கள் பதிந்தன. அந்தப்பசு அவர்களுடைய ஆசைப்பொருள் மட்டுமன்றி மகப்பேறில்லாச் சாரியாவின் உயிரேயாகும். வன்முறையைக் கையாண்டு இரக்கமில்லாதார் பசுவை இழுத்துக்கொண்டு போவதை இருக்க இடமில்லாமல் தவிக்கும் கைத்தறியாளரின் வீராங்கனை மங்கராஜாவின் வீட்டுப் புழைக்கடைவரையோடி, அருமைப் பசுவைக் கூப்பிட்டழுது அங்கிருந்து போகச் சாரியா மறுத்தாள். அந்தப் பிடிவாத ஏழைப் பெண்ணை மங்கராஜாவின் கூலிப்பட்டாளம் இரக்கமின்றி அடித்தார்கள். மென்மையான அப்பெண் சித்திரவதை தாங்காமல் மங்கராஜாவின் வீட்டுப் பின் புறத் திண்ணையில் இறந்துபோனுள்.

அதே சமயம் மங்கராஜாவின் இறையன்பு மிக்க மனைவியும் இறந்தாள். அதன்பிறகு மங்கராஜாவின் விவகாரங்களில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. சாரியாவின் அவலச்சாவு அவளுடைய சூதுவாதில்லாக் கணவனைப் பைத்தியமாக்கிவிட்டது. போலீஸ் விசாரணையும் வந்தது. பாகியாவின் வீட்டையும் வயல்களையும் மங்கராஜா உடைமையாக்கிக்கொண்டது சட்டத்துக்குட்பட்டதே. வன்முறையாகச் சாரியாவின் பசுவை இழுத்துக்கொண்டு போனதற்காக அவனுக்குச் சில மாதங்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அக்காலத்தில் குற்றவாளிகளையும் பைத்தியம் பிடித்தவர்களையும் ஒரே சிறைச்சாலையில்தான் அடைத்திருந்தார்கள். மங்கராஜாவும் பைத்தியப் பாகியாவும் கட்டாக்கில் ஒரே சிறையில் இருந்தார்கள். சிறைச்சாலையில் மங்கராஜாவின்

அறையிலிருந்த சிலர் அவனுல் திட்டமிட்டுச் சதிசெய்த வழக்கு களில் சதிக்கிரையாகி வந்தவராதலால் பழிவாங்க வேண்டும் என்ற நோக்கம் ஓங்கியிருந்தது. ஓரிரவு அவர்கள் அவனைத் தாக்கினுர்கள். சிறைச்சாலையில் அவனுக்கேற்பட்ட காயங்களுக்காக மருத்துவ உதவியளித்துக் கொண்டிருக்கும்போது பைத்தியக்காரப் பாகியா அவன் பக்கம் ஓடி எப்படியாவது அவனுடைய மூக்கை அறுத்துவிட முயன்ருன், அந்தோ, மங்கராஜாவின் நிலைமை வெகு மோசமாகிவிட்டது. உரிய காலத்துக்கு முன்பே அவன் விடுதலை செய்யப்பட்டான். தன் வீட்டு முற்றத்தில் 'ஆறுபுள்ளி முப்பத்திரண்டு,' 'ஆறுபுள்ளி முப்பத்திரண்டு' என்று முணுமுணுத்துக் கொண்டே சாகத்தான் விடுவிக்கப்பட்டான் போலும்! காலஞ் சென்ற அவனுடைய தர்மபத்தினியின் ஒளிவிடும் உருவம் விசும்பி னின்றும் வெளிப்பட்ட காட்சியைக் கண்டு அமைதியுற்ருன்.

மங்கராஜா சிறைச்சாலையிலிருந்தபோது சம்பா அவனுடைய பணம், நகைகள் ஆகியவற்றை மூட்டை கட்டிக்கொண்டு மறைமுகமாய் கிராமத்தை விட்டு வெளியேறினுள். மங்கராஜாவின் நாவித வேலையாள் கோவிந்தன் உதவியுடன் கட்டாக்கில் கீழ்த்தர விடுதியொன்றை அமைப்பதுவே அவள் திட்டம். கோவிந்தன் ஆள் சேகரிப்பதிலும் பாதுகாப்பு அளிப்பதிலும் உதவுவான் என்பனவும் அதில் அடங்கும். கோவிந்தனே மணமானவன், தந்தையும்கூட. அவன் விரும்பியதெல்லாம் கொள்ளையில் கூட்டுப் பங்கு பெற்று தன்னுடைய பரம்பரைத் தொழிலை மறந்து கிராம மக்களிடையில் மதிப்பைப் பெறுவது. தனியாக இரவில் வழியிலுள்ள சத்திரத்தில் தங்கியபோது மாறுபட்ட திட்டங்கள் குறித்து அவர்களுக்குள் வேற்றுமை ஏற்பட்டது. கடுஞ்சீற்றமடைந்து உண்ண மறுத்துக் கோவிந்தன் வெளித் திண்ணையிலமர்ந்தான். சம்பா நன்ருக உண்டு விலை மதிப்புள்ள சின்னப்பையைத் தலையணையாக வைத்துக் குறட்டை விட்டு உறங்கினுள்.

பசியினுலும் சோர்வினுலும் உழன்ற கோவிந்தன் வெகுநேரம் சிந்தனையிலாழ்ந்தான். இன்னல்களுக்கு ஒரு முடிவுகாண அவன் உறுதியும் பூண்டான். நாவிதன் பெட்டியிலிருந்து கூர்மையான க்ஷவரக் கத்தியைக் கையிலெடுத்து இருளடைந்த சத்திரத்திற்குள் புகுந்து உறங்கிக்கொண்டிருந்த சம்பாவை எவ்விதத் தடங்கலு மின்றிக் கொலைசெய்தான். விலை மதிப்புள்ள மூட்டையைத் தூக்கிக் கொண்டு அவன் அருகிலுள்ள தோணித்துறைக்கு ஓடினுன். உறங்கிக்கொண்டிருந்த படகோட்டி ஒரு பயணிக்காக உறக்கத் தைத் துறக்க விரும்பவில்லை. எனினும் வெறிபிடித்த கோவிந்தன் படகோட்டி எதிர்பார்க்க முடியாத கொடையை அவனுக்களிக்க வும் ஒப்புக்கொண்டான். படகு நடு ஆற்றில் சென்றுகொண்டிருக்

கையில் விடியற்காலை வெளிச்சத்தில் கோவிந்தன் உடையில் இரத்தக் கறைகள் படிந்திருப்பதைக் கண்டு படகோட்டி கேள்வி கேட்கலானுன். அதே சமயம் அஞ்சல் சுமந்து ஓடும் தபால்காரன் பைகளுடன் எதிர்க்கரையில் தென்பட்டான். குற்றமிழைத்த தன்னைக் கண்டுபிடித்துக் கைது செய்துவிடுவார்களென்றஞ்சிக் கோவிந்தன் நெறிதவறிச் சேர்த்த மங்கராஜாவின் பணமூட்டை யுடன் ஆற்றில் குதித்து அங்கிருந்து மீளவில்லை.

ஒன்றுமறியா நாட்டுப்புற மக்களை அடிப்படையாகக் கொண்டு உள்ளமுருக்கும் அவலச் சுவையுடன் எத்தனை இந்திய இலக்கிய நூல்கள் உள்ளன? கிராமத்துக் கீழ்மக்களிலிருந்தும் நாட்டுப்புற முட்டாள்களிலிருந்தும் மதிப்பு வாய்ந்த ஆண் பெண் பாத்திரங் களைப் பக்கீர்மோகனுக்கு முன்னுல் எவர் படைத்துள்ளார்? இந்த நூலில் மட்டுமன்றிக் கிட்டத்தட்ட எல்லாக் கட்டுக்கதைகளிலும் பக்கீர்மோகனுடைய சுவையூட்டும் பாத்திரங்கள் நாவிதர், கைத் தறி நெசவாளர், பயிர்த்தொழில் உழவர், தீண்டாதார் ஆகியவர் களே. தலையாய வியப்பென்னவெனில் சமாண ஆட்ட குண்டா என்ற குறிப்புப் பொருள் கொண்ட தலைப்பில் நாவல் எழுதும் திட்டமே பக்கீர்மோகனிடம் இல்லை. (ஆறுபுள்ளி முப்பத்திரண்டு ஏக்கர்கள்). ஆசிரிய நண்பர் விசுவநாக்கர் மீண்டும் மீண்டும் ஒரு கதை எழுது மாறு வற்புறுத்தவே பக்கீர்மோகன் எழுதத் தொடங்கினுர். இருபது ஆண்டுகள் இடைவெளிக்குப் பிறகு இவ்விலக்கியப் பாணி யில் இது அவருடைய இரண்டாம் முயற்சியாகும். ஆனுல் இந்த இரண்டாவது கதை நாவலாக விரிந்தது.

டிக்கன்சினுடைய 'பிக்விக் பேப்பர்ஸ்' என்ற தொடர் நாவலை யொத்து சமாண ஆட்ட குண்டா ஒரிசாவில் உடனடியாக இலக்கிய வெற்றி பெற்றது. அந்த ஆங்கிலச் சிறப்பிலக்கியம் போன்று தங்களுடைய இனவாழ்க்கையில் காணப்படும் குறைகள் ஓரியர் களைச் சிரித்து மகிழச் செய்தன. முன்னெவரும் உன்னிப்பாக நோக்கி அவற்றைச் சிறந்த நகைச்சுவையுடன் படைக்கவில்லை. உத்கல சாகித்ய இதழ்ப் பக்கங்களில் கதை வெளிவந்து கொண்டிருக் கையில் சாரியாவின் சாவும் சம்பாவின் கொலையும் பற்றிப் போலீஸ் விசாரணை நடந்துகொண்டிருந்தது. எட்டியுள்ள கிராமங் களிலிருந்து மக்கள் கட்டாக் நகருக்கு வந்து நீதிமன்ற நடவடிக்கை களையும் குற்றவாளிக் கூண்டில் நிற்கும் இராமச்சந்திர மங்க ராஜாவை நேரில் பார்க்கவும் இது கனவுக் காட்சி போலிருந்தது. பொதுமக்களிடையில் இதைப்போன்று எத்தனை கட்டுக் கதை இலக்கிய நூல்கள் மன எழுச்சியைத் தோற்றுவிக்கும் உரிமை கொண்டாட முடியும்?

# 12. வியப்பூட்டும் புதுமை

நாட்டுப்புறப் பின்னணியிலமைந்த சமாண ஆட்ட குண்டாவுக்கு மாருக பக்கீர்மோகனுடைய பிராயச்சித்தம் கட்டாக் நகரத்தை மையக்களமாய்க் கொண்டு விளங்குகிறது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்த பல்கலைக் கழகப் பயிற்சி பெற்ற மேட்டுக்குடி மக்கள் அதனுடைய ஆண்—பெண் பாத்திரங்களாவர். புதிதாய்த் தொடங்கப்பட்ட பல்கலைக் கழகங்களிலிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் மேல்நாட்டு அறிவொளியின் முத்திரை தாங்கி, ஒன்றிரண்டு ஓரியர் தலைமுறைகள் ஒருவழியாகத் தோன்றின. மேலைநாட்டுக் கருத்துக்களின் சிறுகூறுகளைச் சரிவரச் செறித்துக்கொள்ளாது மேலெழுந்தவாரியாக ஆங்கிலக் கல்வி பயின்றவர்களுடன் ஒப்பிடும்பொழுது தான் முற்றிலும் அறிவொளி பெருதவன் என்று பாதிக் கிண்டலாகப் பக்கீர் மோகன் அடிக்கடி சொல்வதுண்டு. மேலிருந்து வரும் கட்டளையையும் சாதிக் கட்டுப்பாட்டையும் மீறுவது இப்பொழுது இயல்பாகி விட்டது. நிலைகுலைந்த—பெரும்பான்மையான இம்முதிராக் காளைகள் சமூகத்தில் துயரத்திற்குள்ளானது பக்கீர்மோகனுடைய கூரிய நோக்கினின்றும் தப்பவில்லை. முட்டாள்தனமான—பகுத்தறிவுக் கொவ்வாத—கொள்கைப் பிடிப்புள்ள பழந்தலைமுறையினரின் ஆசாரமும் அவ்வாறே. இவ்விருசாராரும் ஏற்றத்தாழ்வுகளைத் தக்கவாறு சமாளித்துக்கொள்ளாமல் கடுமையான பிராயச்சித்தத்துக்குள்ளாக வேண்டியிருந்தது. இதனை அப்பெயருள்ள சேனுபதியின் குறிப்பிடத்தக்க நாவலில் காண்கின்றேம்.

கட்டாக் மாவட்டத்தைச் சேர்ந்த சங்கர்ஷண் மகந்தி என்றெருவர் செல்வந்தராஞர். பெரும் பரப்புள்ள நிலத்தை வாங்கி ஒரு சின்ன ராஜாவாஞர் என்றுகூடச் சொல்லலாம். சமூகத்தின் கீழ்ப்படிக்கட்டிலிருந்து தான் வந்த ஏழ்மையையும் 'பொருளாதாரத் தளங்களில் மிகக் கண்ணியமான வழி என்று சொல்லக் கூடாத வகையில் உயர்ந்ததையும் அவர் மறக்கவில்லை. அவருடைய ஜமீனுக்கருகில் வைஷ்ணவ பட்நாயக் என்ற கலப்படமில்லா மேட்டுக்குடியினருடைய ஜமீனும் இருந்தது. புதுப் பணக்கார சங்கர்ஷண் மீது அவருக்கு ஒரே அருவருப்பு. தன் வாழ்நாளில் பட்நாயக்குக் கொப்பச் சமமான சமூக நிலையில் தான் ஏற்றுக் கொள்ளப்படும் நாளை எண்ணி ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பட்நாயக் அதை அறிந்திருந்தார். தனக்கு ஆங்கிலம்

தெரியாதெனினும் தற்கால நிலைக்கேற்ப நடந்துகொள்ளும் முயற்சியில் மகன் கோவிந்தச்சந்திராவை ஆங்கிலம் பயிலக் கட்டாக் நகருக்கு அனுப்பிவைத்தார். திறமையில்லாளுயினும் மகன் அழகனுயும் அறிவைத் திரட்டிக்கொள்வதில் ஆர்வமுள்ளவனுயு மிருந்தான். அவன் கல்லூரிக்குள் நுழைந்ததுமே பட்டப் படிப்பின் கீழ்ப்படியிலுள்ள அவனுடைய நண்பர்கள் பலரும் கவிஞனென அவனை ஏற்றுக்கொண்டார்கள். குடும்பத்தினருக்கு மட்டுமன்றி ஓரிய மக்களுக்கும் அவன் நம்பிக்கையூட்டுபவனுயிருந்தான். ஓரிசாவின் இத்தொடக்க காலப் பட்டப்படிப்பினர் சமூகச் சீர்திருத்தம் போன்ற நாட்டைப் பற்றிய சிக்கல் பற்றி எழுச்சியுடனிருந்தனர். கோவிந்தச்சந்திராவும் அக்கூட்டத்தைச் சேர்ந்தவன். அவர்கள் தங்களுக்கென ஆலோசனைச்சபையொன்றை அமைத்துக்கொண்டார்கள். அம்மன்றத்தில் இளைஞனும் அழகனும் கவிஞனும் மேட்டுக்குடி மகனுமான கோவிந்தச்சந்திரா நடுநாயகமாக ஒளிவீசி நின்றுன்.

இக்கூட்டங்களின் விளைவாய், கோவிந்தச்சந்திராவுக்கும் ராஜி பலோசனுவுக்குமிடையில் நட்பு ஏற்பட்டது. ராஜி பலோசனு சங்கர்ஷண் மகந்தியின் உடன் பிறந்தவர் மகனும் அவனையொட்டி வாழ்பவனுமாவான். மகந்திக்கு இந்துமதி என்ற பெயருள்ள அழகான திருமணப் பருவமடைந்த மகளிருந்தாள். தன்னுடைய உறவினரான சங்கர்ஷண் மகந்தியிடமிருந்து பரிசாக நிறையப் பணம் கிடைக்குமென்று எதிர்பார்த்துக் கோவிந்தச்சந்திராவின் பெற்றேருக்குத் தெரியாமலேயே இந்துமதியை அவனுக்கு மணம் புரிவிக்க ராஜி பலோசனு முயன்றுன்; அதனுல் தன்னுடைய உறவினரின் சமூக நிலையை உயர்த்தவும் முடியும். மலரும் கவிஞன் உள்ளத்தில் கற்பனை விரவிய கலையுணர்ச்சியைக் கிளற அவனுடைய ஒன்றுவிட்ட தங்கை பேரழகி மட்டுமன்றி சீரிய நோக்கம் படைத்த கவியுமாவாளென்று அவன் சொன்னுன்.

**டார்வின் உத்தி**

ஐம்பது ஆண்டுகட்கு முன்னரே மேலெழுந்தவாரியாக ஆங்கிலக் கல்வி பரவியதின் விளைபயிராய்த் தரகர்கள் சிறு சலுகை பெற்று எதையும் செய்வர் என்பதைக் கூர்த்த அறிவுப் பக்கிர் மோகன் கண்டார். கமலலோசன் இப்புது இனப்பிரிவின் பிரதிநிதி என்பதைப் பிராயச்சித்தத்தில் காணலாம். கமலலோசனுக்குச் சிறிய பரிசொன்றளித்து ராஜி பலோசனு டார்வின் கொள்கை பற்றி அரிய கட்டுரையொன்றை எழுதி வாங்கினுன். இளைஞனும் இளவரசனும் போல்வானுன கோவிந்தச்சந்திராவின் தலைமையின் கீழ் ஆலோசனைச் சபையில் அக்கட்டுரை அவனுல் படிக்கப்பட்டது. உலகை ஒரு

கலக்குக் கலக்கிய சார்லஸ் டார்வின் எழுதி அண்மையில் வெளிவந்த நூலான உயிரினங்களின் தோற்றம் என்ற விஞ்ஞான ஆராய்ச்சியின் அடிப்படையில் சாதி வேறுபாடின்றித் தங்களுடைய வாழ்க்கைத் துணைவியரைத் தேர்ந்தெடுக்கும் இளைஞர் பிறப்புரிமையை வலியுறுத்தி ஆலோசனைச்சபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இத்துடன் இந்துமதியின் உடலழகும் மற்றையக் கலைச் செறிவுகளும் பற்றி ராஜி பலோசனு ஆற்றிய எழில்மிகு வர்ணனைகள் வாலிபனை கோவிந்தச்சந்திராவின் தலையைக் கிறங்க வைத்தன. இந்தத் திருமணஉறவு அன்புமிக்க பெற்றோர்களின் நெஞ்சைப் புண்படுத்தும் என்று நன்கு அறிந்தே கோவிந்தச்சந்திரா சமூக ஏணி யின் கீழ்ப்படியிலுள்ள மகந்தி குடும்பத்தில் மணந்துகொள்ள ஒப்புக் கொண்டான். இந்த மறைமுகத் திருமணச் செய்தி பட்நாயக் இல்லத்துக்கு எட்டியதும் முதிய வைஷ்ணவ பட்நாயக்கின் மனநிறை வுள்ள மேட்டுக் குடிமையைச் சிதறடித்ததோடு அவருடைய குடும்ப வாழ்க்கையையே குலைத்தது.

அதன் பிறகு, கோவிந்தச்சந்திரா தன் பெற்றோர்களைப் பார்க்காமலிருக்கச் செய்வதில் ராஜி பலோசனு முனைந்தான். ஆனால் அவனுடைய தாயார் கட்டாக்கில் சாகுந்தறுவாயில் இருப்பதாக வும் அவள் தன்னுடைய ஒரே பிள்ளையைக் கடைசித்தடவையாகப் பார்க்க விரும்புவதாகவும் செய்தி கிடைத்தவுடன் அவன் தன் ஊருக்குப் புறப்பட்டுச் செல்ல ஆயத்தமானான். கோவிந்தச்சந்திரா வின் இவ்வேற்பாட்டைக் குலைக்க ராஜி பலோசனு தாமதமின்றிச் செயற்பட்டான். அவன் உடனேயே சங்கர்ஷண மகந்தியிடம் ஓடிக் கோவிந்தன் பெற்றோர்களைக் காண்பது இந்துமதியின் எதிர் காலத்தைக் குலைக்குமென்று சொல்லி, விரைவிலேயே தன்னிடம் வருமாறு உணர்ச்சிமிக்க கவிதையொன்றில் இந்துமதியின் கை யெழுத்தை வற்புறுத்தி வாங்கியனுப்பினான். இந்த அருமையான கவிதைச் செய்தியை எந்த வாலிபக் கணவனும் ஒதுக்கிவிட முடியாது. கோவிந்தச்சந்திரா பெற்றோர்களைக் காண்பதென்பதை ஒத்திவைத்து இந்துமதியைச் சந்திக்கப் புறப்பட்டான்.

அப்பொழுது மாரிக்காலம்; இருண்ட இரவும்கூட. கோவிந்தச் சந்திரா மாமனார் ஊர் போய்ச்சேர்ந்தான். அச்சமயம் அருகில் துணிகர வழிப்பறிக் கொள்ளைகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. இதெல்லாம் கோவிந்தனுக்குத் தெரியாது. திடீரென்றுபோய் இந்து மதியை வியப்பிலாழ்த்த அவன் விரும்பினான். வீட்டில் இந்து அமர்ந் திருந்த பகுதி ஆற்றின் வலது கரையையொட்டியிருந்தது அவனுக் குத் தெரியும். சமூகப் பழக்கங்களைத் தவிர்த்து ஆற்றின் கரை யோரம் ஒற்றையடிப் பாதை வழியாகச் சென்று நள்ளிரவில் இந்து வின் அறையிலுள்ள ஜன்னலைத் தட்டினான். அண்மையில் நடந்த

திருட்டுக்களை அறிந்திருந்த இந்துமதியின் தோழிகளிடம் குழப்ப மேற்பட அவள் கூச்சலிட்டாள். அந்தப்புரப் பெண்கள் அனை வரும் கீழே ஓடிவிடவும் வேலைக்காரிகள் திரண்டு ஓவென்றழுதனர். இருளில் காத்து நின்ற மருமகனைத் திருடனென்று அவர்கள் நினைத் தார்கள். மகந்தியின் வேலைக்காரர்கள் ஆற்றங்கரையைத் துருவி, கோவிந்தனைத் தூக்கிக்கொண்டு போய்ச் செம்மையாக உதைத்துக் கையையும் காலையும் கட்டி விடிந்த பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று ஓர் அறையில் தள்ளிவிட்டுப் போனுர்கள்.

காலை விடிந்ததும் இத்துயர நிகழ்ச்சி அம்பலமாயிற்று. கட்டாக்கிலுள்ள அரசு மருத்துவமனைக்குத் தாமதமின்றிக் கோவிந்தச் சந்திரா கொண்டுபோகப்பட்டான். அவன் குண மடைந்து வருகையில் அவனுடைய தாயார் காலமான செய்தி கிடைத்தது. தன்னருமைக் கணவனுக்கு நேர்ந்த அவமானம் தாங்காமல் வீட்டுக்குப் பின்புறமுள்ள ஆற்றில் குதித்து இந்துமதி தற்கொலை செய்துகொண்டாள் என்பதுவும் அவனுக்குத் தெரிய வந்தது. மேட்டுக்குடிமைபற்றிப் பெருமிதம் கொண்டிருந்த கோவிந்தச்சந்திராவின் முதியதந்தை, மேட்டுக்குடிநிலை பெறத் துடித்துக்கொண்டிருந்த அவனுடைய மாமனுரான மகந்தி ஆகிய இருவரும் வாழ்க்கையில் கசப்புற்று ஒருவர்க்கொருவர் தெரியாமல் வீட்டைத் துறந்து சந்நியாசிகளாகிவிட்டார்கள். அதே எண்ணத் தோடு கோவிந்தச்சந்திராவும் கட்டாக் மருத்துவமனையிலிருந்து போய்விட்டான்.

வாழ்க்கையில் தாங்களிழைத்த தவறுகளை உணர்ந்து எல் லோரும் மதுராவில் காவியுடையில் சந்தித்தனர். ஒருவர்க்கு மற்றவர் சமூக விரோதிகளென வாழ்ந்த அவர்கள் இப்பொழுது நெருங்கிய நண்பரும் தோழருமாயினர். தந்தையர் இருவரும் மதுராவில் தங்கிக்கொண்டு கோவிந்தச் சந்திராவை மக்களின் நல் வாழ்வுக்குதவ ஊரிலுள்ள நில புலங்களைப் பார்த்துக்கொள்ளு மாறு அனுப்பிவிட்டார். கோவிந்தச்சந்திராவோ தன்னுடைய இளமைப் பருவத் தவறுகளுக்குத் தொடர்ந்து பிராயச்சித்தம் செய்யும் வகையில் நலன் பயக்கும் வாழ்க்கையில் ஈடுபட்டு மீண்டும் திருமணம் செய்துகொள்ளவில்லை. இவ்வாறு பிராயச்சித்தம் என்ற கதை முடிகிறது. பக்கீர்மோகனுடைய கடைசி நாவல் அவர் இறப்பதற்கு மூன்று மாதங்களுக்குமுன் வெளிவந்தது.

பள்ளிப் படிப்பே இல்லையென்று சொல்லக்கூடிய பக்கீர் மோகன் தான் வாழ்ந்த காலத்து முன்னேற்றத்தையொட்டி விஞ்ஞானக் கொள்கைகளையும் அரசியல் செயல்முறைகளையும் தம் படைப்பிலக்கியப் பணிக்குதவுமாறு செயலாற்றியது திகைப்பை யுளிக்கிறது. இந்திய சமூகத்தின் சீர்திருத்தத்தைக் குறிக்

கோளாகக்கொண்டு நாவலின் முக்கிய பாத்திரமான இளைஞனைத் தன்னுடைய சமூகப் படிக்குக் குறைந்த படியிலேயே திருமணம் செய்துகொள்ளச் செய்ததுவே பிராயச்சித்தத்தை உரிய முடிவில் கொண்டுசேர்த்தது. பல்கலைக்கழகப் பயிற்சி பெற்றோரைச் செயலில் ஈடுபடச் செய்த முயற்சியாகும். கதையின் முடிவு சிறப் பாக அமைவதற்கும் அது வழிகோலியது. ஆசிரியரின் அரிய இன உணர்ச்சி இலக்கியம் படைக்கத் தான் தேடிய அறிவைப் பயன் படுத்தியது. இதை நிரூபிக்கும் வகையில் பிராயச்சித்தத்தில் கையாளப்பட்ட பாத்திரங்கள் செவ்வனே அமைந்துள்ளன.

**கரடுமுரடும் கைவண்ணமும்**

இதில் மட்டுமின்றி மற்றைய நாவல்களிலும் பெரும்பாலான கதைகளிலும் அவருடைய படைப்புக்கள் ஓங்கியும் உயர்ந்தும் வாசகர்கள் மனத்தைக் கரடுமுரடான பாதையிலிருந்து கலை வண்ணம் நிரம்பிய வழியில் அவர் அழைத்துச் செல்கிறார். அவ ருடைய கால்கள் என்னவோ பொதுமக்கள் உறையும் மண்ணில் உறுதியாகப் பதிந்துள்ளன. எடுத்துக்காட்டாகப் பிராயசித்தத் தின் முடிவில், கட்டாக் மருத்துவ மனையில் கோவிந்தச்சந்திரா குணமடைந்து ஓய்வுபெற்றுக் கொண்டிருக்கையில், பக்கத்து 'வார் டில்' ஒரு நோயாளி இறந்துபோனார். தன்னை வந்து பார்த்து உதவும் மருத்துவரிடம் சாவு, ஆன்மா என்பவை போன்ற வாழ்க் கையில் கவலையளிக்கும் சிக்கல்கள் பற்றிக் கோவிந்தச்சந்திரா உரையாடுவதைக் காண்கின்றோம். மாமு என்ற நெடுங்கதையின் திறமைமிக்க ஆசிரியர் சாவுக்குப் பதினொன்றாம் நாளான புனித நீராட்டு நாளன்று ஒரிசா மேட்டுக்குடி மக்களிடம் நிலவும் பழக்கங் களைப் பற்றிக்கொண்டு பக்கீர்மோகன் பண்டிதர்களிடை உரை யாடலைப் புகுத்துகிறார். முக்கிய பாத்திரமான இளைஞனுடைய துயரம் தரும் சாவுக்குப் பிறகு நிகழும் உயரிய உரையாடல் சோர் வுணர்ச்சியை அகற்றுகிறது. பொன்னணியில் பதித்த மணி யொன்று மற்றொன்றின் தாக்கத்தை உயர்த்திக் காட்டுவது போலிருக்கிறது. எளிய ஆண்களும் பெண்களும் குழுமியுள்ள அரங்கில் அவர்களுடைய ஆசைகளும் நம்பிக்கைகளும் தம்முள் மோதிக்கொள்ளவும் தலைசிறந்த அறிஞர்களின் கடவுள் ஆன்மா என்பவை பற்றிய உரையாடல் மெச்சத்தகுந்த ஆய்வுரையாகும். இவ்வான்மீகச் சொற்பொழிவுகளுக்கிடையிலும் அவருக்கே உரித் தான கூர்மதியால் பக்கீர்மோகன் நகைச்சுவையைக் கையாள் கிறார். வடமொழி நாலடிப் பாடலொன்றில் தெலுங்குப் பண்டிதர் ரங்க பட்ட வெங்கடபந்துலு பின்வருமாறு சொல்கிறார்: ''பிறவிதோறும், வேதங்களோடும் தரிசனங்களோடும் மிளகாய்,

புளி, மோர் ஆகிய மூன்றின் வரப்பிரசாதங்களும் உடன் சேர்த்து நான் வாழ்த்தப்படுவேனுகவும் என்று நான் வழிபடுகிறேன்.''

சேனுபதியின் படைப்பிலக்கியக் கட்டுக் கதைகளில் மற்று மொரு மேன்மை நோக்கும் உளது. அவருடைய எல்லா எழுத்துக் களிலும் நல்லவரும் அல்லவரும் இன்னலுக்குள்ளாகின்றனர். நடைமுறையில் இன்னலும் வாழ்க்கையும் பிரிக்கமுடியாதவை என அவர் கருதுகிருர். எனினும் அவருடைய கதைகளில் நல்லவை துன்பத்தால் மேன்மையடைகின்றன; தீயவை தூய்மைப்படுத்தப்படுகின்றன. காலத்துக்கொவ்வாதது, தீய பயப்பது, பகுத்தறிவு ஒப்புக்கொள்ளாதது ஆகியவை சீர்திருத்தம் பெறவேண்டும் என்று முற்றும் முனைந்தவரெனினும், எந்த முறையிலும் சீரிய வழியினின்றும் பிறழ்ந்துசெல்வது அவருக்குடன்பாடன்று. அவர் கருத்துப்படி பாவமென்பது உலகத்தோடு ஒட்ட ஒழுகக் கல்லாமை. அவருடைய பாத்திரங்களில் பாவிகள் என்று சொல்லப்படுபவர்கள் தவறுகளை உணர்ந்து, தெய்விக அருள்நெறியைச் சார்ந்து மெய்யான மீட்சியொளி நோக்குடன் தங்கள் வாழ்க்கைப் பயணத்தை முடித்துக்கொள்கிருர்கள்.

இவ்வாருகப் பக்கீர்மோகனுடைய படைப்பிலக்கிய நூல்கள் அனைத்தும் முரண்பாடின்றிச் சுவையுடனும் தூய்மைப் பெருக்குடனும் ஆன்மீக எழுச்சி தருவதாயுள்ளன. அதே சமயம் ஒரிசா மாநிலத்தின் வாழ்வையும் சமூகத்தையும் எதிரொளி வீசும் கண்ணுடிகளாயும் இருக்கின்றன. இம்மனிதர் நாவலாசிரியராய் மலரும் திட்டமேதுமில்லாது நேரம் கிடைத்தபோது எழுதியவராயினும் அவரை அறிஞர் எனப் போற்றி நம் வணக்கத்திற்குரியவர் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டியவராகின்றேம். சமாண ஆட்டகுண்டா, மாமு, பிராயச்சித்தம் ஆகியவை அவருடைய சமூகச் சித்திரங்களாயினும் லச்சமா அவருடைய ஒரே வரலாற்று நூலாகும். அந்நூல் விருப்பு வெறுப்பில்லாத தலைசிறந்த படைப்பாளரின் உள்ளார்ந்த உணர்ச்சிக்கு ஒளியூட்டும் எடுத்துக்காட்டாகும்.

# 13. இந்தியத் தூமலர் ஒன்று

உத்கல சாகித்திய இதழில் சமாண ஆட்ட குண்டாவைப்போல லச்சமா தொடராக வெளியிடப்பட்டது. ஒரிசாவில் பிரிட்டிஷார் காலடிவைத்த நூறு ஆண்டுகளுக்குப் பிறகு 1903-ஆம் ஆண்டில் எல்லாப் பகுதிகளிலும் வாழும் ஒரிய மொழி பேசும் மக்கள் ஒரே நிர்வாகத்தின் கீழ்த் தாங்கள் இணைக்கப்படவேண்டும் என்ற

கோரிக்கையை வற்புறுத்தக் கட்டாக்கில் கூடினர். வரலாற்றுச் சிறப்பு வாய்ந்து நாட்டுப்பற்று உணர்ச்சி பொங்கி வழிந்த காலத்தில் எழுதப்பட்டிருந்தாலும், பக்கீர்மோகனுடைய லச்சமா உரத்த —ஆபாசமான குறுகிய மனப்பான்மையின் எந்த வகையிலும் ஒட்டாது தெள்ளிய நடைபோட்டது.

ஹிந்து ஒருவரால் எழுதப்பட்டாலும் துன்புறுத்தும் ஹிந்துப் பர்க்கீகளை முஸ்லிம் நவாப் அலிவெர்தி கான் தோற்கடித்துப் பெற்ற இறுதி வெற்றியுடன் லச்சமா முடிவுறுகிறது. அதில் பக்கீர் மோகனுடைய படைப்புத் திறனின் சார்பற்ற நடுநிலைமை சிறந்த முறையில் தோற்றமளிக்கிறது; ஏனெனில் ஹிந்துக்களும் முஸ்லிம் களும் வெறும் கதைப்பாத்திரங்களாக உலவியும் அவ்வாறே தங்களுக்குள் நடந்து கொண்டும் தோன்றி மறைகிறார்கள். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவர்க்கொருவர் மாறுபட்ட சமயத்தினராயும் நடத்தையினராயும் அங்கு காட்டப்படவேயில்லை. ஹிந்து சமய ஆசிரியர் துன்பத்திலுழலும் முஸ்லிம்களை ஆழ்ந்த பரிவுடன் படம்பிடித்துக் காட்டியிருப்பது உண்மையில் குறிப்பிடத்தக்கதாகும். என்றாலும் அடுத்தபடியாகத் தேவைப்பட்டபோதெல்லாம் இந்தியாவின் முழு நலனைக் கருத்தில் கொண்டு ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் அவரவர் தீச்செயல்களுக்காகக் கடிந்துள்ளார்.

இவற்றை நாம் நெஞ்சில் நிறுத்துவோமாயின், இந்நூலாசிரியர் கருத்துப்படி தற்கால இந்திய இலக்கியத்தின் மெய்யாகவே சிறந்த சில நூல்களுள் லச்சமா காலத்தால் மிகவும் முற்பட்டது எனக்கொள்ளலாம். இந்திய அறிஞர் பகுத்துப் பார்த்துக் காய்தல் உவத்தல் இன்றித் தங்களுடைய நூல்களை உற்று நோக்கின் இந்தியாவில் எழுதப்படும் நூல்கள் உண்மையிலேயே இந்திய மணம் பரப்புவதில்லை என்பதை உணர்வது கடினமன்று. காளிதாசனையும் வால்மீகியையும் எண்ணிப்பார்த்தால் சில எழுத்தாளர்களின் நூல்களில் இந்திய மணம் இல்லை. நாமெல்லாம் சிறந்த வங்காளிகளாகவோ தெலுங்கர்களாகவோ மகாராஷ்டிரர்களாகவோ இருக்கலாம். எனினும் நம்மில் சிலரே இந்தியராய் ஒளிபரப்பத் தேவையான நோக்கும் திறமையும் ஆவலும் பெற்றுள்ளோம். இரவீந்திரநாதர்—ஏன் பங்கிம் சந்திரர் கூடத்தான்—இவர்களின் கணிசமான எழுத்துரைகள் கூட வங்காளம் அல்லது ஹிந்து என்பதற்கு அப்பாற்பட்டவையல்ல. இத்தகைய கண்ணோக்கில் எழுபது ஆண்டுகட்கு முன்னர் எழுதப்பட்ட லச்சமா தற்கால இந்திய இலக்கியப் படைப்புக்களில் ஒரு குறிப்பிடத்தக்க நூல் என்று முடிவாகக் கூறலாம்.

மேலெழுந்தவாரியாகக் கதை பின்வருமாறு: பதினெட்டாவது கடைசிக் கால் நூற்றாண்டின் காலத்தில் வடபகுதி ஆண்களும்

பெண்களும் அடங்கிய குழுவொன்று ஜகன்னதத்திருத்தலப் பயணத்தின் இறுதிக் கட்டத்தில் வங்காள—ஒரிசா எல்லேயின் வழி யாகச் சென்று கொண்டிருந்தது. அக்குழுவினர் குதிரைகளின் மீதமர்ந்து வழிமறிக் கொள்ளேக்காரரைச் சமாளிப்பதற்குப் போதுமான ஆயுதந்தாங்கிச் சென்றனர். குழப்பம் நிறைந்த அக் காலத்தில் நம் நாட்டில் வழிமறிக் கொள்ளேகள் சாதாரணம்.

கெட்ட காலமோ என்னவோ, வங்காள—ஒரிசா எல்லேயைக் கடந்ததுமே திடீரென்று அக்குழுவைக் காத்துக்கொண்டிருந்த மராட்டியக் குதிரை வீரர் தாக்கினர். நிகழ்ந்த கைகலப்பில், பயணிகள் முற்றிலும் சீர்குலேக்கப்பட்டு அவர்களுடைய பணமும் உடைமைகளும் கொள்ளேபோயின. அந்திமயங்கி இருள்கௌவிய இரவில் திருத்தலப்பயணி ஒருவர்க்காவது மற்றவர் எங்கிருந்தனர் என்றே அவர்க்கு என்னவாயிற்றென்றே அறியமுடியவில்லே.

கொள்ளே நிகழ்ந்த இடத்திற்கருகில் பாலேசுவர் ஜில்லாவி லுள்ள தற்போதைய ஜலேசுவர் நகருக்கு இரண்டு கல் தொலேவில் இன்றும் புதர்களுக்கிடையில் இடிந்து கிடக்கும் ராய்பனியாக் கோட்டை இருந்தது. அப்பொழுது வலிமை வாய்ந்த கண்டா யத்துத் தலேவரான ரத்சிங் பைரிகஞ்சன மாந்தாதாவினிடம் அக் கோட்டை இருந்தது. அவருடைய உறவை முஸ்லிம்களும் மராட்டியர்களும் பெரிதும் விரும்பினர். ராஜா—ராணி இரு வருமே குடிமக்களின் அன்புக்குப் பாத்திரமானவர். வன்முறையும் கொள்ளேயும் சூழ்ந்த உலகில் அவர்களுடைய இரக்க உள்ளமும் பண்பாடும் புகழை ஈட்டின. ராய்பனியாவின் துணிவான பைக்கு களிடமிருந்து (Paiks) பெற்ற ஆதரவைத் துணேயாகக்கொண்டு சுவர்ணரேகாவின் கரையையொட்டி அலிவெர்தி வசைக்காளான பாஸ்கர பண்டித் தலேமையில் இயங்கிய பர்க்கி மராட்டியர்களேச் சிதறடித்தான்.

ஒருநாட்காலே காட்டில் எங்கிருந்தோ கிடைத்த அழகான மங்கைப் பருவப் பெண்ணெருத்தியை ராகவ ரத்சிங்கின் ஆள்கள் ராய்பனியாவிலுள்ள அவருடைய திருவோலக்க மண்டபத்துக்குக் கொண்டுவந்தபொழுது அங்குள்ளவர் அதிர்ச்சியுற்றனர். வாயடைத்துப் போய் அப்பெண் அவருடைய கேள்விகளுக்கு விடை கூறமுடியவில்லே. எனவே அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டு அவள் ராணியின் அரவணேப்பிலிருந்தாள். இள வயது மங்கை லச்சமா மராட்டிய பர்க்கியக் கூட்டத்தினரால் வழி மறிக்கப்பட்டு அவதிக்குள்ளானவர்களில் பிழைத்த துரதிர்ஷ்ட சாலிகளில் ஒருத்தி என்று போகப் போகத் தெரிந்தது. அழகு அறம் என்பவைகளின் அடிச்சுவடுகளேப் பின்பற்றி எப்பொழுதும் தொடர்வது துயரம். ராய்பனியாக் கோட்டையில் பெற்றோர்

அளிக்கக்கூடிய பாதுகாப்பும் வசதியும் கிட்டிய சிறிதுகாலத்திற்குள் அலிவெர்திக் கெதிராக நாகப்பூர் போன்ஸ்லாவுடன் கூட்டுச் சேர்க்கும் நோக்குடன் பண்டிதந் சிவசங்கர் மல்லவீர் என்ற மராட்டியத் தூதர் கண்டாயத்துத் தலைவரை வந்து கண்டார். மராட்டியத் தூதருக்கும் ராய்பனியா சமஸ்தானத்தின் பிரதிநிதியான பிராமண அறிஞரும் பேச்சாளருமான வனமாலிவாசஸ்பதிக்கும் இடையே நிகழ்ந்த சுவைமிக்க பேச்சுவார்த்தை நெடுங்கதையில் ஓர் அதிகாரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. முன்னவர் சிவாஜியின் பிராமண அறிஞரும் தூதுவருமான ஹனுமந்தேயை வாசகர்க்கு நினைவூட்டுகிறார். உதவி பெறமுடியாத ஜகன்னாதம் சென்றுகொண்டிருந்த திருத்தலப் பயணிகளை மிருகத்தனமாகத் தாக்கிய பரிதாபமும் ஹிந்துக்களைக் கொள்ளையடித்ததில் தப்பிய ஒரே பெண்ணான துயரிலுழலும் லச்சமாவின் நிலைமையும் தம் நினைவில் பசுமையாயிருக்க, வாசஸ்பதி, சிவசங்கரின் இஸ்லாமிய எதிர்ப்பு வாதங்களை முறியடித்தார். நாட்டின் பொதுமக்களான ஆணுக்கும் பெண்ணுக்கும் வேண்டியது நல்ல நிர்வாகமே. அவ்வாறிருக்கச் சமயத்தைத் துணையாகக் கொண்டு வாதம்புரிவது வீணென்று அவர் நிலை நாட்டினார். பாதுகாப்பில்லா ஒரிசாவின் பரந்த கிராமப் பகுதிகளை மராட்டியக் கொள்ளைக்காரர் எவ்வாறு பாழ்படுத்தினர் என்பதையும் அவர் சுட்டிக்காட்டினார். தம்முடைய சமயத்தினர் இழைக்கின்றனர் என்பதனால் கொடுமைகள் மன்னிக்கப்படவேண்டுமா? கடைசித் தடவை அவர் நவத்துவீபத்துக்குச் சென்றிருந்தபோது கல்கத்தாவிலிருக்கும் ஒரு வெள்ளைக்காரக் கிறிஸ்தவப் பாதிரியுடன் உரையாடியதையும் இரக்கம் சுரக்கும் அவர் நெஞ்சும் இறையன்பும் தம்மை ஆழ்ந்து கவன்றதையும் பற்றி அவர் எடுத்துரைத்தார். ஒருவர் மற்றவர்பால் இழைக்கும் இன்னல்களால் அமிழ்ந்துகொண்டிருக்கும்போது எழுகடலுக்கப்பாலிருந்து வந்துள்ள இந்தப் புதிய இனத்தவர் ஹிந்துக்கள் முஸ்லிம்கள் என்ற இருசாராரையும் தங்களின் ஆன்மீக உயர்வாலேயே அவர்களின் கீழ்க்கொண்டு வரமுடியும்.

மராட்டியத் தூதுவர் ராய்பனியா சமஸ்தானத்தை விட்டகன்றார். ஆனால் பழிவாங்கும் உறுதியுடன் சென்றார். அதில் தாமதம் ஏதுமில்லை. வலிமை மிக்க போன்ஸ்லாவின் நட்புக்கையை ஏற்க மறுத்த குறுகிய எண்ணத்துக்காகப் பிடிவாதம் கொண்ட கண்டாயத்துத் தலைவனுக்குப் பாடம் கற்பிக்கவேண்டி மிதமிஞ்சிய ராணுவப் படையொன்று நாகப்பூரை விட்டுப் புறப்பட்டது. ராய்பனியாவின் வீரர்கள் வங்காளத்தில் நெடுந்தொலைவிலுள்ள போர்க்களத்துக்கு அலிவெர்திக்கு உதவ அனுப்பப்பட்டு அதன் பாதுகாப்பு சீர்குலைந்த அதே சமயம் மராட்டியப் படைகள் எதிர்பாராத விதமாக ராய்பனியாவில் புகுந்தன.

அதன் விளைவாக, வரலாற்றுப் புகழ்மிக்க கோட்டை வீழ்ந்தது. வனமாலி வாசஸ்பதியுடன் அக்கோட்டைத் தலைவனும் மராட்டியர்களின் கைதியாகி நெஞ்சுரத்தோடு போராடி உயிர் துறந்தான். ராணி தண்ணீரில் மூழ்கி இறந்தாள். மராட்டியர் கொடுமைக்காளாகாது அவர்கள் பிடியினின்றும் தப்புமாறு தங்க நாணயங்களை அவளுடைய உடையில் முடிந்து லச்சமாவை அனுப்பிய பிறகே ராணி தன்னை மாய்த்துக்கொண்டாள். பிராமணன் என்ற ஒரே காரணத்தினால் வனமாலி வாசஸ்பதியின் தலை தப்பிற்று.

போரின் போக்கு மராட்டியர்களுக்கு ஆதரவாய் மாறியது. அலிவெர்தியின் படைகள் படிப்படியாக வங்காளத்தின் மையப் பகுதியிலுள்ள கட்வர் வரை துரத்தப்பட்டன. ஆனால் அதற்குள்ளாக மூன்றாண்டுக் காலம் தொடர்ந்து நடந்த போரின் காரணமாக இருதரப்பினரும் களைத்துப் போயினர். இருதரப்புத் தூதுவர்களும் சந்திப்பதென்பது சமயச்சடங்கு என்ற நிலைக்கு வந்துவிட்டது. பர்கியத் தலைவன் பாஸ்கர் பண்டித்தும் நவாப் அலிவெர்தியும் இருதரப்புப் போர்க்களங்களுக்கு நடுவில் பட்டுப் பந்தலின் கீழ்ச் சந்திக்க ஒப்புக்கொண்டனர்.

இதற்கிடையில் அழகான இளவயது வெற்றிலை விற்பவனொருவன் போர்க்களங்கள் தோறும் மராட்டியப் படையின்பின் சென்று அங்குள்ள ஒவ்வொருவருடைய அன்புக்குப் பாத்திரமானான். அலிவெர்தியின் தரப்பிலோ பாதல்சிங் என்ற புதிய படைவீரனையும் அங்குள்ளவர் விரும்பினர். நெருக்கடியான வேளையில் அவனுடைய துணிவும் தியாக உணர்ச்சியும் அலிவெர்தியின் தலையைக் காப்பாற்றியது, எல்லா முஸ்லிம் அதிகாரிகளின் முணுமுணுப்புகளுக்கிடையில் நவாப்பினுடைய மெய்க்காப்பாளர் படையில் பொறுப்பான பதவிக்கு அவன் உயர அந்நிகழ்ச்சி உதவியது.

குறிப்பிட்ட நாளன்று உரியவேளையில் பாஸ்கர் பண்டித் பட்டுப் பந்தலுக்குள் நுழைந்தான். நவாப் அலிவெர்தி நேரில் சென்று வரவேற்றுத் தன்னுடைய நல்லுணர்ச்சியைத் தெரிவிக்கும் வகையில் அவனைத் தழுவிக்கொண்டான். ஆனால் அவ்விரு பெரிய மனிதர்களும் அன்புத் தழுவலிலிருந்து தங்களை விடுவித்துக்கொண்டிருக்கும்போது இருவர் கூட்டாக மின்னல் வேகத்தில் பாஸ்கர் பண்டித்மீது பாய்ந்து தாக்கி உடனடியாக அவனைக் கொன்றார்கள். அவ்விருவர் வேறு யாருமில்லை—அழகு சொட்டும் இளவயது வெற்றிலை விற்பவனும் அலிவெர்தியின் மெய்காப்பாளனுமான இளைஞன் ஹவில்தார் பாதல்சிங்கும் ஆவர். பாதல் காட்டிய குறிப்பையறிந்து நவாப்பினுடைய குதிரை வீரர் ஆயுதமின்றி நின்ற மராட்டியரைச் சாடி நொறுக்கிவிட்டனர்.

இவ்வரசியல் கொலையைக் கண்டு துணுக்குற்ற நல்லவராகிய நவாப் உள்ளூர மகிழ்ந்தாரெனினும் பாதல் சிங்கை வனவிஷ்ணுப்பூர் பர்கணுவின் புதிய ராஜாவாக அறிவித்தார். வெற்றிலை விற்ற வாலிபனுக்கும் வெகுமதியளிக்க விரும்பினுர். ஆனுல் அங்கு குழுமியிருந்த மேலோர் வியப்படையும் வண்ணம் அவர் தனக்கு உடனுதவிய தோழர் தன்னுடன் பிறந்தாளை மணந்தால் அதுவே தனக்கு வெகுமதி என்றுரைத்தான்.

மேலும் வியப்பூட்டும் வகையில் பாதல்சிங் உணர்ச்சிமிக்க இவ்வேண்டுகோளை ஏற்க மறுத்தான். அழகான கற்பு மங்கை யொருத்தியைத்தான் மணந்ததாயும் இளம்மனைவி இறந்து விட்டாலுங்கூட தன் வாழ்நாள் முழுவதும் கண்டிப்பாக ஒருத்தியையே தன் இல்வாழ்க்கைத் துணைவியாயிருக்க அளித்த உறுதிமொழியை அவன் எடுத்துரைத்தான்.

நவாப்பும் அங்குள்ள ஒவ்வொருவரும் வியப்புற இரவோடு இரவாக வெற்றிலை விற்பவனும் பாதல் சிங்கும் மூர்ஷிதாபாத்திலிருந்து மறைந்துவிட்டனர். சில நாள்களுக்குப் பிறகு கயையில் தூய பால்கு ஆற்றங்கரையில் ''டேங்காஞல் சிங் வர்மாவின் மகளாகிய லச்சமாதேவி என்ற நான்'' என்ற சொற்கள் புரோகிதன் சொல்வதைத் தொடர்ந்து சொல்லக்கேட்ட இரண்டு மூதாட்டிகள் வியப்புற்றனர்.

அதே சமயம் மற்ருெரு புறத்திலிருந்தும் அவர்கள் செவியுற்றதாவது: ''ஹரிபஜன் சிங் வர்மாவின் மகனுகிய பாதல் சிங் என்ற நான் . . .''

அவ்விரு மூதாட்டிகளும் வாலிபனையும் இளநங்கையையும் நோக்கி அவர்களின் ஒட்டிப்போன கன்னங்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் சோர, ''ஆகா! என்ன அதிசயம்! என் கண்மணி லச்சமா!'' என்றும் ''மெய்யாகவே என்னருமைப் பாதலா? என் ஆருயிரே'' என்றும் குழறிக் குழறிக் கூவிக்கொண்டே தம் மக்களைச் சென்றடைந்தனர்.

டேங்காஞல் சிங்கும் ஹரிபஜன் சிங்கும் தங்களுடைய இளம் பிராயத்தில் முஸ்லிம் கொள்ளைக்காரர்களுடன் கூட்டாளிகளாய்ச் சேர்ந்தவர்கள். உத்தரப்பிரதேசத்திலுள்ள ரோகில் கண்ட் பகுதியைச் சேர்ந்த அவ்விருவரும் இராஜபுத்திர வகுப்பைச் சேர்ந்தவர் என்ருலும் அவர்களுடைய மனைவியர் இறையன்புள்ள ஹிந்துப் பெண்மணிகளாவர். கணவர்களின் செய்கைகள் அவர்களுக்கு உடன்பாடன்று. மகனும் மகளும் திருமணம் செய்து கொண்ட பிறகு அவ்விரு மூதாட்டிகளிடம் நெருங்கிய நட்பு நிலவத் தொடங்கியது. பழியும் பாவமும் நிலவிய பாதையினின்றும் விலகிக் காலப்போக்கில் பிழையில் ஊறிய கணவர்களைத் தங்கள் இன்மொழியால் அவர்கள்

திருத்தினர்கள். பாவமன்னிப்புக் கோரி இந்தியா முழுவதிலும் திருத்தலப்பயணம் மேற்கொள்ள ஒப்புக்கொள்ளவும் செய்தனர். முன்னர் குறிப்பிட்டபடி, வங்காள—ஒரிசா எல்லையில் கோடிக்கல் என்ற இடத்தில் ஹிந்து பக்கீர்களுடன் ஏற்பட்ட பூசலிலும் மோதலிலும் அவ்விருவரும் உயிரிழந்தனர். ரோகில் கண்டில் கிராமங்களில் அவர்கள் ஊரிலில்லாததால் அவர்களுடைய முஸ்லிம் கூட்டாளிகள் அவர்களின் உடைமைகளைச் சூறையாடினர். மோதலில் உயிர் தப்பிய லச்சமாவும் பாதலும் தங்களுக்கிழைக்கப்பட்ட கொடுமைக்குப் பழிவாங்கத் தனித்தனியாக உறுதி கொண்டனர். ராய்பனியாக் கோட்டையின் வீழ்ச்சிக்குப் பிறகு ராய்பனியா ராணி புடவைத் தலைப்பில் முடிச்சுப் போட்டிருந்த தங்க நாணயங்களைக் கொண்டு வாணிபத்தில் ஈடுபட்டு ஆண் வேடத்தில் வெற்றிலை விற்பவனாக லச்சமா மாறுவேடம் பூண்டாள். உடம்பில் புண்கள் ஆறிய பிறகு பாதல் அலிவெர்தியின் முஸ்லிம் படையில் சேர்ந்தான். லச்சமாவும் பாதலும் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு தங்களுடைய கிராமத்திலிருந்து பயணமான குழுவில் தான் மட்டும் மிஞ்சிய துர்ப்பாக்கியசாலி என்று நினைத்துக்கொண்டிருந்தனர். இந்த நெடுங்கதையில் லச்சமாவையும் அவளுடைய தாயார் மாமியார் ஆகியவர்களையும் அதே சிற்றூரில் ஓரிரவு இருக்கச்செய்து அவர்கள் நேருக்கு நேர் சந்திக்காதபடி கையாண்ட ஆசைகாட்டி ஏமாற்றும் நாடக உத்தியைப் பக்கீர்மோகன் கையாண்டுள்ளார்.

நூலின் இறுதியில் ஆண்மை மிக்க—வீரம் செறிந்த லச்சமா, பாதல் என்ற இருவரையும் எஞ்சிய வாழ்நாளின் கடைசிப்பகுதியை வனவிஷ்ணுப்புர் ராஜாவாகவும் ராணியாகவும் கழிப்பதாகப் பக்கீர்மோகன் எழுதியுள்ளார். புது ராஜாவும் ராணியும் அவர்களுடைய மனிதாபிமான குணங்கள், நல்ல நிர்வாகம், அறப்பணிகள் ஆகியவற்றால் மரபுத் தலைவராகிவிட்டனர். ராணி லச்சமாவும் ராஜா பாதல் சிங்கும் காலமான பிறகு வனவிஷ்ணுப்பூரின் செல்வச் செழிப்பும் புகழும் மங்கிப்போயின. எனவே, இப்பேராசிரியர் தம்முடைய நெடுங்கதையைப் பலருக்கும் தெரிந்த சமஸ்கிருதப் பாடலைச் சொல்லி மனநிறைவுக் குறிப்புடன் முடிக்கின்றார்.

நித்த நித்தம் இற்றை நாள் யாதவர்கோன்
 மதுரை நிலை குலைந்ததிலையோ
உத்தர கோசலத்தின் வளம் இரகுநாதன்
 மறைந்தபின் எங்கு சென்றதுவோ.
சித்தம் அமைதி பெறச் சீருடன்
 சிக்கெனப் பற்றி நிற்பாய்
இத்தரையில் ஏதுமே என்றுமே நிலையில்லை
 என்ற கருத்தினையே.

# 14. மாரிக்காலக் கதிரவன் மறைவு

பக்கீர்மோகனுடைய சிறப்புமிக்க சுயசரிதத்தின் இறுதிப் பகுதி பின்வருமாறு: ''என் இனத்துக்கு நான் ஆற்றிய தொண்டுகளுக்காகவும் என்னுடைய மொழியை நான் எழுதிய நூல்கள் வளப்படுத்தியதாகக் கருதப்படுவதற்காகவும் என்னுடைய வாழ்நாளின் இறுதிக்காலத்தில் என்னுடைய நாட்டினர் வேணளவு கைம்மாறு செய்தனர். 1916-ஆம் ஆண்டில் அறிவுப்பாதையில் முன்னேறிய பாம்ரா ராஜ்யம் 'சரஸ்வதி' என்ற விருதை எனக்கு நல்கியது. 1917-ஆம் ஆண்டு கட்டாக்கில் குழுமிய ஒரிய மொழி பேசும் மக்கள் மாநாட்டுக்குத் தலைமை தாங்குமாறு நான் அழைக்கப்பட்டேன்; என்னுடைய நாட்டினரிடமிருந்து நான் எதிர்பார்க்காத கௌரவத்தின் அறிகுறியாகும் அவ்வழைப்பு. அரங்கத்தை விட்டு அகலுமுன் என்னுடைய வாசகர்கள் இருபாலாரையும் நான் தலைதாழ்த்தி வணங்குகின்றேன்.''

தாழ்ந்து வணங்கிய முதிய மேதை 1918-ஆம் ஆண்டு ஜூன் 14-ஆம் நாள் பாலேசுவரிலுள்ள தம்முடைய தனிமையான பூங்கா விடுதியில் களத்தை விட்டகன்றார். உரிய மதிப்பையும் புகழையும் அவர் பெற்றாரெனினும் முதுமையில் அவருடைய உடலும் உள்ளமும் தொடர்ந்து வேதனைக்குள்ளான கொடுமை துரதிர்ஷ்டமாகும்.

வயது முதிர்ந்த நாயகர்க்குண்டான இன்னல்கள்பற்றி அவருடைய சுயசரிதத்தின் இறுதியுரைக்கு முந்தின தெள்ளத் தெளிந்த பகுதியொன்றுளது: ''1915-ஆம் ஆண்டுக் கடைசியில் ஒரிசாவின் தன்னலமற்ற தொண்டரும் பீகார்—ஒரிசா கவர்னரின் கவுன்சிலில் உறுப்பினருமான கோபபந்துதாஸ் பாட்னாவிலிருந்து திரும்பும் வழியில் பயணத்தின்போது பாலேசுவரில் இறங்கி என்னுடன் இரண்டு நாள்கள் தங்கினார். புறப்பட்டுச் செல்லும் நாளன்று காலையில் நோய்வாய்ப்பட்டிருந்த என் படுக்கைமுன் அவர் அசைவற நின்று கன்னங்களில் கண்ணீர்வழிய என்னையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தார். உணர்ச்சி கட்டுக்கடங்கிய பின் மெதுவாக அவர் பேசியதாவது: ''இரண்டு நாள்கள் இங்கே தங்கியபோது உங்களுடைய நிலைமையை நான் நன்கு அறிந்து கொண்டேன். உரம் குறைந்து உதவியின்றித் தனியாயிருக்கிறீர்கள். தாங்கள் செவ்வனே பராமரிக்கப்படவேண்டுமென்றால் நெருங்கியவர் அருகிலிருப்பது மிகமிகத் தேவை.''

பக்கீர்மோகனுடைய இறுதியாண்டுகள் உடல் நலக்குறைவால் பீடிக்கப்பட்டவையாகும். Varicose இரத்தக் குழாய்களினுல் தாங்கொணு வலியுடன் படுத்த படுக்கையில் உழன்ருர். கலப்படமில்லாத கந்தக அமிலத்தைத் தவறுதலாக உட்கொண்டு ஒரு தடவை கிட்டத்தட்டச் செத்தே போய்விட்டார். பொறுக்க முடியாத வலியால் பல வாரங்கள் உழன்று குணமடைந்ததுமே தனக்கே உரித்தான கொடுமையுடனும் இருப்புக்கொள்ள முடியாத நிலையைத் தோற்றுவித்துப் பழிவாங்கும் ராஜ பிளவை யொன்று உடம்பில் புறப்பட்டது.

**வாழத் துடிப்பு**

எனினும் நோய்த் துன்பத்துக்கும் மனத்துயருக்கும் உள்ளான முதியவர் அவ்வப்போது வியக்கத்தக்க வலிமையுடன் இயங்கினர். ஒரு குழந்தையைப் போன்று வாழும் துடிதுடிப்பு அவரிடம் நிலவியது. நம்பிக்கையூட்டும் ஒவ்வொரு புதுமையுடனும் தம்முடைய நாட்டின் முன்னேற்றம், அல்லது மக்கள் துயரைத்துடைக்கும் பேச்சு ஆகியவற்றுடனும் அவர் தம்மை முழுமூச்சுடன் பிணைத்துக்கொண்டார்.

இந்த நூற்ருண்டின் முதற் பத்தாண்டுக் காலக்கட்டத்தில், ஊக்கமூட்டும் பண்டித கோபபந்துதாஸ் தலைமையில் பல்கலைக் கழகப் பயிற்சி பெற்ற ஓரியப் படிப்பாளிகள் சாகிகோபால் என்ற சிற்றூரில் சோலைமரச் சூழலில் ஒரு கழகத்தைத் தொடங்கினர்கள். அவ்வூர் புனித நகரமான பூரியிலிருந்து 11 மைல் தொலைவிலுள்ளது. தங்களுடைய நாட்டை உயிர்த்தெழச் செய்யும் பணியில் ஆட்படுத்திக் கொண்டவர்களாதலால், உயர் கல்வி பெற்ற ஆசிரியர்கள் சம்பளம் என்ற பெயரில் தரப்படும் சிறிய தொகையைப் பெற்று மனநிறைவடைந்தார்கள். அப்பள்ளி ஓரிய மொழி பேசும் நாடெங்கும் நம்பிக்கையான எதிர்காலத்தைத் தோற்றுவித்து ஓரிசாவின் உயிர் நாடியாக விளங்கியது.

இறப்பதற்கு ஓராண்டுக்கு முன் சத்தியவாதி பள்ளிக்கூடத்தில் 75 வயது கடந்த பக்கீர்மோகன் நூற்றுக்கணக்கான மாணுக்கர்களில் ஒருவராய்க் கலந்துகொண்டார். எனினும் ஆசிரியர்கள் அவருக்கு அளவு கடந்த மரியாதை காட்டினர். அவர் சிறுவர்களுடன் கூடிவிளையாடினர்; பேச்சு ஒப்புவிக்கும் போட்டிகளில் கலந்துகொண்டார்; உடனமர்ந்து உணவுண்டார்; மிகுந்த மகிழ்ச்சியுடன் தாம் சாப்பிட்ட தட்டுக்களைக் கழுவினர்.

பூங்காச் சூழலினுல் கவரப்பட்டும் நாட்டுப்பற்றுப் பணிகளில் இளமைத்துடிப்புடன் ஆட்படுத்திக்கொண்டும் அவர் மூன்று நாள்கள் பள்ளிக்கூடத்தில் தங்கினர். ''உங்களுக்கெல்லாம் தெரி

யும் நான் அறியாதவனென்று, ஆங்கில மொழியின் நெடுங் கணக்கைப் பயில உங்கள் திருவடிகளில் நான் ஏன் அமரக்கூடாது?'' என்று ஒரு தடவை வேடிக்கையாகப் பள்ளியாசிரியர்களிடம் சொன்னார்.

எனினும் அவருடைய பிரிவுரை நாட்டுப் பற்றுள்ள மாபெரும் சமயத் தலைவருடையதைப் போன்றிருந்தது. அவர் பேசியதாவது: ''இங்கே நீங்கள் உண்மையிலேயே விடுதலை மரமொன்றை நட்டிருக் கிறீர்கள். இம்மரம் விரைவிலேயே பூத்துக்காய்த்துக் கனிகளைக் கொணர்ந்து தரும் என்று என் மனக்கண்முன் தோன்றுகிறது. நாட்டுப்பணியில் கோபபந்து நெடுங்கால அனுபவமுள்ள—மிகச் சிறந்த—தன்னலமற்ற தேசபக்தர். நம்மினம் உயிர்த்தெழத் தேவையான சீரிய திட்டங்களிலெல்லாம் அவர் உங்களெல்லோரை யும் ஈடுபடுத்தியுள்ளார். நம் நாடு விடுதலை பெறும்வரை நான் உயிருடனிருக்கமாட்டேன். ஆனால் நீங்கள் இவ்வுலகத்தைவிட்டு நீங்குமுன் விடுதலைக் கனிகளின் இன்பத்தை நுகர்வீர்கள் என்று நம்புகிறேன்.''

சாந்திவன முனிவர்

இன்னல்கள் பலவற்றைப் பொருட்படுத்தாது இயற்கையுட னும் சமூகத்துடனும் ஒன்றிய ரிஷியையொத்து வாழ்ந்தவர் பக்கீர் மோகன். அது அவருடைய இறுதியாண்டுகளின் உருவமாகும். பாலேசுவரைச் சேர்ந்த திருமதி பேலா கோஸ் வரைந்துள்ள விவரம் பின்வருமாறு: ''இது என்னுடைய குழந்தைப் பருவ நினைவு, எனக்கு ஒன்பது—பத்து வயதிருக்கும். பாலேசுவரிலுள்ள ஒரு கனவானுடைய வீட்டுக்கு என் தாயார் போகும்பொழுது நான் உடன் சென்றேன். தற்காலப் புதுமைகளின்றி வீடு எளிதாயிருந் தது. சுற்றிலும் தெரிந்திராத பல உவகையூட்டும் செடிகளும் மரங்களுமுள்ள தோட்டம் கண்டு நான் மகிழ்ந்தேன். தோட்டம் செவ்வனே அமைக்கப்பட்டிருந்தது. பல வண்ணமலர்களுடனும் கொடிகளுடனும் நானாவித மருந்துச் செடிகளும் கலையுணர்ச்சியைத் தூண்டும் செடிகளும் நிரம்பிய கவர்ச்சியுள்ள தோட்டம். அவ்விடம் கொள்ளை அழகு சொட்டும் கூடமாய்த் தோன்றியது. என்னுடைய பிள்ளைமனம் கொத்துக்கொத்தாய்ப் பூத்துக்குலுங்கும் பலநிற மலர்களால் ஈர்க்கப்பட்டபோதில் எங்களை நோக்கி வழக்கமாகக் கண்டிராத நெட்டை மனிதர் மெதுவாய் நடந்து கடைசியாக எங்கள் முன் நின்றார். மனிதவர்க்கம் என்ற புதரின் நடுவே மாபெரும் மரமொன்று அங்கிருப்பது போன்று நான் உணர்ந்தேன். அம்மனிதருடைய தமக்கே உரித்தான தனிச்சிறப்பு அற்புதமாய்ச் சூழ்ந்து நிலவிய இயற்கையுடன் இணைந்தது. உதய காலத்து நிலத்

தாய்ப்போலக் காலங்கடந்து நிற்கும் ஏக்கத்தின் தேக்கம் அவர் முகத்தில் எழுதியிருப்பது போன்ற தோற்றம். அவருடைய உரையாடலும் அவர் காட்டிய பரிவும் எங்களுக்குப் பெருமகிழ்ச்சியை அளித்தன. தோட்டத்தைச் சுற்றி எங்களை அழைத்துச் சென்று ஒவ்வொரு செடியின் வரலாறு, பெயர், இயற்கையாய் வளரும் இடம், அடைந்தவிதம், அதனுடைய மருத்துவ—பிற சிறப்புகளும் என்பன பற்றியெல்லாம் அவர் விளக்கினுர். தோட்டத்தைச் சுற்றிப்பார்த்த பிறகு நாங்கள் வீட்டின் ஒரு பக்கத்தில் வந்து உட்கார்ந்தோம். அவர் பேசிக்கொண்டேயிருந்தார். இவ்வளவு காலம் கழித்து அவர் பேசியதெல்லாம் எனக்கு நினைவில்லை. ஆனுல் ஆசிபெற அவருடைய பாதங்களைத் தொட்டபொழுது அவர் உரைத்த கடைசிச் சொற்கள் தெளிவாக நினைவிலிருக்கின்றன. ''சின்னஞ்சிறு தாயே! அன்புகூர்ந்து உன்னுடைய தாய்நாட்டையும் தாய் மொழியையும் அறிந்துகொள்ள முயல்வாயாக.'' நாங்கள் வீட்டுக்குத் திரும்பும் வழியில் என்னுடைய தாயாரிடமிருந்து அவர்தான் பக்கீர்மோகன் சேனுபதி என்று தெரிந்து கொண்டேன்.

பாலேசுவரின் சாந்திவன (சாந்திகானன்) முனிவர் 1918-ஆம் ஆண்டு ஜூன் மாதம் பதினுன்காம் நாள் காலமானுர். சீரழிந்து கிடந்தாலும் இன்று அமைதிக்காடு ஒரியர்கள் பயணம் மேற்கொள்ளும் திருத்தலமாகி விட்டது. தேசிய ஒருமைப்பாடு என்று இன்று தொண்டைகிழியக் கத்தும் இந்தியர்கள் சாந்திவனம் சென்று பார்த்துப் பயன்பெறலாம். இங்கிருக்கும் மண்டபத்தில்தான் பரந்த—மனிதாபிமானமுள்ள முனிவர் அமர்ந்து நாள்தோறும் தொழுதார். சுற்றியுள்ள எல்லாப் பக்கங்களிலும் உலகச் சமயங்கள் எல்லாவற்றின் திருமறைகளிலிருந்தும் பொருத்தமான வாசகங்கள் வரையப்பட்டிருந்தன. சமூகம் விரும்பாது கைவிட்ட—அரைகுறையாகப் படித்த தொழிலாளிச் சிறுவன் தொடங்கிய வாழ்க்கை நிறைவுபெற்றமைக்கு அவ்விடம் உறுதியான சான்று. உண்மையில், களங்கமில்லா மனித ஆற்றல்களின் குவியலே பக்கீர் மோகன் சேனுபதியின் வாழ்க்கை என்பதைத் தவிர வேறென்ன? தற்காலக் கல்வியில்லாது, இடைக்காலச் சூழ்நிலையில் அவர் காலத்து ஒரிசாவில் நோக்கத்திலும் எண்ணத்திலும் இம்மனிதர் மிக 'முற்பட்டவராய்' விளங்கினுர். வறுமையில் வளர்ந்து, பிழைத்து நிற்கக் கரடுமுரடான வழிகளில் நடந்து, நீண்ட கால இடைவெளிகளில் வேலையில்லாது இருந்த பக்கீர்மோகன் தம் பிற்கால வாழ்வில் மிகச்சிறந்த தர்ம சிந்தனையாளராய்—பரந்த மனப்பான்மையுள்ள மனிதராய்த் திகழ்ந்தார். பொருமை நெஞ்சும் கீழ்த்தரமான சின்னத்தனமும் நிலவிய வீட்டில் வளர்ந்தவராயினும் குறுகிய எண்ணத்துக்கு அப்பாற்பட்டு உயர்ந்தார்.

நாணயமற்ற நடத்தைகள் எல்லாப் பக்கங்களிலும் அவரைச் சுற்றி வளைத்தாலும் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்புக்களை நிறைவேற்றுவதில் உண்மையுடனும் மனச்சான்றுடனும் அவர் செயற்பட்டார். அரைப்படிப்பு—அரைப்பட்டினிக் குழந்தைத் தொழிலாளி பிற்காலத்தில் செழிப்புடையராய்ப்—புகழ்வாய்ந்தவராய் விளங்கினர்; வசதியுடன் வாழ்ந்தார்; கடினமாய் உழைத்துச் சம்பாதித்த ஏராளமான சொத்தையும் வேணுமளவு தோட்டங்கள் அமைந்த வீடுகளையும் விட்டுச் சென்றார். ஆனால் ஒரு காலத்து ஏழைக்குழந்தை பற்றிய வியப்பு என்னவென்றால் அவர் பள்ளிப்படிப்புப் பெற்ற காலம் ஒன்றரை ஆண்டுதான். எனினும் தம்முடைய மொழிக்கு ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்தார். அவ்வகையில் தம் மக்கள் நெஞ்சில் என்றென்றைக்கும் அவர் புதுமைப் பொலிவுடன் உறைகின்றார். ஹன்ஸ் ஆண்டெர்சனுடைய குரூர 'வாத்துக்குஞ்சு' வியத்தகு அழகிய அன்னமாய் மாறுவதையும் அல்லது கோரவடிவப் பொன்மேனி வண்ணத்துப்பூச்சி ஒளிமயமான முழு எழில் வண்ணத்துப்பூச்சியாக மாறுவதையும் போன்ற, மனிதனைப் பொறுத்த உண்மையான எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். இத்தகைய மந்திரமாற்றம் ஒரு காலத்தில் பாலேசுவர்த் துறைமுகப் பகுதியில் குழந்தைப் பருவத்தில் கூலியாக இருந்தவரிடம் நிகழ்ந்தது. அவரோ தம்முடைய முறை வந்தபோது தம்முடைய இனத்தின் மொழிக்கும் இலக்கியத்துக்கும் அவ்வினத்தின் விழிப்புக்கும் புத்துயிரும் புது உருவும் கொடுத்தார்.

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

## இந்த வரிசையில் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்கள்

லட்சுமி நாத பெஸ்பருவா (ஹேம் பருவா) *க. த. திருநாவுக்கரசு* | கபீர் (பிரபாகர் மாச்வே) *தி. வேங்கட கிருஷ்ணய்யங்கார்* | கேசவஸுதர் (பிரபாகர் மாச்வே) *இராம. கோபிநாதன்* | ஈசுவர் சந்திர வித்யாசாகர் (ஹிரண்மய் பாணர்ஜி) *இராம. கோபிநாதன்* | ராஜாராம் மோகன் ராய் (சௌமியேந்திரநாத தாகூர்) *க. த. திருநாவுக்கரசு* | பிரேம் சந்த் (பிரகாஷ் சந்திர குப்தா) *சரஸ்வதி ராமநாத்* | குமாரன் ஆசான் (கே. எம். ஜார்ஜ்) *கே. சி. சங்கரநாராயணன்* | தாருதத் (பத்மினி ஸென் குப்தா) *ஆ. சீனிவாசராகவன்* | வீரேசலிங்கம் (வி. ஆர். நார்லா) *நா. பார்த்தசாரதி* | ஸ்ரீ அரவிந்தர் (மனோஜ் தாஸ்) *பி. கோதண்டராமன்* | மீராபாய் (உஷா நில்சன்) *எஸ். கந்தசாமி 'துறைவன்'* | B. M. ஸ்ரீகண்டய்யா (A. N. மூர்த்திராவ்) *இரா.. மதிவாணன்* | சந்துமேனன் (டி. சி. சங்கரமேனன்) *கு. இராஜவேலு* | காஸி நஸ்ருல் இஸ்லாம் (கோபால் ஹால்டார்) *கே. பி. எஸ். ஹமீத்* | வள்ளத்தோள் (ஹிருதயகுமாரி) *மா. இளையபெருமாள்* | பசவேஸ்வரர் (H. திப்பேருத்ர சுவாமி) *T. K. நாகாம்பாள்* | பாணபட்டர் (கே. கிருஷ்ணமூர்த்தி) *பெ. திருஞான சம்பந்தன்* | பக்கிம் சந்திர சாட்டர்ஜி (சு. ச. ஸென் குப்தா) *அசோகமித்திரன்* | மகரிஷி தேவேந்திரநாத தாகூர் (நா. சௌதுரி) *கா. மீனாட்சிசுந்தரம்* | தாராசங்கர் பந்தோபாத்யாயார் (மஹாஸ்வேதா தேவி) *கு. இராஜவேலு* | நானாலால் (U. M. மணியார்) *நா. பார்த்தசாரதி* | ஜீவனானந்ததாஸ் (சி. தாஸ் குப்தா) *க. த. திருநாவுக்கரசு* | பாரதியார் *மூலமும் தமிழாக்கமும்* (பிரேமா நந்தகுமார்) | வேதம் வேங்கடராய சாஸ்திரிகள் (வேதம் வேங்கடராய சாஸ்திரி) *சி. செல்லப்பன்* | புத்ததேவ போஸ் (அலோகரஞ்சன் தாஸ் குப்தா) *த. வே. வீராசாமி* | மாணிக்கவாசகர் *மூலமும் தமிழாக்கமும்* (G. வன்மீகநாதன்) | ஜெயதேவர் (சுநீதிகுமார் சாட்டர்ஜி) *டி. எஸ். பார்த்தசாரதி* | மாணிக் பந்தோபாத்யாயர் (சரோஜ் மோகன் மித்ரா) *எஸ். கந்தசாமி 'துறைவன்'* | தமிழ்த் தாத்தா (கி. வா. ஜகந்நாதன்) கல்ஹணர் (சோம்நாத் தர்) *எஸ். கிருஷ்ணமூர்த்தி* | சரளாதாசர் (கிருஷ்ண சந்திர பாணிகிராகி) *தே. ஆண்டியப்பன்* | தத்தகவி (அனுராத போட்தார்) *இராம. கோபிநாதன்* | நர்மதாசங்கர் (குலாப்தாஸ் ப்ரோக்கர்) *ஆதவன் சுந்தரம்.*

*(அடைப்புக்குள் உள்ளது மூல ஆசிரியரின் பெயர்)*

---

சென்ற நூற்ருண்டின் அறுபதாம் ஆண்டுகளில் ஓரிசாவின் மூன்று மலரும் அறிஞர்கள் பாலேசுவரில் சந்தித்து வாழ்நாள் நண்பர் களாஞர்கள். ஒவ்வொருவரும் ஓரிய இலக்கியத்தில் புதிய பாணி யைப் புகுத்தினர். இவர்களில் ராதாநாத்ராயும் மதுசூதனராயும் சிறந்த ஆங்கிலக் கல்வி பெற்று வாழ்க்கையில் உரிய இடம் பெற்றனர். ஆனல் மும்மூர்த்திகளில் மூன்ருமவரான பக்கீர் மோகன் சேஞபதி *(1843–1918)* முதல் நிலைக் கல்விகூட முற்றிலும் பெருதவர். அவருக்கு வாழ்க்கை உயிர் வாழத்துடிக்கும் நெடிய போராட்டமாயிருந்தது.

ஆனல் துரதிருஷ்டவசமாக ஓரிய மொழியில் ஓரியர்களின் தற்காலத்தேசியம்—இலக்கியம் ஆகியவற்றின் தந்தையான அவ ரைப்பற்றிக் குறிப்பிடத்தக்க வரலாற்று நூல் ஏதும் இல்லை. காய்தல் உவத்தல் இன்றிக் காலஞ்சென்ற மாயாதர் மான்சின்ஹா தொகுத்த தனிப்பொருள் நூல் கூடுமானவரை ஓரிய மொழியில் அவரெழுதிய தன் வரலாற்றுச் செய்திகளிலிருந்து பக்கீர்மோக னுடைய இலக்கியம், மனிதாபிமானம் ஆகியவற்றை எழுதத் தூண்டுவதற்கு ஒரு முன்னேடி முயற்சியாகும்.

அட்டை அமைப்பு: சத்யஜித் ராய்

உருவ ஓவியம்: சியாமளா சென்

ரூ. 4/–